# பூஜ்ய ஸ்ரீஸ்ரீ ரவி சங்கர்

## அவர்களின் தமிழ்நாடு விஜயம்

The Art of Living



'ஆர்ட் ஆஃப் லிவிங்' எனப்படும் வாழும் கலை பயிற்சியையும், சுதர்சன க்ரியாவையும் உலகெங்கும் பரப்பிய

# பூஜ்ய ஸ்ரீஸ்ரீ ரவி சங்கர்

அவர்களின்
தெய்வீக அருளுரை மற்றும் சத்சங்கம்
நடைபெறும் இடங்கள் :

| தேதி | நகரம் | நேரம் | இடம் | தொலைபேசி |
|---|---|---|---|---|
| 19 டிசம்பர் ஞாயிறு | சென்னை | மாலை 6.30 | பச்சையப்பன் கல்லூரி மைதானம் | 98841 18090<br>98410 64326 |
| 20 டிசம்பர் திங்கள் | தஞ்சாவூர் | மாலை 6.30 | சையின்ட். பீட்டர்ஸ் மேல்நிலைப் பள்ளி மைதானம் | 9443119752 |
| 21 டிசம்பர் செவ்வாய் | ராமநாதபுரம் | மாலை 6.30 | இராஜா மேல்நிலைப் பள்ளி மைதானம் | (04567) 225655 |
| 22 டிசம்பர் புதன் | மதுரை | மாலை 6.30 | மதுரை கல்லூரி மைதானம் | 98421 62311 |
| 23 டிசம்பர் வியாழன் | திண்டுக்கல் | மாலை 6.30 | கோட்டை மாரியம்மன் திருக்கோயில் மைதானம் | 9443031469 |


## வியக்தி விகாஸ் கேந்த்ரா - தமிழ்நாடு

ஆத்ம ஞான நிலையம், 33, கலாஷேத்ரா சாலை, திருவான்மியூர், சென்னை-41.
✆ : 24913702 / 24466493
E-mail : agn@md4.vsnl.net.in <mail to : agn@md4.vsnl.net.in>
Website : www.artoflivingtn.org <http : //www.artoflivingtn.org>


# அனைவரும் வருக! குரு அருள் பெருக!



# காற்றினிலே..

* பட்டைத் தீட்டி
ஒளிரச் செய்த கணவர்
சதாசிவம்



* குடும்பத் தலைவி - மகள்கள் ராதா,
விஜயாவுடன்...

* சுந்தரமான இல்லறம்



* கல்கி நிறுவன ஸ்தாபகர் - அமரர் கல்கி
நூற்றாண்டில் திருமதி கல்கியுடன்...



அட்டை
வண்ணப்படம் :
**யோகா**



* இளமையில்...



* இசையரசி



* திரை நட்சத்திரம் (மீரா)



* சகுந்தலை திரைப்படத்தில்...




* மரணம் நெருங்குகிறது...

# செத்தும் கொடுத்தார்!

தமது அணி ஜெயிக்க வேண்டும். ஒவ்வொரு விளையாட்டு வீரனுமே உயிரைக் கொடுத்து விளையாடுவான். நிஜமாக, தன் அணியை ஜெயிக்க வைத்து விளையாட்டு மைதானத்திலேயே உயிரை விட்டு விட்டார், பிரேஸில் நாட்டு கால்பந்து வீரர் கிறிஸ்டியானோ ஜூனியர்.

அண்மையில் பெங்களூர் காண்டீரவா ஸ்டேடியத்தில் டெம்போ மற்றும் மோஹன்பகான் (கொல்கத்தா) அணிகளிடையே ஃபெடரேஷன் கப் கால்பந்துப் போட்டி' நடைபெற்றது.

போட்டி உற்சாகமாக, பரபரப்பாக நடைபெற்றுக் கொண்டிருந்தது.

தமது டெம்போ அணிக்காக முதல் கோலைப் போட்ட பிரேஸில் வீரர் கிறிஸ்டியானோ, இரண்டாவது கோலையும் போட்டார். மோஹன் பகான் அணி கோல்கீப்பர் சுப்ரதோ பால் ஓடி வர, இருவரும் மோதிக் கொண்டனர். வலியால் துடிதுடித்துக் கீழே விழுந்த கிறிஸ்டியானோ பின் எழுந்திருக்கவில்லை...

"உடனேயே மருத்துவ உதவி அளிக்கப்படவில்லை. எதிரேயே இருக்கும் மல்லய்யா ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லாமல், அரை மணி நேரப் பயணம் செய்து HOSMATக்கு எடுத்துச் சென்றதால்தான் கிறிஸ்டியானோ இறந்தார். கொண்டு சென்ற வேனிலும் வெண்டிலேட்டர் இல்லை. போதிய கருவிகள் இல்லை. இங்கேயே மைதானத்தில் டாக்டர்கள் இருந்திருக்க வேண்டும். வெறுமே ஃபிஸியோ தெரபிஸ்ட்தான் இருந்தார். நாங்கள் சும்மா விடுவதாயில்லை. கோல்கீப்பர் சுப்ரதோ பால், ஹாஸ்மாட், கர்நாடகா ஸ்டேட் ஃபுட்பால் அஸோசியேஷன் மேல் கண்டிப்பாக நடவடிக்கை எடுப்போம். போலீஸில் புகார் கொடுத்துள்ளோம்..." என்கிறது டெம்போ க்ளப்.

"ஹாஸ்மாட் நிறுவனம் மற்றும் முதன்மை டாக்டர் தாமஸ் சாண்டி, இதை முற்றிலுமாக மறுக்கிறார். ''எங்கள் மருத்துவமனையில் அவரை அழைத்து வந்தபோதே உயிர் இல்லை. "கார்டியாக் அரெஸ்ட்! மைதானத்திலேயே அவர் உயிர்

பிரிந்துவிட்டது" என்கிறார்.

கிறிஸ்டியானோவின் மரணத்தினால் பல விவாதங்கள், சண்டைகள்!

கிறிஸ்டியானோவின் இளம் மனைவி ஜூலியானா, கோவாவில் இந்த விளையாட்டை தொலைக்காட்சியில் பார்த்துக் கொண்டிருந்தாராம். கோல் போட்டு விட்டார் என்ற மகிழ்ச்சியில் இருக்கும்போதே, கணவரின் உயிரும் பிரிந்தது என்ற செய்தி கேட்டு உறைந்து போனாராம். அன்றிலிருந்து யாரிடமுமே பேசவில்லையாம்.



* செல்ல மகனின் உடையுடன் தாயார்

அந்நிய மண்ணில் வந்து, ஆசைக் கணவனைப் பிரிந்து விட்ட இளம் மனைவிக்கு யாரால் ஆறுதல் சொல்ல முடியும்?

பிரேஸில் நாட்டில் அவர் பெயரில் நினைவுக் கேடயம் வழங்கத் தீர்மானித்துள்ளார்கள். இங்கு கர்நாடக முதல்வர் தரம் சிங், இரண்டு லட்ச ரூ கிறிஸ்டியானோ குடும்பத்துக்கு நிதியுதவி அளித்துள்ளார். டெம்போ க்ளப் தமது அணிக்காக விளையாடி, போகிற போக்கில் வெற்றியையும் கொடுத்துவிட்டுப் போன அற்புத வீரனின் நினைவாக, அவர் அணிந்திருந்த நெ.10 எண் பொறித்த ஜெர்ஸியை இனி யாருமே பயன்படுத்தப் போவதில்லை என அறிவித்திருக்கிறது. இருபத்து இரண்டு லட்ச ரூபாய் கான்டிராக்ட் ஒப்பந்தம் செய்தபடி, கிறிஸ்டியானோவின் குடும்பத்துக்கு அந்தத் தொகையை அளிக்கவுள்ளது.

தம்முடைய அணி தன்னால் வெற்றி பெற்றது என்ற உண்மையை அறியாமலேயே போன கிறிஸ்டியானோ ஜூனியர், என்றென்றும் சீனியர்தான்!

**- லதா சேகர்**


# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி.ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
**ஒரு வருடம் : ரூ.330/-**
**ஆறு மாதம் : ரூ.165/-**
வெளிநாடு (விமானத்தபால்) :
**ஒரு வருடம் : 62 யுஎஸ். டாலர்**
**இலங்கை : ரூ.2000/-**

Bharathan Publications Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேஜைக்கு

“பொதுக்கூட்டம் நடத்த அனுமதி மறுப்பதும், கொடுப்பதும் நிர்வாகத்தின் அதிகார வரம்புக்கு உட்பட்டது. அந்த முடிவுகளில் அவசியம் ஏற்பட்டாலேயொழிய, தேவையின்றி நீதிமன்றங்கள் தலையிடக் கூடாது. நிர்வாக உத்தரவு குறித்த வழக்குகளில் நீதிமன்றங்கள் சுயக் கட்டுப்பாட்டை கடைப்பிடிக்க வேண்டும்" என்று உயர்நீதிமன்ற தலைமை நீதிபதி மார்கண்டே கட்ஜு தலைமையில் அமைந்த பெஞ்ச், சமீபத்தில் ஒரு தீர்ப்பைக் கூறியிருக்கிறது.

"தமிழ்நாட்டில் தலைமைச் செயலாளர் முதல் அடிமட்ட ஊழியர் வரை, ஆளும் கட்சி ஆதரவுப் போக்கைக் கடைப்பிடிக்கும் நிலையில் இத்தகைய தீர்ப்பு பேச்சுச் சுதந்திரத்துக்கும் கருத்துச் சுதந்திரத்துக்கும் வேட்டு வைப்பதாகவே அமையும்" என்று சொல்கிறார் உயர்நீதிமன்ற சீனியர் வழக்கறிஞரும், பல 'பொடா' வழக்குகளில் ஆஜரானவருமான ஜி. தேவதாஸ்.

விவகாரம் இதுதான். தந்தை பெரியார் திராவிடர் கழகத்தினர், மன்னார்குடியில் பொதுக்கூட்டம் நடத்த அனுமதி கேட்டனர். அனுமதி மறுக்கப்பட்டது. அதை எதிர்த்து உயர்நீதிமன்றத்தில் வழக்கு போடப்பட்டது. விசாரித்த நீதிபதி தினகரன் "அரசியல் சட்டம் வழங்கியுள்ள பேச்சுரிமையை முழுமையாக மறுக்க முடியாது என்று சொல்லி, கூட்டம் நடத்த அனுமதி கொடுத்ததுடன் கூடவே ஒரு நிபந்தனையும் போட்டார். அதாவது அந்தக் கூட்டத்தில் ஜயேந்திரர் மீதுள்ள வழக்கினைப் பற்றி ஆதரவாகவோ, அல்லது எதிர்ப்பாகவோ எதுவும் பேசக் கூடாது" என்ற நிபந்தனைதான் அது.

• ஜி. தேவதாஸ்



இதை எதிர்த்து அப்பீலுக்குப் போனபோதுதான் தலைமை நீதிபதி "பொதுக்கூட்டத்துக்கு அனுமதி கொடுத்தது சரிதான். ஆனால் இதைப் பேசலாம்; அதைப் பேசக் கூடாது என்று நிபந்தனை விதிப்பது சரியல்ல. ஒரு விஷயத்தைப் பற்றிப் பேசினால் பொது அமைதிக்கு பங்கம் ஏற்படும் என்ற முடிவை எடுக்கும் அதிகாரம், நிர்வாகத் துறையிடம்தான் உள்ளது. அந்த முடிவை நீதிமன்றங்கள் எடுக்கக் கூடாது" என்றும் சொன்னார்.

"தமிழ்நாட்டின் சூழலைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாமல், பொதுவாக ஒரு நல்ல நோக்கத்தில் வழங்கப்பட்ட தீர்ப்பாகத்தான் இதை எடுத்துக் கொள்ள வேண்டும். ஆனால் இதையே சாதகமாக எடுத்துக் கொண்டு அரசும், நிர்வாகமும் பேச்சு மற்றும் கருத்துச் சுதந்திரத்துக்கு வாய்ப்பூட்டு போடும் ஆபத்து இருக்கிறது" என்றார் தேவதாஸ்.

ஜனநாயக நாட்டின் அடிநாதமே ஒவ்வொருவருக்கும் உள்ள கருத்துரிமையைப் போற்றிப் பாதுகாப்பதும், வெளிப்படுத்துவதும் ஆகும். அத்தகைய கருத்துகளைச் சட்டத்துக்குட்பட்டு வெளியே பிறருக்குச் சொல்லுவதற்கும், பகிர்ந்து கொள்வதற்கும் அரசியல் சாசனப்படி நமக்கு உரிமை உண்டு. அரசாங்கம் சரியான பாதையில் செயல்பட, மக்களின் ஈடுபாடும் அக்கறையும் மிக, மிக அவசியம். வெளிப்படையான தடையில்லா விவாதம் அரசின் செயல்பாடுகளை ஊக்கப்படுத்தவோ, சரி செய்யவோ அல்லது மாற்றவோ அவசியம் தேவையானது.

ஜயேந்திரர் விவகாரத்தை மட்டும் பார்க்கா



# பேச்சுரிமைக்கு வேட்டு வைக்காதீர்!



மல், பொதுவான நோக்கில் இந்தத் தீர்ப்பை அணுக வேண்டும். பொது அமைதி என்று சொல்லி, ஒரு முக்கியமான விவகாரத்தில் விவாதம் அல்லது கருத்துப் பரிமாற்றம் நடைபெறாமல் தடுப்பது அல்லது கட்டுப்படுத்துவது ஜனநாயத்துக்கு உகந்தது ஆகாது. இன்று ஜயேந்திரர் வழக்கில் இப்படித் தீர்ப்பு சொன்ன உயர்நீதிமன்றம், நாளை வேறொரு முக்கிய விவகாரத்தில் இது போலவே சொன்னால் அப்புறம் இதற்கு முடிவே கிடையாது. இறுதியில் அடி வாங்குவது நாம் போராடிப் பெற்ற அடிப்படை உரிமைதான். சட்டம் - பொதுஒழுங்கு என்ற போர்வையில், அரசியல் நடவடிக்கைகளை விமர்சனங்களிலிருந்து மறைப்பது, ஜனநாயகத்துக்கு மிகவும் கேடாகவே முடியும்.

''இந்தச் சந்தர்ப்பத்தில் 'ஒரே ஒரு கிராமத்திலே' என்ற படத்தைப் பற்றிய வழக்கைச் சுட்டிக் காட்ட விரும்புகிறேன். 'இந்தப் படத்தை வெளியிட்டால் சட்டம் ஒழுங்கு பாதிக்கப்படும்' என்று சென்னை உயர்நீதிமன்றம் சொல்லி தடை போட்டது. உச்ச நீதிமன்றத்துக்கு பிரச்னை எடுத்துச் செல்லப்பட்டது. 'சட்டம் - அமைதி கெடும் என்ற பயமுறுத்தல்களுக்கு அடிபணிந்து பேச்சுரிமையை மறுக்கும் செயல்களில் இறங்கக் கூடாது. பேச்சுரிமையைப் பாதுகாப்பது அரசின் கடமை. அந்தப் பேச்சுரிமையின் விளைவால் உண்டாகும் சட்டம் ஒழுங்கு பிரச்னையை, சமாளிக்க முடியாது என்று ஓர் அரசு கூறனால், அது அந்த அரசின் கையாலாகாத்தனமே' என்று உச்சநீதிமன்றம் நெற்றியடியாகச் சொல்லிவிட்டது, நமது நாட்டில் ஊடகங்களும், அரசும், எல்லாக் கோணங்களிலும் ஒரு விஷயத்தை அணுகுவதில்லை. எல்லோருக்கும் ஒரு 'சார்பு' இருக்கிறது. இந்த நிலையில் சமூகத்தில் அந்தஸ்தும் கௌரவமும் உள்ள ஒருவரைப் பற்றிய வழக்கில், மக்கள் பல தகவல்களைத் தெரிந்து கொள்ள விரும்புகிறார்கள். அதற்கு பொதுக்கூட்டங்கள் சரியான ஊடகமாக இருக்கின்றன'' என்கிறார் தேவதாஸ்.

''அது சரி, ஜயேந்திரர் விவகாரத்தில் மீடியா சகட்டுமேனிக்கு விளையாடுகிறதே, நீதிமன்றத்தில் கொடுத்த வாக்குமூலங்களும், போலீஸில் சொன்ன தகவல்களும் பத்திரிகைகளில் வெளி வருகின்றனவே! வழக்கு விசாரணையில் இருக்கும்போது இது போல செய்திகள் வருவது சரிதானா? நீதிமன்றம் இதில் தலையிடாதா?''

''இந்த வழக்கில் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்த பின்னர்தான், யாரும் அது குறித்து பேசுவதோ விமர்சிப்பதோ கூடாது. அதுவரை பத்திரிகைகள் காட்டில் மழைதான். ஆனால் பாதிக்கப்படுபவர்கள் நீதிமன்றத்தில் இடையில் நிவாரணம் கேட்டு முயற்சி செய்யலாம்'' என்றும் சொல்கிறார் தேவதாஸ்.

''சட்டத்துக்கு முன்பு அனைவரும் சமம், என்று சொல்லும் தமிழக அரசு மூன்று மாணவிகள் எரிக்கப்பட்ட வழக்கில், உயர்நீதிமன்றம் சென்னை அரசு வழக்கறிஞரை நியமித்து வழக்கை விசாரிக்காமல், ஒரு வருடமாக தாமதம் செய்வது ஏன்? அ.இ.அ.தி.மு.கவினர் மீது குற்றம் சாட்டப்பட்டிருப்பதால்தானா?'' என்றும் கேட்கிறார் அவர்.

**- ப்ரியன்**

படம்: **ராஜன்**

# செல்ஃபோன்

சீனாவின் சார்ஸ்நோய், உலகையே ஓர் உலுக்கு உலுக்கிவிட்டு ஓய்ந்திருக்கிறது. ஆனால் சீனர்கள் உள்ளிட்ட சர்வதேச சமுதாயமும், இப்போது அலறத் தொடங்கியிருப்பது செல்ஃபோன் சார்ஸுக்கு! எதிர் உயிரி மருந்து கண்டு பிடிக்கப்பட்டால், சார்ஸ் நோயை அடியோடு ஒழித்து விட முடியும். ஆனால் செல்ஃபோன் சார்ஸ்? வாய்ப்பே இல்லை, காரணம் இது நோய்க் கிருமி அல்ல. மனித உடலின் திசுக்களை நேரடியாகத் தாக்கும் மின்காந்தக் கதிர்கள். ஆங்கிலத்தில் 'எலக்ட்ரோ மேக்னெட் ரேடியேஷன்' என்று அழைக்கப்படும் இந்த கதிர்வீச்சு, ரேடியோ டிரான்ஸ்மிட்டர் பொருத்தப்பட்ட அனைத்து மின்னணு சாதனங்களிலிருந்தும் வெளிப்படுகிறது. சாதனங்கள் இயங்கும் தருணத்தில் வெளிப்படும் கதிர்வீச்சின் அடர்த்தியை (இன்டென்சிட்டி அஃப் ரேடியேஷன்), சார்ஸ் (specific absorption rates - SARS) என்ற அளவு கோல் கொண்டு அளக்கிறார்கள்.


• டாக்டர் ஜெயராஜா

'செல்ஃபோன் வேலை செய்ய, அதில் உள்ள ஆன்டனாவானது, ரேடியோ மற்றும் மைக்ரோ அலைகள் மூலம் இயங்க வேண்டும். இந்த அலைகள் தான் செல்ஃபோனிலிருந்து (பயன்படுத்தாமல் ஆன்மோடில் இருக்கும் போதும்) தொடர்ச்சியாக மின்காந்தக் கதிர் வீச்சுகளை வெளியேற்றுகின்றன. அவை பயன்படுத்துபவர் உடல் முழுவதையும் தாக்குகின்றன. இந்தத் தாக்குதல் அடுத்த தலைமுறைக்கும் மரபணு பாதிப்பாக எடுத்துச் செல்லப் படுவதை ஆராய்ச்சி முடிவுகள் உறுதி செய்துள்ளன' என்று அலறி இருக்கிறது மலேசியாவின் முன்னணி நுகர்வோர் பத்திரிகையான 'பயனீட்டாளர் குரல்'.


• டாக்டர் சங்கர்


• டேவிட் கோவில் பிள்ளை

செல்ஃபோன்களை பயன்படுத்துவதால் புற்றுநோய், மூளை மற்றும் நரம்பு பிரச்னை தலைவலி, ஞாபகமறதி, தூக்கமின்மை, உயர் இரத்த அழுத்தம், இதய நோய் போன்றவை தோன்றுவதை தொடர் ஆராய்ச்சிகள் மூலம்




அமெரிக்க, ஐரோப்பிய விஞ்ஞானிகள் கண்டுபிடித்து கலவரத்துடன் எச்சரித்து வருகிறார்கள்.

உண்மையில் மின்காந்தக் கதிர்கள் மூளைச் செல்களை தாக்குமா? இதய நோய் நிபுணர் ஜெயராஜா என்ன சொல்கிறார்.

"செல்ஃபோனில் இருந்து வெளிப்படும் மின்காந்தக் கதிர்களின் பாதுகாப்பான அளவு மூளைச் செல்களை தாக்கி

அழிக்குமா என்று ஆராய்ச்சிகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. இதயத் துடிப்பைச் சீராக்க இதயத்தை ஒட்டி பேஸ் மேக்கர் கருவி பொருத்தப்பட்டவர்கள், செல்ஃபோனைப் பயன்படுத்தாமல் தவிர்த்து விடுவது நல்லது. பேஸ்மேக்கர் பொருத்தப்பட்ட பலர், செல்ஃபோனில் பேசிக்கொண்டிருக்கும்போது மயங்கி விழுந்து விடுகின்றனர். மருத்துவ சாதனங்களின் இயக்கத்தை, செல்ஃபோனிலிருந்து வெளிப்படும் மின்காந்தக் கதிர்கள் பாதிக்கின்றன. எனவே மருத்துவ மனைகளில் செல்ஃபோனை ஆஃப் செய்து வைத்து விடுவதே பொதுச் சேவை" என்றார்.

" Early dementia எனப்படும் இளவயது நினைவுச் சிதறல் நோய், நினைவாற்றல் குறைபாடு, தலை வலி, மன அழுத்தம் மற்றும் மூளை



# எமன்?

தொடர்பான புற்றுநோய்களுக்கு அதிகமாக செல்ஃபோன் பயன்படுத்துவது ஒரு காரணமாக இருக்கலாம் என அழுத்தமாக நம்பத் தொடங்கியிருக்கிறார்கள்.

அமெரிக்காவில் உள்ள இன்ஷூரன்ஸ் நிறுவனங்கள் செல்ஃபோன் தொடர்பான உடல் உபாதைகளுக்கு இன்ஷூரன்ஸ் தர மறுத்து விட்டன. 'செல்ஃபோன் கதிர்வீச்சால் நோய்கள் பெருகி வருவதைத்தானே இது காட்டுகிறது?' என்று அதிரடியாக செக் வைக்கின்றன சர்வதேச நுகர்வோர் அமைப்புகள். இங்கிலாந்தில் இயங்கி வரும் ஐஈஜிஎம்பி (IEGMP) என்ற அரசுசாரா அமைப்பு, ரேடியேஷன் பாதிப்பை உறுதிசெய்து செல்ஃபோன் பயன்படுத்துவதை முடிந்தவரை தவிர்த்து விடும்படி பொதுமக்களுக்கு அறிவுறுத்துகிறது. அரசாங்கமும் இப்போது விழித்துக்கொண்டு செல்ஃபோன் கதிர்வீச்சு குறித்த விளம்பரங்களைச் செய்ய ஆரம்பித்திருக்கிறது. அமெரிக்க அரசாங்கமோ, பதினாறு வயதுக்கு உட்பட்ட இளவயதினர் செல்ஃபோன் பயன்படுத்தத் தடைவிதித்திருக்கிறது.

"இந்த வயதிற்குட்பட்ட இளைஞர்கள், சிறார்களின் மண்டையோடுகள், மென்மையாக இருப்பதுதான் இந்தத் தடைக்குக் காரணம்'' என்கிறார் காது, மூக்கு, தொண்டை நிபுணரான சங்கர்.



• சதீஷ் பாபு

மறதியும் சேர்ந்து கொள்கிறது" என்கிறார்.

ஸ்வீடன் மருத்துவமனையில் நரம்பியல் நிபுணராகப் பணியாற்றி வரும் டாக்டர் லேப் செல்போர்ட் என்பவரது ஆய்வு முடிவுகள், பன்னாட்டு செல்ஃபோன் உற்பத்தி நிறுவனங்களைப் புலம்ப வைத்திருக்கின்றன. செல்போர்ட் 1999ல் தொடங்கிய ஆய்வு இது. செல்ஃபோனில் இருந்து வெளியாகும் மின்காந்தக் கதிர்வீச்சை, தினசரி இரண்டு மணி நேரம் எலிகளுக்குச் செலுத்தி வந்தார். ஆய்வின் முடிவில் எலிகளின் மூளைச் செல்களில் ஒரு பகுதி இறந்திருப்பதைக் கண்டு அதிர்ந்தார். முயல், குரங்கு என்று ஆராய்ச்சியைத் தொடர்ந்து அதே அதிர்ச்சிகர முடிவுகளை அறிவித்துள்ளார். இந்த ஆராய்ச்சியின் கூடுதல் அதிர்ச்சியாக, "மூளைக்குத் தகவல்கள் செல்வதை, செல்ஃபோன் கதிர்வீச்சுக்கள் தாமதப்படுத்துவதையும் கண்டறிந்துள்ளேன். இதைத் திறம்பட நிரூபிப்பேன்" என்று சவால் விடுகிறார் செல்போர்ட்.

"செல்ஃபோன் பயன்படுத்துவதால் ஏற்படும் நீண்ட கால பாதிப்பு தெரியவர, இன்னும் பல ஆண்டுகள் ஆகும் என்ற நிலையில், குறைந்த கால பாதிப்புகள் கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் முக்கியமானது விபத்துக்கள், தூக்கமின்மை, மூளையின் 'ரியாக்ஷன் டைம்' குறைந்து விடுதல், மூளையின் மந்தத் தன்மை போன்றவை. இன்று இளைஞர்கள், காதலர்கள் அதிக நேரம் செல்ஃபோனில் பேசுவதை வழக்கமாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள். செல்ஃபோன் பயன்படுத்தும் முறையில் மாற்றங்கள் அவசியம்" என்று சொல்லும் இவர், "செல்ஃபோன் உபயோகம் செவிப்பறையை பாதிப்பதில்லை என்றாலும், ஹியரிங் எய்டு, டிஃபெப்ரிலேட்டர் போன்ற கேட்கும் சாதனங்களை பாதிக்கிறது" என்றும் கூறுகிறார் டாக்டர் சங்கர்.

தினசரி அதிகபட்சமாக நானூற்று இருபது நிமிடங்கள் வரை செல்ஃபோனைப் பயன்படுத்துவதாகச் சொல்லும் (Higher user) திரை நட்சத்திரம் உமாரியாஸ்கான், "நீண்ட நேரம் செல்ஃபோன் பேசும்போது, காதும், சாதனமும் சூடாகி விடுகின்றன. பேசி முடித்ததும் அதிகக் களைப்பு, தலை சுற்றல் ஏற்படுகிறது. அடுத்தடுத்த நீண்ட கால்களை ஏற்க நேர்ந்தால், தலைவலியோடு ஞாபக

நவீன யுகத்தில் செல்ஃபோன்களுக்குப் பழகிவிட்ட நாம் என்ன செய்வது...?

"பாதுகாப்பான கதிர்வீச்சு அளவு கொண்ட செல்ஃபோன்களைத் தேர்ந்தெடுத்துப் பயன்படுத்துவதுதான் சரியான வழி" என்கிறார், இத்துறையில் நீண்ட ஆராய்ச்சியினை மேற்கொண்டிருக்கும் சென்னை ஐஐடியின் மின்பொறியியல் துறைப் பேராசிரியர் டேவிட் கோவில் பிள்ளை.

"அமெரிக்காவில் ஒரு எலெக்ட்ரானிக் பொருளை விற்பனை செய்யும் முன்பு, எஃப்சிசி (FCC) என்ற சுயேச்சை அமைப்பு, அதன் பாதுகாப்பு பற்றி ஆய்வு செய்து அறிவித்து வருகிறது. மனித உடலுக்குப் பாதுகாப்பான சார்ஸ் (SARS) அளவு என எஃப்.சி.சி. ஆய்வு செய்து நிர்ணயம் செய்திருப்பது, 1.6 (watts per kg) வாட்ஸ். செல்ஃபோன்களில் இருந்து வெளிவரும் மின்காந்தக் கதிர்கள் இதற்கு மேல் இருந்தால் உடல் ஆரோக்கியத்துக்கு ஆபத்து என்று சொல்லியிருக்கிறது"

என்கிறார் கோவில் பிள்ளை.

ஆனால் இந்தியா போன்ற வளரும் நாடுகளில் விற்கப்படும் செல்ஃபோன்களில் சார்ஸ் அளவு 2.1 வாட்ஸ் அளவிலிருந்து, 5 வாட்ஸ் வரை உள்ளது என்கிறார் முகம் காட்ட விரும்பாத, சென்னையில் செல்ஃபோன் மொத்த விற்பனையில் ஈடுபட்டிருக்கும் மின்னணுப் பொறியாளர்.

''இந்தியாவில் செல்ஃபோன்கள் கறுப்புச் சந்தை மூலம்தான் அதிகம் விற்கப்படுகின்றன. இத்தகைய கிரே மார்கெட் செல்ஃபோன்கள், சீனா மற்றும் கொரியாவில் குடிசைத் தொழில் போல வீடுகளில் தயாரிக்கப்பட்டு, இந்தியச் சந்தைக்கு முறைகேடாகவும், கடத்தியும் கொண்டு வரப்படுகின்றன.

இவற்றில் பாதுகாப்பான சார்ஸ் அளவோ, தரக்கட்டுப்பாடோ எதிர்பார்க்க முடியாது. காட் உலக வர்த்தக ஒப்பந்தத்தால் 2005 ஆண்டு முதல் கோட்டா முறை ரத்து செய்யப்படுவதால், இத்தகைய ஆபத்தான செல்ஃபோன்கள் இந்தியச் சந்தையில் நேரடியாகவே குவிக்கப்படும். தவிர முறையாக நாட்டுக்குள் வரும் பிரபல பன்னாட்டு பிராண்டுகள் பலவற்றிலும், பாதுகாப்பான சார்ஸ் அளவு என்பது கண் துடைப்புதான்'' என்று ஒரே போடாகப் போடுகிறார் இவர்.

இதை அடியோடு மறுக்கிறார் சென்னையில் செல்ஃபோன் விற்பனையில் முன்னணியில் இருந்து வரும் யூனிவர்செல் நிறுவனத்தின் நிர்வாக இயக்குனரான சதிஷ்பாபு.

''ஒரு பன்னாட்டு நிறுவனம், தயாரிப்புகளின் சார்ஸ் அளவுக்கான சான்றிதழை மற்றொரு செல் தயாரிப்பு நிறுவனத்திடமிருந்துதான் பெற முடியும். தற்போது நோகியா, சாம்சங், மோட்டோ ரோலா, சோனி எரிக்சன் போன்ற பிரபல செல்ஃபோன்களில் 1.6வாட்ஸ்க்கும் குறைவான சார்ஸ் அளவு கொண்ட செல்ஃபோன்கள் வந்துவிட்டன'' என்கிறார். ஆனால் செல்ஃபோன் டிசைன், அதில் உள்ள வசதிகள் அதிகரிக்க அதிகரிக்க, வேலைப்பளு காரணமாக சார்ஸ் அளவும் அதிகரிக்கும் என்பதுதான் உண்மை. இன்று மெகா பிக்ஸல் கேமரா ஃபோன், வீடியோ ஃபோன், மல்டி மீடியா, ஜாவா, எப்எம் ரேடியோ ஃபோன் என்று வசதிகள் பெருகி விட்டன. இந்த வகை 3G ஃபோன்கள் அதிக வேலை பளு கொண்டவை மட்டுமல்ல, ஆபத்தானவை என்பதிலும் எந்த சந்தேகமும் இல்லை'' என்கிறார் மற்றொரு செல்ஃபோன் நிபுணர்.

மொத்தத்தில் செல்ஃபோன் வாங்கும் போது, அது பாதுகாப்பான சார்ஸ் அளவுக்கு உட்பட்ட தயாரிப்பா என்பதைப் பார்த்து வாங்க வேண்டும். செல்ஃபோன் பயன்படுத்தும் முறையை பாதுகாப்பானதாக மாற்றிக் கொள்வதன் மூலம், மின்காந்தக் கதிர்வீச்சிலிருந்து நம்மைப் பாதுகாத்துக் கொள்ள முடியும். ஹெண்ட்ஸ்ஃப்ரீ காதுக் கருவியை பயன்படுத்திப் பேசுகிறபோது செல்ஃபோனை மேஜை மீதோ, தூரமாகவோ வைத்துப் பேசலாம். ஸ்பீக்கர் ஃபோன்களைப் பயன்படுத்த லாம். நீண்ட நேரம் பேசும் காதலர்கள் காதில் வைத்துப் பேசுவதை அறவே தவிர்த்து விடுவதே நல்லது!

**- ஆர்.சி.ஜெயந்தன்**

படங்கள் : **டிஜி சண்முகம், ஸ்ரீஹரி**



''இந்த வாரம் உங்க பத்திரிகை படு சூப்பர்...!''

''எதை வச்சி சொல்றீங்க? கதைய வெச்சா? கட்டுரைய வெச்சா?''

''அதெல்லாமில்லே; நீங்க இலவசமா குடுத்த சாம்பார்பொடி ரசப்பொடிய வெச்சித்தான்...''

- தேவந்தி துரைராஜ்



# அருள்வாக்கு

**சொ**ந்த வாழ்க்கையில் சிக்கனமாக இருந்தால்தான் பிறத்தியாருக்கு உதவியாக திரவிய ஸகாயம் செய்ய முடியும். அநாவசியங்களையெல்லாம் அத்யாவசியமாக்கிக் கொண்டு, மேல் நாடுகளைப் பார்த்து material comfort, luxury என்று மேலே மேலே போய்க் கொண்டிருந்தால், தனக்கும் ஒரு நாளும் த்ருப்தி இராது; பிறத்தியாருக்கும் தான தர்மம் பண்ண முடியாது. மோட்டார் ஸைகிளுக்கு மேலே கார் வேணும். அப்புறம் அந்தக் காரிலும் இன்னம் பெரிசாக வேணும். அதற்கப்புறம் அதையே ஏர்-கண்டிஷன் பண்ணணும் என்கிறது போல், ஸிமென்ட் மொஸெய்க் ஆகணும், மொஸெய்க் மார்பிள் ஆகணும் என்கிறது போல, ஒன்றுக்கு மேல் ஒன்று ஸௌகர்யத்தைத் தேடிக் கொண்டேயிருந்தால், எப்போது பார்த்தாலும் அதிருப்தி என்ற பெரிய அஸௌகர்யத்திலேயேதான் ஒருத்தன் இருந்து கொண்டிருப்பான். அது மட்டுமில்லை. எத்தனை ஸம்பாத்யம் வந்தாலும் போதவும் போதாது. அதனால்தான் இன்றைக்கு அத்தனை பணக்காரர்களும் கடனாளிகளாக - கடன் என்கிறதையே 'ஓவர்-ட்ராஃப்ட்' என்று கௌரவமான பெயரில் சொல்லிக் கொண்டு இருக்கிறார்கள். இவனே கடனாளியாக இருந்தால், மற்றவர்களுக்கு எங்கேயிருந்து தர்மம் பண்ணுவது!

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

# நிறை வாழ்வு

கணவரை இழந்த துயரத்தில் ஆழ்ந்து கிடந்த எம்.எஸ். சுப்புலட்சுமியை (1997) சகோதர வாஞ்சையுடன் தேற்றினார் செம்மங்குடி சீனிவாச அய்யர் :

"நீ தேசத்தின் சொத்து; அழாதே! கலங்காதே..." என்று தைரியமூட்டினார்.

இன்று அச் சொத்தை இழந்து நிற்கும் இந்திய தேசமே கலங்கி நிற்கிறது.

எம்.எஸ். தமது இசைப் பதிவுகளில் தொடர்ந்து வாழ்வார் என்பதில் நாம் நமது துயரை மறக்க வேண்டும். காலம் உள்ள வரையிலும் அவர் கீதங்கள் ஒலித்துக் கொண்டிருக்கும் என்பதில் யாருக்குச் சந்தேகம் இருக்க முடியும்?

அவ்வாறு தொடர்ந்து ஒலிக்கும் எம்.எஸ்.ஸின் இசை, கர்நாடக சங்கீதத்தின் உன்னத காலகட்டத்துக்குச் சான்றாக விளங்கும்; பாரத பண்பாட்டின் பெருமையைப் பறைசாற்றும்; பெண்மையின் நளினத்துக்கும் வலிமைக்கும் ஒருங்கே சாட்சி சொல்லும்; தன்னலமற்ற எளிமையை அடையாளப்படுத்தும்; அழகுணர்ச்சி என்பதற்கு இலக்கணமாக அமையும்; தேசிய உணர்வின் சின்னமாகத் திகழும்... ஒப்புயர்வற்ற மனிதநேயத்தின் வெளிப்பாடாக நிலைகொண்டு இன்னும் கோடிக்கணக்கான மனிதர்களின் வாழ்வையும் சிந்தனையையும் மனங்களையும் வளப்படுத்திக்கொண்டே இருக்கும்.

இசையுலகை மட்டுமின்றி, இந்தியாவையே உயர்நிலைக்கு அழைத்துச் சென்றார் எம்.எஸ். அதனால்தான் 'பாரத ரத்னா' அவருக்கு வழங்கப்பட்டது. அவரது பணிகளும் பெருமைகளும் நாடறிந்தவை என்றாலும் அவற்றைப் பட்டியலிட்டு நினைவுபடுத்திக் கொள்ள வேண்டிய நேரம் இது.

நமது பாரம்பரிய இசையின் மிக உயர்ந்த இலக்கணங்களையும் இலக்குகளையும் கட்டிக் காத்தவர் எம்.எஸ். சங்கீதம் என்பது அவருக்கு வெறும் மேடைக் கலை அல்ல... ஆத்ம சமர்ப்பணம்...

கச்சேரி என்பது ரசிகர்களை மகிழ்விக்கக் கிடைத்த வாய்ப்பு அல்ல; அவர்களை உயர்த்தவும் வலிமை பெறச் செய்யவும் தரப்பட்ட பொறுப்பு...

ஊதியம் என்பது சொந்த சௌகரியங்களைப் பெருக்கிக்கொள்ளக் கிட்டும் செல்வம் அல்ல... அன்பர் பணிக்கு அர்ப்பணமாக வேண்டிய ஸ்ரீதனம்.

இந்த பிரமிப்பூட்டும் கொள்கைகளை ஒருசேர ஏற்கக் கூடியவர்கள் அரிது. எம்.எஸ். இவற்றை ஒரு பூ மலர்கிற சௌலப்பியத்துடன் வாழ்க்கை முறையாகவே ஆக்கிக்





கல்கி



2004 டிசம்பர் 19
தாரண மார்கழி 4
மலர் : 63
இதழ் : 21




கொண்டார். இந்த குணச் சிறப்பினாலே காந்திஜி, ராஜாஜி, நேருஜி போன்ற தேசத் தலைவர்களின் நன்மதிப்பையும் காஞ்சி முனிவர், சத்ய சாயிபாபா போன்ற ஞானிகளின் பூரண ஆசிகளையும் பெற்றார்.

"'ஹரி தும ஹரோ' பாடலை வேறு நபர் பாடக் கேட்பதைக் காட்டிலும் எம்.எஸ். வெறுமே உச்சரிக்கக் கேட்கவே விரும்புகிறேன்..." என்றார் மகாத்மா.

ஐ.நா. சபை இசை நிகழ்ச்சிக்கென, உலக அமைதி வேண்டுகிற ஒரு பிரத்யேகப் பாடலை எம்.எஸ். பாடுவதற்காக இயற்றித் தந்தார் காஞ்சி முனிவர்.

இப்படிப்பட்ட பெருமைகள் மட்டுமின்றி, விருதுகளும் பட்டங்களும் வந்து குவிந்தாலும் அத்தனையையும் தாங்கிக்கொண்டு, காட்சிக்கு எளியவராய், சுலபத்தில் அணுகக் கூடியவராய், அடக்கமே உருவானவராய் வாழ்ந்தார்.

எம்.எஸ். என்கிற பாரத ரத்தினத்தைப் பட்டை தீட்டி ஒளிரச் செய்தவர் அவருடைய கணவர் சதாசிவம்தான் என்பதையும் இந்த நேரத்தில் நாடு நினைவு கூர்கிறது. நண்பனாய், ஆசானாய், வழிகாட்டியாய் விளங்கிய கணவர், தமது தேர்ந்த ரசனையாலும், பரந்த நோக்கினாலும் கூர்ந்த அறிவினாலும் எம்.எஸ். என்கிற பாடகியை, எம்.எஸ். என்கிற சகாப்தமாக உயரச் செய்தவர். அவரோடு இணைந்து இறைவனடியில் நிரந்தர இடம் பெற்றுவிட்டார் எம்.எஸ். 11.12.04 அன்று இரவு 11.30 மணி அளவில் எம்.எஸ். காலமானது உலகெங்கிலும் உள்ள அவருடைய அன்பர்களுக்கும் ரசிகர்களுக்கும் பெருந்துயரை ஏற்படுத்தியுள்ளது. எங்கள் கல்கி நிறுவனத்தாருக்கோ, ஸ்தாபகரையும் வழிகாட்டியையும் இழந்த கூடுதல் துயரம்




பெருக்கெடுக்கிறது.

அமரர் கல்கி, கல்கி சதாசிவம், எம்.எஸ். சுப்புலட்சுமி, ராஜாஜி, டி.கே.சி. என்ற ஐவரும் ஐந்து கோண நட்சத்திரமாக இருந்து இந்நிறுவனத்தின் ஆதாரப் பண்புகளை வகுத்தனர். அவர்கள் வழியிலே, தேச நலன் காப்பதிலும் நேர்மையைப் போற்றுவதிலும், அழகுணர்ச்சியைப் பேணுவதிலும், கலைப் பணிகளை வளர்ப்பதிலும், பொதுத் தொண்டுகளை ஊக்குவிப்பதிலும் தன்னலங் கருதாது ஈடுபடுவோம். லட்சக்கணக்கான வாசகர்களை உள்ளடக்கிய கல்கி குடும்பத்தைச் சேர்ந்த நாம், இன்று அதற்கான உறுதிமொழியை எடுத்துக் கொள்வோம். ○





• 'கோமதிநாயகம்' படத்தில் பொன்வண்ணன், ஹரிப்ரியா

# ஜாலிதான் ஜோலியே!

'அண்ணாமலை' டி.வி. தொடருக்குக் கிடைத்துள்ள மெகா வரவேற்பால், ராதிகா அளவுக்கே பூரித்துப் போயிருக்கும். இன்னொருவர்... பொன் வண்ணன். ஸ்பீக்கர்பூ புகழ் வள்ளியம்மையின் ஜகஜ்ஜால கணவன் கோமதிநாயகமாக நடித்துள்ள இவர், அதே பெயரில் சினிமாவும் எடுத்து எடுத்துவிட்டார்.

''கோமதிநாயகம் கேரக்டருக்குக் கிடைத்துள்ள புகழை அப்படியே கேப்சர் செய்திருக்கிறேன். ஆனால் 'அண்ணாமலை' கோமதி நாயகத்துக்கும், சினிமா கோமதி நாயகத்துக்கும் துளிக்கூட சம்பந்தமில்லை. அதே சமயம் இந்தக் காரெக்ட்டும் சிரிக்க வைக்கும்.'' என்று ஆரம்பித்தார் பொன்வண்ணன்.

கோமதிநாயகம் பக்கா கிராமத்து ஆசாமி. ரொம்ப அப்பாவி. அவருடைய ஒரே உலகமகா லட்சியம், பெரிய ஹீரோ ஆகணும்கிறதுதான். ஆனால் அதற்கு பெரிய முட்டுக் கட்டையாக இருக்கும் மாமா மணிவண்ணன், கோமதிநாயகத்துக்குக் கல்யாணம் பண்ணி வைக்கத் துடிக்கிறார். கதாநாயகி ஹரிப்ரியாவின் காதலுக்குத் தூது போகும் கோமதிநாயகம், ஒரு சிக்கலில் மாட்டிக் கொண்டு, அவரையே கல்யாணமும் செய்து கொண்டு விட... படம் முழுக்க அம்புலி மாமா கதை பாணியில் ஃபேன்ஸியாகப் போகிறதாம்.

"சத்யராஜின் மேனரிஸம், பாக்யராஜ் பாணி திரைக்கதை, பொன் வண்ணனின் நக்கல் தமாஷ் மூன்றும் சேர்ந்த ஒரு ஜாலி கதை. குறிப்பா பெண்களுக்குப் பிடிக்கணும். இல்லைன்னா, என் மனைவி, குழந்தைகளே படம் பார்க்க மாட்டாங்களே!" என்றார் பொன் வண்ணன்.

'கோமதி நாயகம்' பட வேலைகளில் பொன்வண்ணன் ரொம்ப பிஸி என்பதால், 'கோலங்கள்' லூஸ் மாப்பிள்ளை கேரெக்டருக்கும் சின்ன கேப் விழுந்து விட்டதாம். படம் வெளியானதும் லூஸ் மாப்பிள்ளை தலை காட்டுவார்.

- சரண்

# எலியால் ஏறிய டி.ஆர்.பி

'விட்டர் விட்டராய் பெண்களை கண்ணீர் வடிக்கச் செய்யும் டி.ஆர்.பி. ரேட்டிங் பெட்ரோல் விலை போல் 'சர்'ரென்று உயரவில்லையே' என்று நொந்து நூலாகிப்போன சின்னத்திரை இயக்குனர்கள் மத்தியில், 'ஹா ஹா ஹா'என சிரித்துக் கொண்டிருக்கிறார் நடிகையும், இயக்குனருமான ஸ்ரீப்ரியா.

இன்றைய டீ.வி சீரியல் தயாரிப்பாளர்களுக்கும் இயக்குனர்களுக்கும் இரண்டு இலக்குகள். ஒன்று பெண்கள், இன்னொன்று குட்டீஸ்.

இதில் ஸ்ரீப்ரியா தயாரித்து இயக்கும் 'விக்ரமாதித்தியா'வில் எலிகளை வைத்து கார்ட்டூன் பண்ணியிருப்பது, அதன் டி.ஆர்.பி.யையே எகிற வைத்திருக்கிறது.

"ஒரு பரிசோதனை முயற்சியில்தான் கார்ட்டூன் கேரக்டர்களைப் புகுத்தினோம். அதற்கு சிங்கம், புலிகள் போன்று கொடிய மிருகங்களில்லாமல், நம் வீட்டுப் பரணில் கடமுடா சத்தத்தை எழுப்பக் கூடிய நம் எலியாரையே அனிமேட்டட் காரக்டராக மாற்றிவிட்டோம்" என்னும் ஸ்ரீப்ரியா அதன் பின் 'விக்கிரமாதித்தியா'வுக்குக் கிடைத்த தனி வரவேற்பைக் கண்டு அசந்து போயிருக்கிறார்.

"முதலில் சில வாரங்கள் எலியைக் கண்ணில் காண்பித்து நிறுத்தி விட்டோம். ஆனால் இதற்கு பலத்த எதிர்ப்பு. "எலியைக் கூட்டி வாங்க'ன்னு வாண்டுகளெல்லாம் நச்சரிக்க ஆரம்பிச்சுட்டாங்க. இப்போ தொடர்ந்து கண்டு, லல்லிங்கிற பெயர்ல, எலியை சீரியலுக்கு நடுவுல ஆறு நிமிஷம் ஓட விடறோம். சமீபகாலமா எங்க சீரியலின் டி.ஆர்.பி. ரேட்டிங் உச்சத்திலும், ஆரோக்கியமாகவும் இருப்பதற்குக் காரணம் எலிதான்" என சிரிக்கிறார்.

கண்டுவுக்கு பரணி என்கிற வாண்டும், லல்லிக்கு இந்த சீரியலில் நடிக்கும் தேவிப்ரியாவும் அசத்தலாக டப்பிங் கொடுத்து, தங்கள் குரலிலேயே எலியின் 'க்ரீச்' ஒலிகளோடு வசனம் பேசுவது, எலியே முன் வந்து பாராட்டக் கூடிய விஷயம்."

"ஸ்ரீப்ரியா மேடம் ஷூட்டிங் டைம்ல எலியின் டயலாக்குகளை அதேபோல் பேசிக் காண்பிப்பார்கள். இதில் எனக்கும் ஆர்வம் வரவே, லல்லிக்கு நான் டப்பிங் கொடுத்திட்டிருக்கேன். எலியின் வால், மூக்கு மாதிரியே ஷார்ப்பா பேசினாத்தான், கரெக்டா அதுக்கு செட்டாகும்" எனும் தேவிப்பிரியாவை அவரது நண்பர்கள் "சரி, சரி எலி மாதிரி பேசாதே, நார்மலாப் பேசு" என்று ஓட்டுகிறார்களாம்.

இதைத் தொடர்ந்து மற்ற டீ.வி. சீரியல்களிலும், கார்ட்டூன் கேரக்டர்களைப் புகுத்தும் முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றனவாம்!

- செந்தில்






ஆ.பெ.ஜெ. அப்துல் கலாம், ஆ. சிவதாணு பிள்ளை



'**சு**யச் சார்புள்ள வலிமையான தேசமாக இந்தியா மாறி, தேவைப்பட்டால் எந்த ஒரு தேசத்துக்கும் எதிராகப் பொருளாதாரத் தடை விதிக்கும் வலிமை பெறும்போது, இந்தியாவின் கொண்டாட்ட கீதத்தை நான் இசைப்பேன். அந்த நிலையை எட்ட பாடுபடுவேன்' என்பது எங்கோ அட்லாண்டாவில் இருக்கும் இந்திய இளைஞனின் எழுச்சி கீதம். இளைய தலைமுறையை

# உதயமாகிறது வலிமை படைத்த பாரதம்!

எதிர்கால இந்தியாவைப் பற்றி சிந்திக்க வைப்பதில், அப்துல் கலாம் பெற்றுள்ள வெற்றியின் அடையாளம் இது.

தொலைத் தொடர்பு, சிஸ்டம் இஞ்சினீரிங், ஏவுகணைகள் போன்ற தொழில் நுட்பங்களை நமக்கு வழங்க முடியாது என்று நிராகரித்த வளர்ந்த நாடுகள், இன்று தொழில் நுட்பத் தேவைக்காக இந்தியர்களை அழைக்கும் நிலை உருவாகியிருக்கிறது. எல்லாத் துறைகளிலும் இந்த முன்னேற்றத்தைக் காணப் பாடுபட்டால், 2020ல் வலிமையான வல்லரசாக இந்தியா உருவாவது நிச்சயம். அதற்கான தெளிவான தொலை நோக்குத் திட்டங்களையும், செயல்படுத்தும் வழிகளையும், இளைய தலைமுறையின் பங்கு என்ன என்பதையும் ஒவ்வொரு துறையாக விவரிக்கும் நூல்.

அறிவாற்றல் நிறைந்த நிபுணர் குழுவின் ஆலோசனைகளையும், ஆழ்ந்த சிந்தனையில் எழும் கருத்துகளையும் படிக்கப் படிக்க, அந்த அட்லாண்டா இளைஞனின் கொண்டாட்டப் பாடல் இசைக்கப்படும் நாள் அதிக தூரத்தில் இல்லை என்ற நம்பிக்கை ஏற்படுகிறது.

**கண்ணதாசன் பதிப்பகம்,**
**23, கண்ணதாசன் சாலை,**
**தி.நகர், சென்னை - 600 017,**
**விலை ரூ.100/-**

**- விஷ்வக்**

# ஆன்மீக உலகில் ஓர் அற்புதம்!

ஆன்ம சக்தியை அழித்து, அறிவின் திறனை குறைத்து, மனவலிமையை தகர்த்து, நிம்மதியைக் குலைத்து, வலிவை பாழாக்கி, ஆரோக்யத்தைக் குறைத்து, குடும்பத்தில் குழப்பம், தொழிலில் நஷ்டம், உத்தியோகத்தில் பிரச்சனை, கல்வியில் தோல்வி, காதலில் வீழ்ச்சி போன்ற காரியங்களை பில்லி, சூன்யம், ஏவல் இவற்றால் தீமை உண்டாகின்றன.

விண் மட்டும் விஞ்ஞானம் வளர்ந்த போதும், இவைகளுக்குத் தீர்வு அருள் மறையில் மாத்திரமுண்டு. இந்தக் குறைகளை நீக்கி எல்லாத் துறையிலும் வெற்றி பெறச் செய்கிறார் மாபெரும் தவச்சீலர் மறையகம் பாபா. உடனே அணுக வேண்டிய முகவரி



அருள்

## மறையகம்

1 B, மகாலட்சுமி அப்பார்ட்மெண்ட், நெ. 3, அப்துல் ரசாக் தெரு, நூர்ஜஹான் தியேட்டர் எதிரில்(தற்போது ராஜ் தியேட்டர் என்று பெயர் மாற்றப்பட்டுள்ளது), சைதாப்பேட்டை,
சென்னை – 600 015.

☎போன் : 2435 1190, 2433 2047. செல்போன் : 3100 5716

குறிப்பு : வெளியூர், வெளிநாடுகளில் வசிப்பவர்கள் தங்கள் பிரச்சினை தீர்க்க தங்கள் பெயர், தங்கள் தாயார் பெயருடன் தங்கள் பிரச்சினைகளை எழுதி, ரூ. 10 (அ) அதற்கான அஞ்சல் தலையுடன் அனுப்பி வைத்து ஆலோசனை பெறவும்.

# பஞ்ச துவாரகா யாத்ரா

Somnath



21.1.2005

Dwaraka



## GUJARAT TOURISM

GUJARAT TOURISM

*(A Govt. of Gujarat Undertaking)*

Tourism Complex, Wallajah Road, Chennai - 600 002.

Tel No. 25366613 Res : 24794159 E-mail : gujarattourism@vsnl.net

**14 நாட்கள் கொண்ட *புனித யாத்திரையில் பார்க்கும் இடங்கள் :*** - தாகோர், துவாரகா, பெய்ட் துவாரகா, கங்கரோலி, நாத் துவாரகா (அனைத்து துவாரகை), சோம்நாத் ஜோதிர்லிங்கம், உதய்ப்பூர், புஷ்கர், மவுண்ட் அபு, அம்பாஜி மற்றும் அகமதாபாத்.

**கட்டணம்** : நபர் ஒருவருக்கு ரூ.9,200/- (சென்னை - பரோடா, அகமதாபாத் - சென்னை நவஜீவன் எக்ஸ்பிரஸ் ரயில் மூலம் இரண்டாம் வகுப்பு தூங்கும் வசதியுடன், சொகுசு பேருந்து, டிலக்ஸ் டபுள் ரூம் (இரண்டு நபருக்கு), தென்னிந்திய சைவ உணவு, கைடு சர்வீஸ், நுழைவு கட்டணம் ஆகியவை இதில் அடங்கும்.

**சென்னையிலிருந்து புறப்படும் நாட்கள்** : 21.1.05, 4.2.05, 7.3.05

இதர விவரங்களுக்கு Deputy Manager (Marketing) -ஐ மேலே குறிப்பிட்டுள்ள முகவரியில் தொடர்பு கொள்ளவும்.

Amar Tours, Salem : Ph.2416647 or Cell : 9842713222 ★ Sree Sudha Travels, Bangalore : Ph.26529289, 94481 19290 ★ Siva Gowri Travels, Tirupur : 5325800, 9443380150 ★ Travel Times, Chennai : Ph. 28461579, 31150567, 28461213



**த**ற்போது நாம் பயன்படுத்தி வரும் மரபு சார்ந்த எரிபொருள்களான பெட்ரோல், டீசல், எரிவாயு, நிலக்கரி எல்லாம் இன்னும் ஐம்பது முதல் நூறு ஆண்டுகளுக்குத்தான் வரும். இந்த எச்சரிக்கை ஒருபுறம் இருக்கட்டும். இவற்றை உபயோகிப்பதால் கார்பன் டை ஆக்ஸைடு, சல்பர் டை ஆக்ஸைடு மற்றும் மீத்தேன் போன்ற நச்சு வாயுக்கள், பூமியின் காற்று மண்டலத்தை அடைந்து மாசுபடுத்துகின்றன. இதன் காரணமாக பூமியின் வெப்ப நிலை மிகவும் உயர்ந்து வருகிறது. இதை 'பூமி வெப்ப அதிகரிப்பு' என்பார்கள். இது இன்னொரு எச்சரிக்கை.

ஆனால், சூரியனிடமிருந்து கிடைக்கும் ஆற்றல் சுத்தமானது; நீண்ட காலம் கிடைக்கக் கூடியது. நம் நாட்டில் கிடைக்கும் சூரிய வெப்ப ஆற்றல் சுமார் 4 மில்லியன் மெகாவாட். அது 660 மில்லியன் டன் நிலக்கரிக்குச் சமமானது. இதைப் பயன்படுத்தினால் பெட்ரோலியம் - நிலக்கரி போல சுற்றுச் சூழலைப் பாதிக்காது.

சூரிய மின்கலம் எனும் கருவி, சூரிய ஒளியை மின் ஆற்றலாக மாற்றுகிறது.



• காய்கனி காய வைக்கப்படுகிறது • டாக்.

சூரிய ஒளியைக் கொண்டு நீரைச் சூடாக்கலாம்; சமையலே செய்யலாம்! அது மட்டுமல்ல, காற்றைச் சூடாக்கி, வெப்பக் காற்றை, உணவுப் பொருள்கள் பதப்படுத்தும் தொழிற்சாலைகளில் பயன்படுத்தலாம் என்று தெரியுமா?

"**இ**து மிக எளிய முறை" என்கிறார் மதுரை பிளான்டர்ஸ் எனர்ஜி நெட்வொர்க் செயலர் டாக்டர் சி. பழனியப்பன்.

"சூரிய ஒளி, ஒரு கறுப்பு வர்ணம் பூசப்பட்ட உலோகத்தின் மீது படும்போது அதை வெப்ப மூட்டுகிறது. அந்தத் தகட்டின் மீது படும் காற்று சூடாகி, வெப்பக் காற்றாகிறது. தகட்டின் கீழே வெப்பம் வெளியேறாமல் இருக்கத் தடுத்து நிறுத்தி விடுவோம். சிறிது இடைவெளி விட்டு, உறுதியான கண்ணாடி மூடியைப் பொருத்துவோம். கண்ணாடித் தகட்டுக்கும் உலோகத் தகட்டுக்கும் இடையே காற்றைச் செலுத்தும்போது, அது வெப்பக் காற்றாக வெளியேறுகிறது. இதை உந்துவிசைக் காற்றாடி மூலம், தேவைப்படும் இடத்துக்கு உலோகக் குழாய் வழியாக அனுப்பி,

• சி. பழனியப்பன்







# சூரியனுக்கு மாறிடுங்க!

பொருள்களை உலர வைக்கலாம்.''

பிளான்டர்ஸ் எனர்ஜி நெட்வொர்க் என்பது, தோட்ட விவசாயிகளின் ஆற்றல் அமைப்பு. இந்த அமைப்பு உருவாகத் தூண்டுதலாக இருந்தவர் டாக்டர் எம்.எஸ். சுவாமிநாதன். தவிர 1989ல், மதுரை காமராசர் பல்கலைக் கழகத் துணை வேந்தராக இருந்தவரும் இதை உருவாக்க மிகுந்த உதவி செய்திருக்கிறார்,

இந்த அமைப்பு எரிபொருள் ஆற்றல் சிக்கனம் பற்றி, தொழிலகங்களில் நிர்வாகிகளுக்குப் பயிற்சி அளிக்கிறது. விவசாயிகளுக்கும் விஞ்ஞானிகளுக்கும் இடையே பல கருத்தரங்கங்கள் நடத்தி வருகிறது. இதுவரை, 6400 சதுர மீட்டர் பரப்புள்ள சூரிய ஆற்றல் மூலம், வெப்பக் காற்று உருவாக்கும் முறையை, தேயிலைத் தொழிற்சாலைகளிலும், மீன், காப்பிக் கொட்டை, பழம், காய்கறிகள், உப்பு, பருப்பு ஆலைகள், மசாலா தொழிற்சாலைகள், பதப்படுத்தும் தொழிற்சாலைகளிலும், வாசனை மசாலா தொழிற்சாலைகளிலும் நிறுவியுள்ளது. எதிர்காலத்தில் சாயத் தொழில், மருந்து, மூலிகைத் தயாரிப்பிலும் பயன்படுத்தலாம்.

இந்தப் புதுத் தொழில் நுட்பம் காரணமாக, 1240 டன் மர எரிபொருள் மிச்சமாகி இருக்கிறது. 3000 டன் நச்சு வாயு காற்று மண்டலத்தில் கலப்பது தவிர்க்கப்பட்டிருக்கிறது. சுமார் 20 - 30 சதவிகித டீசல், மரம், கரி போன்ற எரிபொருள் வகை சேமிக்கப்பட்டிருக்கின்றன. கடந்த மூன்று ஆண்டுகளாக, சூரிய வெப்பச் சாதனங்களைப்



• குன்னூர் பார்க்ஸைட் தேயிலைத் தொழிற்சாலையில் ஸோலார் ஏர் ஹீட்டிங் முறை

பற்றி எடுத்த ஒரு கணிப்பின்படி, இதற்காக நாம் செய்யும் மூலதன முதலீடு, மூன்று அல்லது நான்கு ஆண்டுகளில் திரும்பக் கிடைத்துவிடும்.

மத்திய - மாநில அரசுகள் தேய்மானச் சலுகையாக, எண்பது சதவிகிதம் அனுமதிக்கின்றன. இந்தத் தொழில் நுட்பத்தை மேற்கொள்ளும் தொழிலகங்களுக்குக் குறைந்த வட்டியில் கடனும் வழங்குகிறோம். (மத்திய அரசு இதுவரை வழங்கி வந்த சூரிய வெப்பக்காற்று ஆற்றல் தொழில்நுட்ப முதலீட்டிற்கு அளித்து வந்த 25 - 30 சதவிகித மானியத்தை நிறுத்திவிட்டது. இதை மீண்டும் தர வேண்டும்.)

நலிந்த, வசதியற்ற மீனவக் குடும்பங்களுக்கு உதவும் பொருட்டு, இந்தத் தொழில்நுட்பத்தைப் பயன்டுத்தி, விசாகப்பட்டினத்துக்கு அருகே உள்ள கிராமம் ஒன்றில் சமுதாய உலர் தொழிலகம் அமைத்திருக்கிறது மேற்படி விவசாயிகளின் ஆற்றல் அமைப்பு. இதனால் மீனவர்கள் அறிவியல் முறைப்படி சுத்தமான சூழ்நிலையில் மீனை உலர்த்த முடிகிறது. மீனவர்களுக்கு வேலை வாய்ப்பும் கிட்டுகிறது.

"தேயிலை பதப்படுத்தும் தொழிலகங்களில் 20-35% எரிபொருள் சேமிப்பை அடைந்திருக்கிறோம். வீணாகும் பழங்கள், காய்கறிகள் இவற்றைப் பாதுகாக்க, 570 ச.மீ. பரப்புள்ள சூரியக் கூரைகள், மூன்று தொழிற்சாலைகளில் சிறப்பாக இயங்கி வருகின்றன.

"தமிழகம் மற்றும் கேரளாவில் பிரபலமாக உள்ள சக்தி மசாலா, ஈஸ்டர்ன் மசாலா தொழிலகங்களில், வற்றல், மல்லி இவற்றை உலர்த்துவதற்கு 1540 ச.மீ. பரப்புள்ள சூரியக் கூரைகள் பயன்பட்டு வருகின்றன. துவரை, பருப்பு மில்களிலும் சூரியக் கூரைகள் வேயப்பட்டு, எரிபொருள் சேமிப்பு செய்யப்படுகிறது. 'யுனிடோ' அமைப்பின் சென்னைக் கிளை வாயிலாக, தோல் பதனிடும் தொழிற்சாலையிலும் சூரியக் கூரை இயங்கி வருகிறது" என்கிறார் டாக்டர் பழனியப்பன்.

"இன்று மிக அளவு சூரிய ஆற்றலைப் பயன்படுத்தும் ஜெர்மனியோடு ஒப்பிட்டால், இந்தியாவில் சூரிய ஆற்றல் ஒன்பது மாதங்களுக்கு மேல் கிடைக்கிறது. ஆனால் ஜெர்மனியில் நான்கு மாதங்களுக்குத்தான் கிடைக்கிறது.

எனவே இந்தியாவில் இந்தத் தொழில் நுட்பத்துக்குச் சிறந்த வாய்ப்பு இருக்கிறது! pen01@sify.comல் மேலும் விவரங்கள் அறியலாம்.

"எதிர்காலச் சந்ததியினருக்கு சுகாதாரமான சுற்றுச் சூழலை விட்டுச் செல்ல வேண்டியது நம் கடமை. சூரிய அடுப்பு, சூரிய வெப்ப நீர் உற்பத்தி செய்யும் கலன்கள், சூரிய மின்னாற்றல் உற்பத்தி செய்யும் கலன்கள், காற்று ஆற்றல் போன்றவற்றை சிறுகச் சிறுகப் பயன்படுத்த மக்கள் முன் வர வேண்டும். இந்தத் தொழில்நுட்பத்தை நிறுவ, ஆகும் மூலதனச் செலவு சிறிது அதிகம் என்றாலும், அதை நிர்வாகிக்க ஆகும் செலவு மிகக் குறைவுதான். எல்லா வளங்களும் தீர்ந்த பிறகு தவிப்பதை விட, இப்போதே சூரியனுக்கு மாறுங்க" என்கிறார் டாக்டர் சி. பழனியப்பன்.

**- சாருகேசி**




## நியூஸுக்கே நியூஸ்!

**'யூனிலிங்க் விஷன்' என்ற விளம்பர நிறுவனம் ஆரம்பித்திருக்கிறார் சன் டீ.வி சண்முகம்.**

## வட்டமேஜை

✉ 'சந்திரமுகி' படத்தைப் பற்றிய கேள்விகளுக்கு மிகத் தெளிவான பதில்களை அளித்துள்ளார் பி.வாசு. அவரது பேட்டி பலரது சந்தேகங்களை நீக்கியதோடு, படத்துக்கு அருமையானதொரு முன்னுரை எழுதியது.
லால்குடி, எம். ராஜேந்திரன்

# கல்வெட்டு வரிகள்!




✉ 'ஐஸ்வர்யா - தனுஷ்' கல்யாண ஆல்ப படங்களைப் பார்த்து குளு குளுவென பரவசமடைந்தேன்.
மதுரை - 16, பி. ராஜசேகரன்

✉ திருமண ஆல்பத்தைவிட கமெண்ட்ஸ் 'கலகல' என சிரிக்க வைத்தது. குறிப்பாக 'பூ சுத்தியிருக்கேன்' படித்து சிரிப்பை அடக்க முடியவில்லை.
சிதம்பரம் - 2, ஸ்ரீவித்யா காளிதாஸ்

✉ 'மைக்ரோவேவ் - மாமி' ... பிடி கொழுக்கட்டை செய்ய சொல்லிக் கொடுத்து, பழசை மறக்கலைன்னு சொல்லாம சொல்லிப் புட்டாங்க...!
சென்னை - 33, மயிலை. கோபி

✉ 'சாமியார்களுக்குத் தடை விதித்தாலென்ன?' கேள்விக்கு மிகச் சரியான பதிலை, சாதுரியமாக அளித்த தராசுவுக்கு கூடை ரோஜா பரிசளிக்கலாம்.
அயன்புரம், த. சத்தியநாராயணன்

✉ தமிழுக்கு அரிய சேவை செய்த 'தமிழ் தாத்தா' உவேசா வீட்டின் நிலையைப் படித்தபோது கண்கள் குளமாயின.
மேலகிருஷ்ணன்புதூர், ஆர்.கே. லிங்கேசன்

✉ 'குற்றம் ருசுவாகும்முன், ஒருவரை எவ்வாறு குற்றவாளி என்று முத்திரை குத்த முடியாதோ, அவ்வாறே நிரபராதி என்றும் அறிவிக்கலாகாது' என்ற வரிகள் காலத்தை வெல்லும் கல்வெட்டுக்குச் சமமானது.
லோயர் அணைக்கட்டு, பி. இராஜேந்திரன்

✉ 'ஜெ vs ஜெ' - பக்கங்களில் கடைசி வரிகள் சரியான பஞ்ச் டயலாக்கா இருந்ததைப் பாராட்டியே ஆகணும்.
வியாசர்பாடி, சிம்மவாஹினி

✉ விசாரணை விரைவாக நடைபெற்று உண்மை நிலவரம் மக்களுக்கு தெரியப் படுத்தப் படுவதே, வீண் விமர்சனங்களைத் தவிர்க்கும் என்பதை விளக்கிய தலையங்கம் அருமை!
பொன்மலை, ஆர். பிரகாஷ்

✉ மகேஸ்வரனின் 'உயிர்க்கிளி' உருக வைத்தது.
கருமத்தம்பட்டி, அ. இராஜப்பன்

✉ 'சமீபத்தில் வாங்கிய அடி?' - குறும்பான உங்கள் கேள்விக்கு '2400 சதுர அடின்னு' பதில் சொல்லி, நோஸ் கட் பண்ணிட்டாங்களே கவிஞர் தேன்மொழி!
சென்னை - 41, அய்யாறு வாசுதேவன்



“சென்னை கீழ்பாக்கம் மனநல மருத்துவமனை வளாகத்துக்குள்ளேயே எங்களின் மெல்லிசை நிகழ்ச்சி ஒன்றுக்கு ஏற்பாடு செய்திருந்தார் டாக்டர் மாத்ருபூதம். நான் முதலில் கொஞ்சம் தயங்கினாலும், நிகழ்ச்சியை நடத்த ஒப்புக் கொண்டேன். ஆனால் நிகழ்ச்சியின் போது ஒவ்வொரு பாட்டும் பாடி முடிக்கப்பட்டவுடன் அபாரமான கைத்தட்டல். ஒவ்வொருவர் முகத்திலும் சந்தோஷம். இனம் புரியாத மகிழ்ச்சியில் அத்தனை கலைஞர்களையும் கைகளைப் பிடித்து, தலையை, முகத்தைத் தொட்டு, தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்தியபோது, நாங்கள் அனைவரும் நெகிழ்ந்து போனோம்” என்று கூறும் ஏ.வி.ரமணனின் மியூஸியானோ மெல்லிசைக் குழுவுக்கு வயது முப்பத்தியொன்று. இன்று கூட சென்னை நகர வி.ஐ.பி.கள் தங்கள் வீட்டுத் திருமண ரிசப்ஷன் என்றால், “கூப்பிடு ரமணனை” என்கிறார்கள். இதுவரை ஏழாயிரத்து சொச்சம் தடவைகள் மைக்பிடித்து மேடை ஏறிவிட்டார்.

***“அது என்ன மியூஸியானோ என்று உங்கள் குழுவுக்குப் பெயரிட்டிருக்கிறீர்கள்?”***

“அப்போது, படித்தவர்கள், தொழில் ரீதியில் பாடகர்களாக இல்லாதவர்கள் மேடை ஏறிப் பாடத் தயங்கிய காலம். நான் பாடத் தெரிந்த, இசைக் கருவிகள் வாசிக்கத் தெரிந்த, படித்த நண்பர்கள் சிலரைச் சேர்த்துக் கொண்டு, ஒரு மெல்லிசைக் குழுவை ஆரம்பித்தேன். அப்போது எங்கள் குழு உறுப்பினர்களின் சராசரி வயது இருபத்தி ஐந்துதான். இதுவரை யாரும் வைக்காத, அவ்வளவு ஏன், டிக்ஷனரியிலேயே இல்லாத பெயராக நமது மெல்லிசைக் குழுவுக்கு வைக்க வேண்டும் என்று தீவிரமாய் யோசித்து, ஒரு இத்தாலிய வார்த்தையிலிருந்து உருவான ‘மியூஸியானோ’ என்ற பெயரை வைத்தோம்.

***“மியூசியானோ ஆரம்பித்த பிறகுதான் உமாவுடன் உங்கள் திருமணம் நடந்ததா?”***

# “எம்.ஜி.ஆர். மன்னிப்புக்

“நான் இசைக்குழு ஆரம்பிக்கும் எண்ணத்துடன், பாடகர்களைத் தேடிக் கொண்டிருந்தபோது, பிரசிடென்சி கல்லூரியில் எம்.ஏ.ஆங்கில இலக்கியம் படித்து முடித்த உமா வெங்கட்ராமன் என்பவரைப் பற்றி, ‘நல்ல குரல் வளம் கொண்ட பெண்’ என்று ஓர் உறவினர் மூலம் கேள்விப்பட்டேன். அவரைச் சந்தித்து பேசி, என் இசைக் குழுவில் சேர்த்துக் கொண்டேன். இசைக்குழுவில் இணைந்த அவர், பின் வாழ்க்கையிலும் என்னோடு இணைந்தார்.”





***"முப்பத்தெட்டு வருட மியூசி யானா அனுபவத்தில் மறக்க முடியாதது...?"***

''பாலமுரளி, ஜேசுதாஸ் எல்லாம் எவ்வளவு பெரிய ஜீனியஸ்கள்! அவர்கள் என் நிகழ்ச்சிக்கு வந்து இரண்டு மணி நேரம் உட்கார்ந்து கேட்டுவிட்டுப் பாராட்டி இருக்கிறார்கள். எம்.ஜி.ஆர். எப்போது வந்தாலும், ஒரு மணி நேரமாவது இருந்து பாட்டுகளை ரசித்துவிட்டுத்தான் போவார். ஒரு தடவை சீக்கிரமே புறப்பட்டுப் போக வேண்டியிருந்தபோது, மறுநாள், 'வேறு முக்கிய வேலை இருந்ததால், சீக்கிரம் புறப்பட்டு விட்டேன். மன்னித்துக் கொள்ளுங்கள்' என்று ஒரு கடிதம் அனுப்பி வியப்பூட்டினார்.

# கேட்டார்!"

## —ஏ.வி.ரமணன்

எழுபதுகளின் தொடக்கத்தில், சென்னையில் இந்திப் பாடல்கள் பாடும் ஒரே இசைக் குழு எங்களுடையதுதான். எனவே, சென்னையில் எந்த வட இந்தியத் திருமணம் என்றாலும், எங்களைப் பாடக் கூப்பிட்டு விடுவார்கள். முழுக்க முழுக்க இந்திப் பாடல்கள் பாடுவோம். ஆட்டமும் பாட்டமுமாக, திருமணமே களைகட்டி விடும். வட இந்தியத் திருமணங்களில் மட்டும் இரண்டாயிரம் முறை நிகழ்ச்சிகளை அளித்திருக்கிறேன். எங்கள் குழுவில் பத்து மொழிகளில் பாட்டுகள் பாடுவோம். ஏழு மொழிகளில் எனக்குப் பாடத் தெரியும்.

இன்னொரு சுவாரஸ்யம் சொல்லட்டுமா? பல குடும்பத்தின் இரண்டு தலைமுறை திருமண ரிசப்ஷன்களில் நான் பாடி இருக்கிறேன்."

***"சிறந்த பாடகர்களாக இருந்தும், உங்களுக்கும் உங்கள் மனைவிக்கும் சினிமாவில் பின்னணி பாட வாய்ப்புகள் அதிகம் தரப்படவில்லையே! ஏன்?"***

"நாங்களாக போய் வாய்ப்புக் கேட்டது இல்லை. அழைத்தால் ஏற்றுக் கொள்வோம். நீங்கள் குறிப்பிடும் குறை எங்களுக்கும் உண்டு.



உச்சரிப்பு சுத்தம், நல்ல குரல் வளம் இருந்தும், தமிழ்த் திரை உலகம் எங்களை நன்கு பயன்படுத்திக் கொள்ளவில்லை என்ற வருத்தம் இருக்கிறது. என்னை விடுங்கள். உமாவின் குரல் மிகவும் அற்புதமானது. அவளுக்குக் கூட பெரிய அளவில் வாய்ப்புகள் தரப்படவில்லை என்பதுதான் எனக்கு ரொம்ப வருத்தம்."

***அடுத்த திட்டம் என்ன?***

"சினிமாப் பாட்டுகளையே பாடிப் பாடி போரடித்துவிட்டது. அதற்கு குட் பை சொல்லி விட்டு, பக்திப் பாடல்களும், நானே இசையமைத்த பாடல்களையும் மட்டும் இனி பாடப்போகிறேன்."

**- எஸ். சந்திரமௌலி**

● தமிழ்ப்படத் தயாரிப்பாளர்களால் மிகவும் சிலாகித்துப் பேசப்பட்ட 'தமிழ்த் திரை தொலைக்காட்சி' துவங்குவதில் தாமதம் ஏற்பட என்ன காரணம்? "தொலைக்காட்சி துவங்க அனுமதி கிடைத்துவிட்டது. ஆனால் செயற் கைக் கோள் தொடர்புக்கு வி.எஸ்.என்.எல்லுடன் ஒப்பந்தம் போட வேண்டும். நாங்கள் தயாராக இருந்தும் அந்த மத்திய அரசு நிறுவனம் ரப்பராக இழுக்கிறது" என்றார் தயாரிப்பாளர் ஒருவர். இந்த தொலைக்காட்சியைத் துவங்கி னால் புதுப்பட கிளிப்பிங் மற்றும் பாடல் காட்சிகள், 'மற்ற' தொலைக் காட்சிகளுக்குக் கொஞ்சம் தாமத மாகத்தான் கிடைக்கும். இது அவர் களுக்கு பாதிப்பை உண்டாக்கும். எனவேதான் 'எங்கேயோ சதி நடக்கிறது' என்கிறார்கள் தயாரிப்பா ளர்கள். இந்த தொலைக்காட்சியில் நாற்பது சதவிகித பங்குகளை வாங்கியிருக்கிறாராம், புதிய நீதிக் கட்சித் தலைவர்.

● சங்கரராமன் கொலை வழக் கில் சிக்கியுள்ள காண்ட்ராக்டர் ரவி சுப்பிரமணியம் சம்பந்தமாக, பழைய வழக்குகளையும் தோண்டுகிறது போலீஸ். தி.நகர் ராமேஸ்வரம் சாலையில் இவரது அடுக்குமாடிக் குடியிருப்பை ஒட்டி இருந்த அரசு ஓய்விலிருந்த விக்னேஷ் ராஜா தாக்கப் பட்டிருக்கிறார். போலீஸ் புகார்

● கரையுமா கல்?



# தடுமாறும் 'தமிழ்த்திரை' தொலைக் காட்சி!

நிலத்தை அபகரித்து, அதற்கு அடுத்து இருந்த பக்கத்து அடுக்குமாடி நிலத் தையும் 2002ல் வளைக்கப் பார்த் தாராம் ரவி. ஆனால் பக்கத்து அடுக்கு மாடிக் குடியிருப்பு செயலாளரும் பத்திரிகையாளருமான விக்னேஷ் ராஜா இதைக் கடுமையாக எதிர்த் திருக்கிறார். எதிர்த்ததைத் தொடர்ந்து, பைபாஸ் சர்ஜரி செய்து கொண்டு கொடுக்க முயன்ற விக்னேஷ் ராஜா வுக்கு ஷாக்! தங்களை விக்னேஷ் ராஜா தாக்க முயன்றதாக சிலர் அங்கே ஏற் கெனவே புகார் கொடுத்திருந்தனர்! "அந்தச் சூழலில் ஆளும் கட்சி, எதிர் கட்சி, போலீஸ்' என்று சகல தரப்பினரும் என்னைத் தாக்கிய கூலிப்படைக்கு ஆதரவாக இருந்ததுதான் எனக்கு ஷாக்" என்கிறார் விக்னேஷ் ராஜா.



• விசாரணை விவகாரம்!



• க்ரீன் சிக்னல்!



• ''மகா பெரியவர் மட்டும்தான்...''

● 'தமிழன்' என்ற பத்திரிகையை நடத்தும் உரிமை முரசொலி நிறுவனத்திடம் இருக்கிறது. ஆனால் 'தமிழன்' என்ற தொலைக்காட்சியை பா.ம.க ஆதரவுடன் நடத்துவது கலைகோட்டு தயன் என்பவர். ''ஆனால் இந்த 'தமிழன்' தொலைக்காட்சிக்கு ஏக தொந்தரவு கொடுக்கிறார்களாம். குறிப்பாகச் சமீபத்தில் இவர்களது செயற்கைக் கோள் வசதித் தொடர்பை மூன்று நாட்களுக்கு வி.எஸ்.என்.எல் வெட்டி விட்டதாம். கேட்டால் 'பாக்கியைக் கட்டுங்கள்' என்று கழுத்தைப் பிடிக்கிறார்களாம். 'ஏதோ ஒரு வகையில்' தமிழனை காலி செய்யப் பார்க்கிறார்கள்' என்று புலம்புகிறார்கள் தொலைக்காட்சி நிர்வாகிகள்.

● சங்கரராமன் கொலை வழக்கு விசாரணையில், ஹார்லிக்ஸ் சியாமளா என்ற பெயர் அடிபட்டதல்லவா? சியாமளாவின் உண்மைப் பெயர் சரஸ்வதி. சேத்துப்பட்டு பள்ளி ஒன்றில் ஆசிரியை இவர்.

● சமீபத்தில் ஜெ. தில்லி சென்று வந்தாரல்லவா? பாஸிடிவ்வாக சிக்னல் கிடைத்துவிட்டதாம். ''பிப்ரவரியில் மூன்று மாநிலத் தேர்தல்களும் முடியட்டும். தேசிய அரசியல் நீரோடை சற்றுத் தெளிவாகும். அப்போது மீண்டும் பேசலாம்'' என்று தகவல் சொல்லப்படுகிறதாம். அந்த அணுகுமுறை வெற்றியடைந்தால் உடனே தேர்தல்தான்'' என்று உற்சாகமாகச் சொல்கிறது அ.இ.அ.தி.மு.க வட்டாரம்.

● ''எல்லாத் தலைவர்களும் தங்கள் இளைய தலைமுறையை களத்தில் இறக்கிவிட்ட நிலையில், எங்கள் பொதுச் செயலாளரும் தமது மகனை களத்தில் இறக்கி விட வேண்டுமென்று வலியுறுத்தப் போகிறோம்'' என்கிறார்கள் ம.தி.மு.க புள்ளிகள். ஆனால், பொதுச்செயலாளரின் மகனோ, ''அந்த சாக்கடை வேண்டவே வேண்டாம்'' என்று ஒதுங்கி விடுகிறாராம். கரைப்பார் கரைத்தால் கல்லும் கரையாதோ!

● ''எங்கள் குருநாதர் முரளிதர ஸ்வாமிகள் கடந்த ஆறு மாத காலமாக உடல் நலமில்லாமல் இருக்கிறார். இதனால் எங்கள் சத்சங்க நடவடிக்கைகள் முற்றிலும் பாதிக்கப்பட்டிருக்கின்றன. ஆதரவு பெருகி வரும் நேரத்தில் இப்படியெல்லாம் ஆகிவிட்டதே'' என்று புலம்புகிறார்கள் சுவாமிஜியின் சிஷ்யர்கள். ''சங்கரமடம் என்றால் மகா பெரியவர் வரை மட்டும் தான்'' என்று சொல்வாராம் சுவாமிகள்.

- கௌசி

# பொன்னாடை

அப்பாவுக்கு நினைவுநாள். வடை, பாயசம் செய்து கதர்வேட்டி, துண்டு வைத்து படைத்தோம்.

சாப்பிட்டு முடித்து, படைத்த வெற்றிலைப் பாக்கைப் போட்டுக் கொண்டு, புதுவேட்டியைக் கட்டிக் கொண்டேன். மேல்துண்டை நான் பயன்படுத்துவதில்லை என்பதால் "என்ன செய்யலாம்?" என்றபோதுதான் மனைவி உமா சொன்னாள், "நம்மகிட்ட வேலை செய்யற குண்டுரான் பெரியவருக்கு அதைக் குடுத்துடுங்க. இப்ப சாப்பிட வரச் சொல்லியிருக்கேன். அவருக்குக் கொடுத்தா அப்பாவோட ஆத்மாவும் சந்தோஷப்படும், நம்ம வயல்ல கள்ளம் கபடமின்றி உழைச்ச மனுஷன்..." உமா சொல்லிக் கொண்டிருக்கும்போதே கந்தசாமி அண்ணன் உள்ளே வந்தார். வரவேற்றோம்.

"முக்கிய சமாசாரம் சொல்ல மறந்துட்டேன். இன்னைக்குச் சாயந்திரம் நம்ம ஊர் காலனிக்கு வேட்பாளர் வர்றாராம் நன்றி தெரிவிக்க. அவருக்கு நம்ம ஊர் சார்பா சால்வை போட்டா நல்லாயிருக்கும்னு ஒன்றியச் செயலாளர் போன வாரமே சொன்னாரு... நானும் பனப்பாக்கம் போயிட்டதால, இத முன்கூட்டியே சொல்ல மறந்துட்டேன்" என்றார்.

"ஏற்கெனவே நம்ம தொகுதியில் நின்னு ஜெயிச்சு ஜனங்களுக்கு நிறைய செஞ்சிருக்காரு. நல்ல மனுஷன்..." யோசித்தேன்.

"இதுக்கு மேல மதுராந்தகத்துக்குப் போய் கதர்துண்டு வாங்கி வரணும்னா நேரமாயிடும். ஒரு ஐடியா... என்கிட்ட ஒரு புது கதர்துண்டு இருக்கு அத வேட்பாளருக்கு போட்டுடுவோம்... எப்படி என் யோசனை...?"

"குண்டுராருக்கு கொடுக்கலாம்னு பேசிட்டு, இப்ப வேட்பாளருக்குப் போடறதா சொல்றீங்களே..." மனைவியின் பார்வை புரிந்தது. சங்கடப்பட்டேன்.

அப்பாவிடம் மானசீகமாக மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, கதர் துண்டை எடுத்துக் கொண்டு வேட்பாளரை வரவேற்க, கந்த



சாமி அண்ணனுடன் புறப்பட்டேன்...

மறுநாள் மனைவியைக் கேட்டேன்.

**"நே**த்து குண்டுரார் வந்தாரா? சாப்பாடு போட்டியா?" என்றேன்.

"ம்..ம்... வேட்பாளர் வந்து போன பிறகு தான் அவரும் வந்தாரு... சாப்பாடு போட்டேன், திருப்தியா சாப்பிட்டாரு... அப்பாவை நெனைச்சுப் பெருமையா பேசிட்டுப் போனாரு.. இன்னொரு அதிசயத்தைச் சொல்லட்டுமாங்க..." என்றாள்...

"சொல்லு" என்றேன்.

"நீங்க வேட்பாளருக்குப் பொன்னாடை போட்டுட்டு வந்த பிறகு, காலனிக்குள்ள போனப்ப, ஓரமா நின்னுகிட்டிருந்த குண்டுரார்கிட்ட போய் ஒரு துண்டை அவருக்குப் போட்டு ஃபோட்டோ எடுத்துக்கிட்டாராம். அது சாட்சாத் நீங்க போட்ட துண்டுதாங்க..." என்றாள் கண்கள் விரிய.

நான் அப்பாவின் படத்தைப் பார்த்தேன். அவர் புன்னகை செய்து கொண்டிருந்தார். ○



# பட்ட(ப்) படிப்பு

என்ன வோட்டு போட்டீங்களா? கண்டிப்பா www.new7wonders.comக்குப் போய் போட்ருங்க. ஏன்னா, இந்த தளத்துல புதுசா ஏழு உலக அதிசயங்களை தேர்வு செய்யறதுக்கான முயற்சி மும்முரமா நடந்துக்கிட்டிருக்கு. இதுவரை 1 கோடியே 70 லட்சம் பேர் க்ளிக்கி க்ளிக்கி வோட்டுப் போட்டிருக்காங்க. புதிய உலக அதிசயங்களா அவங்க போட்டிருக்கிற 66 இடங்களோட லிஸ்ட்ல இந்தியாவிலிருந்து இரண்டே இரண்டு செலக்ட் ஆகியிருக்கு. ஒண்ணு தாஜ்மஹால், இன்னொண்ணு மதுரை மீனாட்சி கோயில். இது தமிழகத்துக்குப் பெருமை சேர்க்கிற விஷயங்கறதாலே கண்டிப்பா வோட்டுப் போட்டு, மீனாட்சியம்மனுக்கு உங்க பொன்னான ஆதரவை அளிங்க. மறவாதீர்கள். உங்கள் வோட்டு மீனாட்சியம்மனுக்கே. ஓகேவா? (அது சரி, மௌஸ்ல வோட்டுப் போடறதால அதோடவால்ல ஏதாவது கறுப்பா புள்ளி வைப்பீங்களா?)







பறந்துக்கிட்டே படம் எடுக்கிறாங்க. ஆனா பறக்கிறதையெல்லாம் வைச்சு படம் எடுக்க முடியுமா? ஓயெஸ், முடியும்னு நிரூபிச்சிருக்காங்க. பறக்கிற பட்டங்கள்ல காமிரா, ட்ரான்ஸ்மிட்டர் எல்லாம் ஃபிட் பண்ணி ஃபோட்டோக்களை வகை வகையா எடுத்து குவிச்சி www.thehaefners.com/kap/ வலை சைட்ல. ஏதோ ப்ரொபஷனல் போட்டோகிராபர் எடுத்த மாதிரி ஸ்டேடியம், புல்வெளி, வான்வெளி எல்லாத்தையும் அட்டகாசமா, பறந்து பறந்து எடுத்திருக்கு இந்தப் பட்டங்கள். படப்பிடிப்பு தெரியும். இது புது வகையான பட்டப்பிடிப்பு போல.

இந்தச் சமயத்துல ரொம்ப ரொம்ப சூடா ஒரு வலைசைட் தொடங்கியிருக்காங்க. ஒவ்வொரு மீடியாவும் நொடிக்கொரு தகவலை அள்ளி விட்டுக்கிட்டிருக்கிற இந்த நேரத்துல, காஞ்சி சங்கரமடத்தோட அதிகாரபூர்வமான தகவல்களை தெரிஞ்சுக்கணும்னா, இங்கே வாங்கன்னு வரவேற்குது www.kanchi-sathya.org. இதுவரைக்கும் தாக்கல் செய்யப்பட்ட மனுக்களோட விவரங்கள், அவர் மீது போடப்பட்டுள்ள FIR... இப்படி ஏராளமான தகவல்கள் இதில பதிவாயிருக்கு. நீங்க மடத்திடம் ஏதாவது கேள்வி கேக்கணும்னா, webmaster @kanchisathya.orgக்கு மெயிலலாம்.

**ஜாலி SMS**

நீ ஒரு பெண்ணிடம் நேரடியாக ஐ லவ் யூ சொன்னால், அது டைரக்ட் மார்க்கெட்டிங். போன் செய்து சொன்னால் டெலி மார்க்கெட்டிங். அதற்கு அந்த பெண்ணுடைய பதில் ஒரு 'பளாராக' இருந்தால், அது... அது... அதுதான் கஸ்டமர் ஃபீட்பேக்.

- ப்ரௌஸர்



# கோபிகாவின் கனவு!

**வ**யலின் இல்லை... சாரங்கி, சிதார், வீணை, புல்லாங்குழல் ஊஹூம். எதுவும் இல்லை! ஆனால் கோபிகா வர்மா மலையாளத்தில் பேசிக் கொண்டிருந்ததை கேட்டபோது, ஏதோ சிம்ஃபொனி கேட்ட சுகம்தான் ஏற்பட்டது.

எந்தோ...? அதே ஓ! சுகாணோ? என எல்லாமே ஓ...ஓஹோதான்!... சின்ன முகத்தில் இவ்வளவு டீடெய்ல்ஸ் வைத்து சிரத்தையுடன் உருவாக்கிய பிரம்மா வாழ்க!

"'ஆட்டோகிராஃப்' 'ஃபோர் ஸ்டுடன்ஸ்', 'தொட்டி ஜெயா...' இதிலெல்லாம் செய்யாத வித்தியாசமான கேரக்டர் 'கனா கண்டேன்' படத்தில் செய்கிறேன்... அர்ச்சனா' என்கிற போல்டான இளம் பெண் வேடம். பொயடிக் லவ் ஸ்டோரி... பாடல் காட்சிக்காக லடாக் போகப் போறோம். அதைப் பத்தி நினைத்தாலே நிறைய கனவா வருது!" என்றார் குதூகலமாக.

மீண்டும் சிம்ஃபொனி!

- மஞ்சு

படம்: ப்ரவீன் குமார்

"நல்ல புகழும் பரபரவென்ற வீச்சும் கிடைக்குது என்பதால் தான் சினிமாவில் பின்னணி பாடுகிறேன். மற்றபடி, கர்நாடக இசையால்தான் எனக்கு ஆத்மார்த்தமான திருப்தி கிடைக்கிறது'' என்கிறார் 'தில்' படத்தில் 'மச்சான் மீசை வீச்சருவா' பாடல் மூலம் ஒரே இரவில் பட்டிதொட்டியெல்லாம் பிரபலமான புஷ்பா ஆனந்த்.

எம்.எல்.வி, பி.எஸ்.நாராயண சாமி இவர்களின் சிஷ்யை! இறக்கைக் கட்டிக்கொண்டு சிங் கப்பூர், இங்கிலாந்து என்று எப் போதும் ஒரே பற...பற...!

"'என்லிவனிங் மெலடிஸ்' என்ற பெயரில் உணர்வுபூர்வ மாக நான் பாடிய தியாகையர், ஜி.என்.பி, ஊத்துக்காடு, அன்ன மாச்சார்யா போன்ற இசை மேதைகளின் அரிய பாடல்கள் சி.டி.யா வெளிவந்திருக்கு. நல்லா



# அதுல மீச்சு! இதுல வீச்சு!

போறதா தோ கேஸட்லேயிருந்து இப்பதான் பாராட்டு வந்தது. இந்தப் பெருமைக்கெல்லாம் நான் நன்றி சொல்லி வணங்குவது, ஸ்ரீ ஹரிதாஸ் கிரி சுவாமிகளைதான். சின்ன வயதில் என் குரலைக் கேட்டு வியந்து, எம்.எல்.வியிடம் சேர்த்து விட்டவரே அவர்தான்" என்று தமது குருவின் படம் இருந்த திசையை நோக்கி கும்பிட்டார்.

"என்னோட மராட்டி அபங்ஸ் பாடல்களைக் கேட்டவங்க, 'சினிமா வாய்ஸ் வேறே மாதிரி இருக்கே'னு கேட்பாங்க. "அதுலே கொஞ்சம் மாடுலேட் பண்ணி, வேறே ஸ்டைல்ல பாடறேன். இரண்டுக்கும் வித்தியாசம் இருக்கணும் இல்லையா?" என்கிறார்.

"சீஸன் வந்துவிட்டால், என்னோடு சேர்ந்து கடுமையாக உழைக்கும் நபர்" என்று சொல்லி உயரமான ஓர் இளைஞரை அறிமுகப்படுத்தினார் புஷ்பா.

"புகையில் போகாதே.... வெந்நீர் குடி. வெரைட்டியா பாடு... ரிபீட் பண்ணாதே" என்று 'லா' போட்டு உற்சாகப்படுத்தும் அந்த வக்கீல், வேறு யார்? கணவர் ஆனந்த்தான்!

- ஜஸ்

# எம்.எஸ் அளித்த

## அமரர் கல்கி



சென்னை நகரின் சமூக வாழ்க்கையில் டிசம்பர் கடைசியில் நடக்கும் சங்கீத விழாக்கள் மிகுந்த முக்கியத்தை அடைந்திருக்கின்றன. இந்த விழாக்களைத் திறந்து வைப்பதற்குச் சங்கீதம் தெரியாத பிரமுகர்களை, ஒவ்வொரு வருஷமும் அழைப்பதும் வழக்கமாயிருந்து வருகிறது. இந்தத் திறப்பு விழாக்களை நடத்துகிறவர்கள் சாதாரணமாக "எனக்குச் சங்கீதத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது" என்று அவையடக்கம் சொல்லிக் கொண்டுதான் ஆரம்பிக்கிற வழக்கம். ஆனால் இந்த வருஷம் மியூஸிக் அகாடமி விழாவைத் திறந்து வைத்த ஸர் எம்.வெங்கட சுப்பராவைப் போல், அவ்வளவு அழகாக யாருமே தங்கள் பிரசங்கத்தை ஆரம்பித்ததில்லை. முதல் வாக்கியத்திலேயே இவர் தம்மை 'இக்னாரமஸ்' என்று தெரிவித்துக் கொண்டார். 'இக்னாரமஸ்' என்னும் அழகிய கம்பீரமான வார்த்தைக்குத் தமிழில் சரியான பிரதிபதம் கிடைப்பது கஷ்டமாயிருக்கிறது. ஆங்கிலமும் தமிழும் நன்கறிந்த சில நண்பர்களைக் கேட்டுப் பார்த்தேன். அவர்கள், "அஞ்ஞான இருள் குன்று", "மௌடீக மலை", "மட சாம்பிராணி" முதலிய சொற்றொடர்களைக் கூறினார்களே தவிர, 'இக்னாரமஸ்' என்பதைப் போல் கம்பீரமான தனிப்பதம் ஒன்றைக் குறிப்பிட முடியவில்லை. இது ஒருபுறமிருக்க,

ஸர் வெங்கட சுப்பராவ் தம்மைச் சங்கீத விஷயங்களில் 'இக்னாரமஸ்' என்று கூறிக் கொண்டது எவ்வளவு சத்தியமான வார்த்தை என்பதை, அவருடைய பேச்சின் கடைசிப் பகுதியில் நிரூபித்து விட்டார். தமக்குக் கொஞ்சமும் தெரியாத விஷயத்தைப் பற்றி வேறு யாரோ சொல்லிக் கொண்டிருந்ததை ஒப்புவித்தார். தமிழ்ப்பாட்டு இயக்கத்தை வெளுத்து வாங்கினார். "கலையில் அரசியலைக் கொண்டு வரலாமா?" என்று கேட்டார். "இத்தனை நாளும் நீங்கள் தெலுங்குப் பாட்டுக்களைத் தானே கேட்டுக் கொண்டு வந்தீர்கள்? இப்போது தமிழ்ப் பாட்டு என்ன வந்தது கேடு?" என்றார். "திராவிட பாஷைகளுக்குள் தெலுங்குதான் இனிமையானது" என்னும் பழைய பெயர் போன அபத்தத்தைத் திருப்பிச் சொன்னார். "தமிழ்ப் பாட்டு வேணுமானால் தேவாரம் - திருவாசகம் இருக்கிறதே? வேறு என்னத்துக்கு?" என்று கேட்டார். இன்னும், "இம் மாதிரி பயங்கர மர்ம இயக்கங்களினால் ஜெர்மனி எத்தகைய கேட்டை அடைந்தது தெரியுமா?" என்று மயிர்க் கூச்செறியக் கேட்டுத் தமிழிசைக்காரர்கள் எல்லாம் ஒரு வேளை ஹிட்லர் கோஷ்டியைச் சேர்ந்தவர்களோ என்ற சந்தேகத்தை உண்டாக்கினார். "நல்ல வேளையாக, இந்தத் தமிழிசை இயக்கம் தமிழ் மக்களுடைய இருதயத்தையோ, தமிழ்ப் பாடகர்களையோ கவரவில்லையென்று அறிகிறேன். ரொம்பத் திருப்தி; பரிபூரண சந்தோஷம். ஆனாலும் ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். தமிழிசையாகிய பேரபாயத்தை அடியோடு வேரறுக்காத வரையில் நிம்மதியாகத் தூங்க முடியாது" என்றார்.





# நிரூபணம்!

மூன்று நிமிஷத்துக்குள் இவ்வளவு அபத்தங்களையும், இல்லாத காரியங்களையும், அசட்டு வாதங்களையும் சொல்லக் கூடியவருக்கு 'இக்னாரமஸ்' என்ற பட்டம் தகுதியில்லையென்றால், வேறு யாருக்குத்தான் தகுதி யாயிருக்க முடியும்?

**த**மிழ்ப் பாட்டு இயக்கம், ரஸிகர்களின் ஆதரவை எவ்வளவு தூரம் பெற்று விட்டது என்பதை நிரூபிக்க இன்னொரு சிறந்த அத்தாட்சி கோகலே ஹாலில் அன்று மாலையே கிடைத்தது. திறப்பு விழாவுக்குப் பிறகு நடந்த ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மியின் கச்சேரியைத்தான் குறிப்பிடுகிறேன். ஸ்ரீமதி எம்.எஸ். எத்தனையோ கச்சேரிகள் செய்திருக்கிறார்கள்; கோகலே ஹாலிலும் எத்தனையோ கச்சேரிகள் நடந்திருக்கின்றன. ஆனால் இதற்கு முன் எம்.எஸ். இம்மாதிரி கச்சேரி செய்ததில்லை. கோகலே ஹாலிலும் இம்மாதிரி கச்சேரி நடந்ததில்லையென்று சொல்ல வேண்டும். பெரும்பான்மையாகத் தமிழ் பாட்டுக்கள்தான் பாடினார். பந்துவராளி, ஆபோஹி, சங்கராபரண ராகங்களில் இசைப் பிரவாகம் பெருக்கெடுத்து ஓடிற்று. அந்த ராகங்களில் ''நின்னருள்'', ''சபாபதிக்கு'', ''தூக்கிய திருவடி'' என்னும் கீர்த்தனங்கள் ஒவ்வொரு ரஸிகருடைய உள்ளத்தையும் துள்ளும்படி செய்தன. முதற்பகுதியில் கடைசிக் கீர்த்தனமாக,

**"காலைத் தூக்கி நின்றாடும்**
**தெய்வமே என்னைக்**
**கைதூக்கி ஆள் தெய்வமே"**

என்று மத்தியம சுருதியில் எடுத்தபோது, சபையில் நிசப்தம் ஏற்பட்டது. "இங்கும் அங்குமாய்த் தேடி" என்னும் இடத்தில் பலருக்கும் பரவசம் உண்டாயிற்று; சிலருடைய கண்ணில் ஜலம் வந்து விட்டது. கீர்த்தனம் முடிந்ததும், எள்ளுப் போட்டால் எள்ளு விழாதபடி கூடியிருந்தவர்கள் அவ்வளவு பேரும் ஏகமனதாகக் கரகோஷம் செய்து மண்டபம் இடிந்து விழுமோ என்ற சந்தேகத்தை உண்டாக்கி விட்டார்கள். இத்தகைய பரவச நிலைமை, பின்னால் "கண்டதுண்டோ கண்ணன் போல்" என்ற பாடலில், "கண்ணா என்று நான் கதறிடும் போதினில்" என்ற இடத்திலும் ஏற்பட்டது.

அன்று எம்.எஸ்.ஸுக்கு ஸ்ரீ டி.டி. சங்கரய்யரும், மாஸ்டர் மூர்த்தியும் பக்கவாத்தியம் வாசித்தார்கள். ஸ்ரீ சங்கரய்யர் எதிர்பாராத அளவில் அழகாக வாசித்து விட்டார். பாட்டுக்குப் பெரும் ஒத்தாசை; தனி ஆவர்த்தனங்கள் ரொம்பக் கச்சிதம். மூர்த்தியின் வாசிப்பில் மாதுர்யத்துடன் ஜீவ சக்தியும் ததும்பிற்று. கோகலே ஹாலில் பன்னிரண்டு நிமிஷம் தனி ஆவர்த்தனம் வாசித்து, முடிவில் கரகோஷமும் அவர் பெற்றுக் கொண்டதை ஓர் அற்புதம் என்றே சொல்ல வேண்டும்.

**- 'கல்கி களஞ்சியம்' தொகுப்பிலிருந்து**
**வானதி பதிப்பகம்**



# பிரமிட் தேசம் - 15

இஸ்தான்புல்லில் ஷாப்பிங் செய்வது பிரமிப்பான அனுபவம். தங்கத்தில் துவங்கி, பீங்கான் வரை விற்கும் சுமார் மூவாயிரம் கடைகளைக் கொண்ட 'கிராண்ட் பஜாரில்' கிடைக்காத பொருள் இல்லை. தங்க அணிகலன்களுக்கு ஒரு சாரி பூராவும் கடைகள் அணிவகுத்து இருப்பதை 'கோல்ட் லேன்' என்கிறார்கள்; இப்படிப் பல சந்துகள்! அனைத்துமே ஒரு பெரிய கட்டடத்தில் இருப்பதால், இதை மூடப்பட்ட (covered) பஜார் என்றும் அழைக்கிறார்கள். எகிப்திய பஜார், அல்லது மசாலாக்களின் பஜார் என்பது இன்னொரு முக்கியமான சந்தை. ஆதி நாட்களில் இந்தியாவிலிருந்தும், இதர நாடுகளிலிருந்தும் கொண்டுவரப்பட்ட மசாலாக்கள் எகிப்து வழியாகக் கொண்டு வரப்பட்டு இங்கு விற்கப்பட்டதாம்! இந்த பஜார், 'டர்கிஷ் டிலைட்' என்று உலகளவில் பிரசித்தி பெற்ற இனிப்பு வகைகளும், உலர்ந்த பழங்களும் வாங்க உகந்த இடம். ஜூஜூப்ஸ் போன்ற ஜவ்வு மிட்டாயினுள் பிஸ்தா, பாதாம் பருப்புகளை வைத்துத் தயாரித்திருக்கும் இனிப்புகள், வாயில் போட்டதும் கரைகின்றன.

நான் பூராவும் நகரைச் சுற்றிப் பார்த்த பிறகு ஹோட்டலுக்குத் திரும்பி, இரவு உணவு உட்கொண்டதும் தயாராகி மாக்ஸிம் (Maxim) என்ற இரவு விடுதிக்கு 'கலாசார நிகழ்ச்சி'யைக் காணச் சென்றோம். அந்நாட்டுக்கே உரிய வாத்தியங்களோடு நடனங்களை வெவ்வேறு குழுக்கள் ஆடியது ரசிக்கும்படி இருந்தன. முக்கியமாய் ஒரே குடும்பத்தைச் சேர்ந்த அண்ணன் தங்கை, எழுபத்துமூன்று உலக மொழிகளில் பாடல்களைப் பாடி அசத்தியது அபாரம்! வந்திருக்கும் விருந்தாளிகள், தாங்கள் எந்த நாட்டைச் சார்ந்தவர் என்று சொன்னதுமே, சட்டென்று அந்த நாட்டு மொழியில் ஒரு பாடலைப் பாடுகிறார்கள். நாங்கள் புடைவை உடுத்திக் கொண்டு போயிருந்ததில், எங்களிடம் எந்தக் கேள்வியுமே கேட்காமல் இந்திப் பாட்டைப் பாடினார்கள். ஆனால் என்ன, இன்னமும் ராஜ்கபூரின் காலத்திலேயே இருக்கிறார்கள் என்பது அவர்கள் பாடிய 'ஆவாரா' பாடலிலிருந்து புரிந்தது!

• தங்கம் வாங்கலியோ... வெள்ளி வாங்கலியோ...





# தேய்... தேய்... என்று தேய்த்து..!

**ம**றுநாள் வெள்ளிக்கிழமை எங்கள் பயணம் முடிவுக்கு வந்து, மூட்டை முடிச்சுக்களுடன் கிளம்பும் முன் பிரியாவும் நானும் பெற்ற ஓர் அபூர்வ (!) அனுபவத்தைப் பகிர்ந்து கொள்வது இக் கட்டுரைத் தொடருக்குச் சிறந்த முத்தாய்ப்பாக இருக்கும் என்று நம்புகிறேன்.

'டர்கிஷ் டிலைட்' என்ற இனிப்பு வகை வாங்குவதற்காக எங்களை அழைத்துச் சென்ற ஸயத், "துருக்கிக்கு வருபவர்கள் மூன்று விஷயங்களைக் கட்டாயம் செய்ய வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம். ஒன்று - டர்கிஷ் டிலைட் இனிப்புகளைச் சாப்பிடுதல், இரண்டு - டர்க்கி காபியை ருசித்தல், மூன்று - டர்கிஷ் ஹமாமி - குளியலை - அனுபவித்தல்'' என்று தீவிரமாய் விரல்களை மடக்க, பிரியாவும் நானும் மூன்றையும் செய்து பார்த்துவிடுவது என்று உடனே தீர்மானித்து, அங்கேயே இருந்த பெயர்பெற்ற கடையில் டர்கிஷ் காபியை வாங்கிக் குடித்தோம். காபிப் பொடியை நேரடியாய் வெதவெதவென்று வெந்நீரில் கரைத்து, சர்க்கரை போட்டுக் குடிக்கிற மாதிரி இருந்தது. பிடிக்காமல் போக, பாதியோடு நிறுத்தி விட்டோம்.

• டர்க்கிஷ் இனிப்புகள்





அடுத்து - டர்கிஷ் ஹமாமி. "செம்பர்லிட்டாஸ் ஹமாமி (Chemberlitas Hamami) என்ற குளியல் கூடம், 1584-ல் அன்றைய சுல்தானால் கட்டப்பட்டு இன்றும் நடத்தப்படுவது. வரலாற்றுச் சிறப்பு மிக்க அக்கூடத்துக்குப் போய் வாருங்கள்" என்று ஸயத் சிபாரிசு செய்து வழிகாட்ட, ஹோட்டலின் அருகிலிருந்த மின்சார ரயிலைப் பிடித்து, தலைக்கு பத்து லட்சம் லிரா கொடுத்து டிக்கெட் வாங்கி, மூன்று ஸ்டேஷன்கள் தள்ளியிருந்த ஸ்டேஷனில் இறங்கி, நேரெதிரில் தெரிந்த 'ஹமாமி'க்குள் நுழைந்தோம். மிகப்பெரிய, பழைமையான கட்டடம். இடது பக்கம் ஆண்களுக்கு, வலது பக்கம் பெண்களுக்கு என்று பிரிக்கப்பட்டிருந்தது. நபருக்கு பதினேழு அமெரிக்க டாலர் என்ற கட்டணத்தைக் கொடுத்து, பெண்கள் பிரிவுக்குச் சென்றோம்.

• விடைபெறுகிறோம்!



**பி**ரும்மாண்டமான வட்ட வடிவக் கூடம். நடுவில் சுமார் முப்பது அடி சுற்றளவில் இரண்டடி உயரத்தில் சலவைக் கற்களால் ஆன வட்டமேடை. அறைச் சுவரில் ஆதி நாட்களை வர்ணிக்கும் படங்களில் வருவது போன்று, ஆங்காங்கே சலவைக்கல் நீரூற்றுக்கள். சுமார் நாற்பது அடி

உயரமிருந்த டோமில் பல சின்ன துவாரங்கள். விட்டத்திலுள்ள துவாரங்களிலிருந்து வரும் குளிர் காற்றும், மேடை மேல் கணகணக்கும் இதமான சூடும் ஒன்று சேர்கையில், உடலிலுள்ள அசுத்தங்கள் வியர்வையாக வெளிப்பட்டு தேகம் சுத்தமாகிவிடும் என்பது தான் இக்குளியலின் அடிப்படை நோக்கம்! சூடுபடுத்தப்பட்ட மேடைப் பக்கம் பார்வை படர்ந்ததும், எங்களுக்குத் தூக்கிவாரிப்போட்டது. மேடை மேல் படுத்து, உட்கார்ந்தவாறு, பல வயசுப் பெண்கள் - அத்தனை பேரும் ஒட்டுத்துணி கூட இல்லாமல் முழு நிர்வாணமாக.

சுற்றிக் கொண்டிருந்த துண்டை இறுகப் பிடித்துக் கொண்டு மேடை மேல் நாங்களும் படுத்தோம். பத்து நிமிஷங்கள் ஆனதும் கூடத்தில் நடமாடிக் கொண்டிருக்கும் மஸாஜ் பெண்மணிகளில் ஒருவர் (இவரும் அதே கோலம்தான்!), கிட்டத்தில் வந்து என் துடையைத் தட்டினார். 'இங்கே வந்து படு' என்று ஜாடை காட்டினார். படுத்தேன். கையில் ஒரு விசேஷ சொர சொர துணி உறையை மாட்டிக் கொண்டு, உடம்பு முழுவதும் தேய்த்து விட்டார். மறுபடி துடையில் ஒரு தட்டு... இது திரும்பிப் படுக்க. மீண்டும் தேய்ப்பு. மறுபடி தட்டல்.. மல்லாக்கப் படுத்தவள் மேல் இரண்டு பக்கெட் நிறைய நுரைத்த சோப்பு ஜலத்தைக் கொட்டி, ஆளே தெரியாமல் மறைத்து விட்டு, இன்னொரு முறை தேய்த்தார். இப்படி மாறி மாறித் தேய்த்து முடித்ததும், தட்டியெழுப்பி நீரூற்றிடம் அழைத்துச் சென்று, ஜில்லென்ற குளிர்ந்த நீரடியில் நிற்கவைத்தார். 'மீண்டும் மேடையில் படு' என்று சைகை செய்துவிட்டு, அடுத்த கஸ்டமரைக் கவனிக்கப் போய் விட்டார். எனக்கு ஒருவர் மஸாஜ் செய்தபோது இன்னொரு பெண்மணி பிரியாவுக்கும் முடித்துவிட, இருவரும் எழுந்து உடை உடுத்திக் கொண்டு வெளியில் வந்தோம்.




"மழைத்தூறல் அதிகமாயிடுச்சு... அந்த ஜவுளிக்கடை வாசல்ல ஒதுங்கி நிற்கலாம் வாங்க..."
"நனைஞ்சாலும் பரவாயில்ல... வீட்டுக்கே போய்ச் சேர்ந்திடலாம் வா...!"

- ஏ.கே. நாசர்

அத்தனை பேரும், மஸாஜ் பெண்மணி உள்பட, நிர்வாணமாக இருப்பார்கள் என்பது முன்கூட்டியே தெரிந்திருந்தால், பிரியாவும் நானும் நிச்சயமாகத் தயங்கியிருப்போம். ஆனால் உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால், நாங்கள் துண்டைச் சுற்றிக் கொண்டிருந்ததையோ, மற்றவர்கள் நிர்வாணமாய் இருந்ததையோ குறித்து, யாரும் லட்சியம் பண்ணவில்லை என்பதுதான் நிஜம்! அதாவது - யாரையும் யாரும் கண் உயர்த்திக்கூடப் பார்க்காத இயல்பைத்தான் அங்கு பார்க்க முடிந்தது.

இரண்டு முறை சென்றுவந்த போதும் எகிப்தில் பார்க்க வேண்டிய இடங்கள் இன்னும் உள்ளன. மோஸஸுக்குக் கடவுள் பத்துக் கட்டளைகளைத் தந்த மலை 'ஸைனைய்' (Sinai) என்ற பகுதியில் உள்ளதையும், சில பாலைவனச் சோலைகளையும் காணும் ஆவல் எனக்கிருக்கிறது! இரண்டு முறை எகிப்துக்குச் செல்ல வாய்ப்பளித்த இறைவன், மூன்றாவது தடவை போக சந்தர்ப்பம் தரமாட்டாரா? தரலாம்... தருவார் என்ற நம்பிக்கையுடன் விடை பெறுகிறேன்.

(முற்றும்)

புத்தாண்டின் புதுவரவு!

நீண்ட இடைவெளிக்குப் பிறகு புத்தகப் பிரியர்களின் எதிர்பார்ப்புக்கு ஒரு நல்விருந்து!

எழுத்துவேந்தர் **ஜெயகாந்தன்** எழுதி வழங்கும் புதிய படைப்பு!

நடந்தது. நடப்பது, நடக்கவேண்டியது, நடவாதது, நடக்க முடியாதது,
நடக்கக் கூடாதது எல்லாவற்றையும் பிரதிபலிப்பதே கற்பனை...
கற்பனை பொய்யல்ல...



ஜெயகாந்தனின் **ஹர ஹர சங்கர...** முற்றும் புதிய நாவல்

❑ 64 பக்கங்கள் (டெமி சைஸ்) ❑ விலை: ரூ. 15.00 ❑ அழகிய முகப்போவியம்
❑ அத்தியாயத்திற்கு அத்தியாயம் அழகிய ஓவியங்கள். ❑

தமிழகமெங்கும் 2005 ஜனவரி முதல் தேதி அன்றே எல்லா கடைகளிலும் கிடைக்கும். அனைத்து ஊர்களின் விற்பனை ஏஜெண்டுகளும் தங்களுக்குத் தேவையான பிரதிகளுக்குத் தொடர்பு கொள்ளவும்.

மேலும் விவரங்களுக்கு

## கவிதா பப்ளிகேஷன்

8, மாசிலாமணி தெரு, பாண்டிபஜார், தியாகராய நகர், சென்னை–600 017.
தொலைபேசி: 24364243 24322177 டெலிஃபேக்ஸ் 044–24364243
ஈ–மெயில் : kavitha_publication@yahoo.com

## ஸ்ரீ ஸ்ரீ பரமஹம்ஸ யோகானந்தரின்
## 112-வது ஜெயந்தி விழாவை முன்னிட்டு

**"எப்படி - வாழ - வேண்டும்" (How to Live Series)**
என்ற தொகுப்பில் ஆன்மீக நூல்கள் வெளியீடு



* வெற்றிக்கு வழி காண்பது எப்படி ?
* கவன சக்தியை ஒருமுகப்படுத்துதல் மூலம் வெற்றி.
* இறைவனின் எல்லையில்லா சக்தியினால் குணப்படுத்துதல்.
* உடல், மனம் மற்றும் ஆன்மீக குணப்படுத்தும் முறைகளை இணக்கம் ஆக்குதல்.
* குரு—சிஷ்ய உறவு.
* ஆன்மீக நாட்குறிப்பு.
* கவலை உணர்வை களைதல்.
* மற்றவர்களை மாற்றுவது எப்படி?

நாள்: ஜனவரி 4, 2005 (செவ்வாய்) நேரம்: மாலை 6 மணி
இடம்: **"மாஸ்டர் மஹால்"**
முடக்கு சாலை, தேனி மெயின் ரோடு, மதுரை - 625 016.

**ஆன்மீக அன்பர்கள் அனைவரும் வருகை தந்து சிறப்பிக்குமாறு வேண்டுகிறோம்**
யோகதா சத்சங்க தியான மண்டலி
Plot No. 23, Doak Nagar 3rd Cross, Kochadai, Madurai - 625 016. Ph: (0452) 2384805

Information about Paramahansa Yogananda's life and teachings are available at the address given below.
**Yogoda Satsanga Sakha Math, Paramahansa Yogananda Path, RANCHI - 834 001. Jharkhand, Tel (0651) 2460071, 2460074, 2461578.**
www.yssofindia.org

# கண்ணே...



இந்தியாவின் மக்கள் தொகை நூறு கோடியைத் தாண்டி அதிகரித்துக் கொண்டிருந்தாலும் பதினைந்து சதவிகித மக்கள் குழந்தைப் பேறு இல்லாமல் வேதனைப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்கு நம்பிக்கை அளிக்கும் விதமாக, குழந்தையின்மை சிகிச்சைத் துறையில் தினமும் ஒரு புதிய தொழில் நுட்பம் உருவாகிக் கொண்டுதான் இருக்கிறது. 'இன்ஃபெர்டிலிடி அண்ட் ரீப்ரொடக்டிவ் மெடிஸின்' துறையின் சமீபத்திய வரவு சாட்டர்ன் ஆக்டிவ் லேஸர் கருவி! ஆசியாவிலேயே முதன் முறையாக இந்தக் கருவி, சென்னை, கோயம்பேடு பஸ் நிலையம் அருகில்



உள்ள 'ஆகாஷ் குழந்தையின்மை சிகிச்சை மைய'த்தில் சிறப்புடன் செயல்பட்டு வருகிறது.

அது பற்றி விளக்குகிறார் டாக்டர் கே.எஸ். ஜெயராணி காமராஜ்:



* கே.எஸ். ஜெயராணி

"திருமணமாகும் தம்பதியரில் எண்பது சதவிகித பேருக்கு, திருமணமான மறு வருடமே குழந்தை பிறந்துவிடுகிறது. இருபது சதவிகிதத்தினருக்கு குழந்தை பிறப்பதில் சிக்கல் ஏற்படுகிறது. இதற்குப் பலவித காரணங்கள் உள்ளன. ஆனால் பெரும்பான்மையான குறைபாடுகள், தகுந்த சிகிச்சை மூலம் குணப்படுத்தக் கூடியவையே!

### ஐ.வி.எஃப் சிகிச்சை முறை

பெண்ணின் கருக்குழாயில் (ஃபெலோப்பியன் ட்யூப்) அடைப்பு ஏற்பட்டு விட்டால், விந்தணுக்கள் அதன் வழியே சென்று கருமுட்டையை அடைய முடியாது. இதற்கான தீர்வு காணவே ஐ.வி.எஃப் என்ற சோதனைக்குழாய் முறை கண்டுபிடிக்கப்பட்டது. கருக்குழாய் அடைப்பு உள்ளவர்கள் பிள்ளையே பெற முடியாது என்ற நிலையும் மாற்றப்பட்டது.

### இக்ஸி சிகிச்சை முறை

ஐ.வி.எஃப் மருத்துவத்தில் பெண்ணின் குறைப்பாட்டுக்குத்தான் தீர்வு கிடைக்கிறதே தவிர, ஆணின் பிரச்னைக்கு அல்ல; 1992 வரை செய்யப்பட்ட ஆராய்ச்சிகளில், ஆணின் விந்தணுக்கள் பற்றி பல உண்மைகள் தெரிய வந்தன. அவற்றின் அடிப்படையில் உருவாக்கப்பட்டதே 'இக்ஸி' தொழில் நுட்பம்!

சோதனைக் குழாய் முறையில் பெண்ணின் கரு முட்டையையும், ஆணின் விந்தணுக்களையும் ஒன்றாக இணைத்து கருவை உருவாக்குவதற்கு, சில நூறு செழிப்பான விந்தணுக்கள் தேவைப்பட்டன. ஆனால் 'இக்ஸி' முறையில் ஒரே ஒரு நல்ல விந்தணுவே போதுமானது. விந்துப் பையிலிருந்தே இந்த விந்தணுவை எடுக்கவும்

சாத்தியம் உள்ளது.

**பி.ஜி.டி சிகிச்சை முறை**

**உள**னமோ, பிறவிக் குறைபாடோ உள்ள குழந்தைகள் பிறப்பதைத் தடுக்கும் பயனுள்ள சிகிச்சை இது. மீண்டும் மீண்டும் கருச்சிதைவு ஏற்படும் பெண்களுக்கு நிவாரணம் தரக் கூடியது.



# பாப்பா!

ஐ.வி.எஃப் சிகிச்சை முறையில், குழந்தை பெறுவதற்கான வெற்றி வாய்ப்பு முப்பது சதவிகிதம்தான் கிடைத்தது. 'இக்ஸி' முறையில் இன்னும் முன்னேறி, ஐம்பது சதவிகிதம் வரை வெற்றி வாய்ப்பு அதிகரித்தது. பி.ஜி.டி முறை வந்ததும் அடுத்தகட்டமாக ஆரோக்கியமான மகப்பேறு என்ற நிலைமை உருவானது.

தற்போது அறிமுகப்படுத்தப்பட்டிருக்கும் 'Saturn active' என்னும் லேசர் கருத்தரிப்பு சாதனம் மிக மிக நவீனமானது. மேலே குறிப்பிடப்பட்ட சிகிச்சைகளுக்கான அதி நவீன வடிவம் கொண்டது. கடந்த ஜூலை மாதம் பெர்லினில் அறிமுகப்படுத்தப்பட்ட இக் கருவி, ரீப்ரொடக்டிவ் மெடிஸின் வரலாற்றில் மிகப் பெரிய மைல் கல்!"

**இந்த சாடர்ன் ஆக்டிவ் லேஸர் கருவி என்ன செய்யும்?**

**க**ருமுட்டையில் இருக்கக்கூடிய செல்கள் வெடித்து, கர்ப்பப் பையில் ஒட்டிக் கொண்டு வளர ஆரம்பிக்கும். ஆனால் சில பெண்களுக்கு கரு முட்டை ஓட்டின் தோல் தடிமனாக இருந்து விடும். அந்நிலையில், அவை வெடிக்காமல், பயனற்று அழிந்துவிடும். இத்தகைய பிரச்னை உள்ளவர்களுக்கு, சாடர்ன் ஆக்டிவ் கருவி மூலம் லேஸர் பாய்ச்சி, கரு முட்டை ஓட்டின் பருமனைக் குறைத்து விடலாம். இதனால் கரு முட்டை சுலபமாக வெடித்து, கருத்தரிப்பு வாய்ப்புகளை அதிகரிக்கும்.

சாடர்ன் ஆக்டிவ் லேஸர் கருவியால் இன்னொரு பயனும் உண்டு. நெருங்கிய உறவுக்குள் திருமணம், பிறவிக் குறைபாடு உள்ளவர்கள் திருமணம் செய்து கொள்ளும் போது, உடல், மூளை வளர்ச்சி குறைபாடுள்ள குழந்தைகள் பிறப்பதற்கான வாய்ப்புகள் மிக மிக அதிகம். இது போன்ற பிரச்னை உள்ள பெண்கள் கருத்தரிக்கும்போது, 'ஃபிஷ் டெக்னாலஜி' முறையில், குறைபாடில்லாத கருமுட்டைகளை மட்டும் செலுத்தி கருத்தரிக்க வைக்கலாம். இதனால் ஆரோக்கியமான மகவைப் பெறவும் சாடர்ன் ஆக்டிவ் லேஸர் கருவி உதவும்.



▪ சாடர்ன் ஆக்டிவ் லேஸர் கருவி

இந்தியா, சீனா, ஜப்பான் போன்ற குடும்ப அமைப்புகள் கொண்ட நாடுகளில், குழந்தையின்மை சமூகப் பிரச்னையாகவும் கருதப்படுவதால், ரீப்ரொடக்டிவ் மெடிஸின் துறைக்குரிய பிரத்யேக மருத்துவமனைகள் வேகமாக உருவாகி வருகின்றன. குழந்தையின்மை சிகிச்சைத் துறையில் விஞ்ஞானமும் விழிப்புணர்வும் வேகமாக வளர்வது நல்ல அறிகுறிதான்" என்றார் கே.எஸ். ஜெயராணி.

- மினி

கல்கி (28.11.04) இதழில் இடம் பெற்ற ஸ்ரீ சாயி அனுபவங்களைப் படித்து, மனம் நெகிழ்ந்த சில வாசகர்கள் தங்கள் அனுபவங்களையும் எழுதி அனுப்பியுள்ளனர். அவற்றில் இரண்டு...



## வினை தீர்த்த விபூதி!

அரசாங்க மருத்துவமனை ஒன்றில் எனக்கு (கர்ப்பப்பை கட்டி) அறுவை சிகிச்சை செய்யப்பட்டது. என்னுடன் ஆபரேஷன் ஆகியவர்கள் எல்லாம் குணமாகிப் போனார்கள். ஆனால் எனக்கு புண் ஆறாமல் நீர் கசிந்தது. வலி வேறு.

என் பக்கத்துப் படுக்கைக்கு ஒரு பெண் வந்தார். அவருக்கும் ஆபரேஷன் ஆனது. அவருக்குத் துணையாக அவர் சகோதரி காஞ்சனா என்பவர் கூடவே இருந்தார். அவர் தெலுங்கர் என்றாலும் தமிழ் பேசுவார். தினமும் இரவில் பாபாவின் பஜனைப் பாடல்களை மெதுவாக, உருக்கத்துடன் பாடுவதை நானும் கேட்டுக் கொண்டிருப்பேன் . நான் தனியாக இருப்பதைப் பார்த்து விசாரித்தார்.

"எனக்கு உறவினர்கள் யாரும் இல்லை. தனியாக இருக்கிறேன். ஆபரேஷன் புண்ணும் ஆறவில்லை" என்று வருத்தப்பட்டேன்.

"அப்படிச் சொல்லாதீர்கள். அனைவருக்கும் உறவான பாபா, உங்களுக்கும் அருள் பாலிப்பார்" என்று கூறிவிட்டு, பாபாவின் பிரசாதமாக கற்கண்டும், விபூதியும் தந்தார். சிறிது விபூதியை, புண் மீதும் பூசினார்.

மறுநாள் என் புண்ணில் நீர் வடிவது நின்றுவிட்டது! நாலே நாளில் ஆறியும் விட்டது. பாபாவின் திருவருளை எண்ணி இன்றும் மெய் சிலிர்க்கிறேன்.

- என்.கே. ஈசுவரி,
பெங்களூர்



## மஹிமையைக் காட்டினார்!

என் கணவருக்கு ஸ்ரீ சாயிபாபா மேல் நம்பிக்கையில்லை. "என்றைக்காவது ஒருநாள் நம்பத்தான் போகிறீர்கள்" எனச் சொல்வேன். அந்த நாளை எதிர்பார்த்திருந்தேன்.

ஆபீஸ் விஷயமாய் இங்குள்ள (பெங்களூர்) பிரபல கம்பெனிக்குச் சென்றார். அந்தக் கம்பெனி அதிகாரிகள் பாபாவின் பக்தர்களாயிருந்ததால், ஒயிட் ஃபீல்ட் போவதாகச் சொல்லி, கணவரையும் அழைத்துப் போனார்கள்.

ஸ்ரீ சாயிபகவானைத் தரிசித்து, மாலை மரியாதைகளைச் செய்திருக்கிறார்கள். தன் கழுத்திலிருந்த மாலைகளைக் கழற்றி, மாலை





போட்டவர்களின் கையில் அவரே தரும்போது, மாலை போடாத கணவருக்கும் ஒரு மாலையைத் தந்துள்ளார்.

வீட்டுக்கு மாலையுடன் வந்தவரிடம் "என்ன விசேஷம்?" எனக் கேட்டேன். விவரமாய்ச் சொன்னதும், நம்பிக்கையே இல்லாதவருக்கு இந்த பாக்கியம் கிடைத்ததேயென வியந்தேன். பல தடவை பகவான் தரிசனத்துக்குப் போய் கூட்டத்தில் பார்க்கக் கஷ்டப்பட்டது நினைவுக்கு வந்தது. மாலையைத் தொடும்போதே உடல் புல்லரித்தது. பொக்கிஷமாய்ப் பூஜை அறையில் வைத்தேன்.

மறுநாள் வியாழக்கிழமை. பூஜை செய்ய நுழைந்தேன். விபூதி வாசனை புதிதாகயிருந்தது. பாபா படத்தில் எப்போதுமில்லாத விபூதி முத்துக்கள். குழந்தைகளின் குறும்புச் செயலாயிருக்கலாமென எண்ணி அதட்டினேன். பூஜை அறைக்கே போகவில்லையென்றார்கள்.

வெள்ளிக்கிழமை அம்மன் படத்திலும், மற்ற சாமி படங்களிலும் விபூதி முத்துக்களாயிருந்தன. கையில் தூவினாலும் இவ்வளவு அழகாய் வராது. பகவான் தமது மஹிமையைக் காட்ட ஆரம்பித்திருக்கிறாரெனத் தெரிந்தது. கணவரிடம் காட்ட - நம்ப மறுத்து விட்டார்.

சனிக்கிழமை வெங்கடேஸ்வர பெருமாள் படத்தில் செந்தூர நிறத்தில் குங்குமம், அதுவும் சாமி இருதய பாகத்திலிருந்ததைப் பார்த்து இதயமெல்லாம் குளிர்ந்தது. அந்த நிறத்தில் நான் குங்குமம் வாங்கியதில்லை.



சாமி படங்களில் விபூதி தானாக விழுவதைப் பார்த்ததும் என்கணவர், சிறிது சிறிதாக பகவானின் சக்தியை நம்ப ஆரம்பித்தார். இப்போது என்னை விட பாபா பக்தராகி விட்டார்.

எங்கள் வீட்டில் சுப காரியம், உடல் நலக் குறைவு என எது நடந்தாலும் விபூதியை உபயோகித்து வருகிறோம். அவர் "நானிருக்க பயமேன்..." என்று காப்பாற்றி வருகிறார்.

- லலிதா நாராயணசாமி,
பெங்களூர்

# ஆசை ஆசையாய்!

அந்த வாரப் பத்திரிகையைச் சந்துரு வீசி எறிந்தபோது, கலா காப்பியுடன் அங்கே வந்தாள். ''என்னங்க, ஏன் புத்தகத்தை வீசி எறியறீங்க?'' என்றாள்.

''அட போ கலா, நாம ஃப்ளாட் வாங்கற விஷயமா வெளியே கிளம்பிக்கிட்டிருக்கோம். நீ காப்பி கொண்டு வர்றவரைக்கும் இந்த புத்தகத்தைப் படிச்சுக்கிட்டு இருக்கலாம்னு எடுத்துப் படிச்சேன். என்னடான்னா ஏதோ ஒரு சாமியார் கட்டுரை எழுதறாராம். பற்றற்று வாழ்ந்தா கவலைகள் இருக்காதாம். மனத்தில் சந்தோஷம், நிம்மதி நிலவுமாம். சே, என்ன சொல்றாங்களோ தெரியலை. வாழ்க்கையில் எதுவுமே பிடிக்காம வாழ்ந்தா, எப்படி சந்தோஷம் வரும்? எனக்குத் தெரியலை'' சிடுசிடுத்தான்.

''ஐயோ, நான் அதையெல்லாம் படிக்கறதே இல்லைங்க. படிச்சா நாமும் ஆண்டியா அலைய வேண்டியதுதான். வாழ்க்கையில் அனுபவிக்க



வெ.ராஜாராமன்

வேண்டியது எவ்வளவோ இருக்கு. ஆசைப்பட்டாத்தானே அடைய முடியும். அப்பத்தானே சந்தோஷம் வரும். பற்று இல்லாம வாழ்ந்தா சந்தோஷம் வருமாவது. சோகம்தான் வரும்'' சொல்லிய கலா அவன் அருகில் அமர, இருவரும் காப்பியைப் பருகி முடித்தார்கள். டூ வீலர் காற்றை மாசு படுத்தியபடி கிளம்பியது.

சந்துரு வண்டியை நிறுத்தி எதிரில் பார்த்தான். லோகேஷ் நகர். அங்கு ஃப்ளாட் வாங்க வேண்டும் என்பது நீண்டநாள் ஆசை. அந்த இடத்தில் வந்து இறங்கியதுமே, அவர்கள் நெஞ்சில் ஆசை மேகங்கள்.

''என்னங்க, பாருங்களேன், என்ன பாஷ் ஏரியா. ஸௌத் இண்டியன், பஞ்சாபி, சைனீஸ், ஸ்பானீஷ்னு எத்தனை விதமான ஓட்டல்கள், ஷாப்பிங் மால், துணி ஷோரூம்கள், பெரிய ஸ்கூல்கள், காப்பி பார்லர்கள், கம்ப்யூட்டர் சென்டர்கள்... ஏங்க ஏங்க... இங்கே ஃப்ளாட் வாங்கிடணும்க. ஆஹா, வசதின்னா வசதி, அப்படி ஒரு வசதி'' கலாவின் வாய் விரிந்தது விரிந்ததுதான்.

கிடைத்த அட்ரஸைத் தேடிப் போய்ப் பார்த்தனர். 'ஸ்வர்க் பில்டர்ஸ்.' இவர்கள் சென்றபோது இன்னொருவரும் விசாரிக்க வந்திருந்தார்.

''நாங்க இந்த ஏரியாவில் ஃப்ளாட் வாங்க ஆசைப் படறோம். நீங்க இப்ப ஏதாவது கன்ஸ்ட்ரக்ட் பண்ணிக்கிட்டு இருக்கீங்களா?'' கேட்டான் சந்துரு.

''ஓ.எஸ், இந்த லோகேஷ் நகரி



லேயே மூன்று இடங்களில் கன்ஸ்ட்ரக்ஷன் வேலை நடந்துக்கிட்டிருக்கு. சில ஃப்ளாட்ஸ் புக் ஆயிடுச்சு. உங்களுக்கு எத்தனை ஸ்கொயர் ஃபீட்டில் வேணும்?'' கேட்டார்.

''ஒரு எழுநூறு எண்ணூறு அடி...'' சொன்னான்.

''ஒரு ஸ்கொயர் ஃபீட் எவ்வளவு ஆகுது?''

''இரண்டாயிரத்து முந்நூறு ரூபாய்!''

''அப்ப எழுநூற்றைம்பது ஸ்கொயர் ஃபீட்டுக்கு....''

''டோட்டல் எக்ஸ்பன்ஸ் கிட்டத்தட்ட இருபது லட்சம் ஆயிடும் சார்'' அவர் பதில் அளித்தார்.

''என்ன சார் சொல்றீங்க?'' கேட்டபடி சந்துரு வாயைப் பிளக்க, கலாவுக்குத் தலை சுற்றியது. ''என்ன சார் சொல்றீங்க? ஒரு ஸ்கொயர் பீட் இரண்டாயிரம் ரூபாய்க்கு மேலேயா. ஆயிரம் ரூபாய்கிட்டே இருந்ததா சொன்னாங்க. நீங்க என்னடான்னா இரண்டு மடங்குக்கு மேலே சொல்றீங்க?'' சந்துருவால் நம்ப முடியவில்லை.

## நியூஸுக்கே நியூஸ்!

**ரா**ஜ் டிவி நிஜந்தன், அசோக மித்ரனின் தீவிர விசிறி.




''சார், எந்த வருஷத்தைப் பத்தி பேசறீங்க நீங்க? அது இரண்டு வருஷத்துக்கு முன்னாடி இருந்த கதை'' பில்டர்ஸின் உரிமையாளர் சொல்ல, சந்துருவுக்கு மேலும் அதிர்ச்சி!

''அப்ப இரண்டு வருஷத்துக்குள்ளே ரேட் இரண்டு மடங்கு ஏறிடுமா. என்ன சார் அநியாயமா இருக்கு?'' கலா, தன் பங்குக்கு அதிர்ச்சியை வெளியிட்டாள்.

''இதுவே குறைவு சார். அடுத்த மாசம் இன்னும் ஒரு ப்ராஜக்ட் ஆரம்பிக்கப் போறோம். அது இன்னும் இருநூறு ரூபாய் அதிகமானாலும் ஆச்சரியப்படறத்துக்கு இல்லை. உங்களுக்கு இன்ட்ரஸ்ட் இருந்தா உடனே பண்ணுங்க. நாளைக்கே கூட மீதி எல்லாமும் புக் ஆனாலும் ஆயிடும். சொல்லுங்க, ஒரு ஃப்ளாட் புக் பண்ணிடவா?'' உரிமையாளர் பிஸினஸ் மூடுக்கு வந்தார்.

சந்துருவுக்கும் கலாவுக்கும் என்ன சொல்வதென்று தெரியவில்லை. அவர்கள் நினைத்து வந்த நிலைமை என்ன? அந்த ஏரியாவுக்கு வந்த உடனே, அதுவும் ஃப்ளாட் வாங்க வேண்டும் என்ற ஆசையில் வந்த உடனே, கனவு பல மடங்கு அதிகரித்ததே. ஆனால்.... ஆனால் அவர்களுக்கு எட்டாத உயரத்தில் அவர்கள் ஆசை இருப்பதை எண்ணி மனம் துடித்தது. மனத்தில் ஒரு இனம் புரியாத சோகம். கனவுகள் தூள் தூளாக ஆனதை உணர உணர, இருவர் உள்ளங்களிலும் வருத்த இழைகள்.

''இவ்வளவுதானா சார். இருபது லட்சம்தானா...'' அங்கு வந்த அந்த மற்றொரு ஆள் சொல்ல, சந்துருவுக்கு அவரைப் பார்க்க பொறாமை. இவ்வளவுதானாவாவது? வெந்த புண்ணில் வேலைப் பாயச்சுகின்றானே! அந்த ஆள் மேலும் விசாரிக்க ஆரம்பிக்க, இருவரும் தலையைச் சொறிந்து கொண்டு வெளியே வந்தனர். வாயே திறக்கவில்லை. மனம்

தளர்வடைந்த நிலையில், சூடாக ஒரு காப்பி சாப்பிட வேண்டும் என்று இருவர் நாக்கும் கெஞ்ச, ஓட்டலுக்குள் நுழைந்தனர்.

**கா**ப்பி சாப்பிட்டு அவர்கள் வெளியே வந்த போது, அந்த ஆள் ஸ்வர்க் பில்டர்ஸில் அலுவலகத்தில் இருந்து வெளியே வந்தார். "ஏன் சார், பதினைந்து லட்சம்னதும் இவ்வளவு தானான்னு கேட்டீங்களே. நீங்க இன்னும் அதிக' விலையில் ஃப்ளாட் வாங்கப் போறீங்களா, நீங்க ஒரு பிஸினஸ்மேனா?" அதிசயமாக, ஒரு குழந்தை போலக் கேட்டான் சந்துரு.

## நியூஸுக்கே நியூஸ்!

**ஜெ**யஸ்ரீ சுந்தரின் திருமண நாளும், அண்ணா பிறந்த நாளும் ஒன்றே... செப்டெம்பர் 15.



சிரித்தார் அந்த ஆள்.

"நானா, பிஸினஸ்மேனா, என் கிட்டே நிறையப் பணமா...? வாய்க்கும் வயிறுக்கும் சரியாயிருக்கு சார். ஒரு கம்பெனியில் வேலை செய்யறேன். சம்பளம் மாசம் நாலாயிரம் ரூபாய் சார். இரண்டு பொண்ணு. ஒரு பையன். அவங்களை வளர்க்கறதே பெரும்பாடு. இந்த இடத்துக்கு ஒரு வேலையா வந்தேன். வேலை முடியலை. சம்பந்தப்பட்ட ஆள் வர இன்னும் கொஞ்சம் நேரம் ஆகும். சும்மா போர் அடிச்சுது. உள்ளே நுழைஞ்சு வம்படிச்சேன். கையில் ஆயிரம் ரூபாய் கூடக் கிடையாது சார். நானாவது ஃப்ளாட் வாங்கறதாவது! ஜாலியா கொஞ்ச நேரம் பொழுது போச்சு" சொல்லி விட்டுச் சென்றவன் உதட்டில் 'உலகம் பிறந்தது எனக்காக, ஓடும் நதிகளும் எனக்காக' பாட்டு. உல்லாச வெள்ளத்தில் அவன்.

கையில் ஏழு எட்டு லட்சம் வைத்துக் கொண்டு, ஃப்ளாட்டின் ரேட் சொன்னபோது, நாம் மயங்கி விழப் பார்த்தோம். அதிர்ச்சியாக இருந்தது. மனத்தில் சோகம், கவலை பிறந்தது. ஆயிரம் ரூபாய் கூட இல்லாதவன் ஜாலியாகக் கேட்டுக் கொண்டிருந்தான் என்றால், ஆச்சரியமாக உள்ளதே! இதற்கு என்ன காரணம்? யோசித்துப் பார்த்தான் சந்துரு. மூளையைக் கசக்கினான். யோசனை யுத்தத்துக்குப் பிறகு உண்மை புரிந்தது.

'நமக்கு அந்த ஃப்ளாட் வாங்கும் ஆசை இருந்தது. அவனுக்கு இல்லை. அதனால்தான் கையில் பணம் இருந்தும் அந்தப் பணத்தைக் கொண்டு, நாம் நினைத்த இடத்தில், வெறித்தனமாக ஆசைப்பட்ட இடத்தில், ஃப்ளாட் வாங்க முடியவில்லையே என்று மனம் தவித்தது, துடித்தது, கவலைப்பட்டது. இருபது லட்சம் என்றதும் அதிர்ச்சிக்குள்ளானது. ஆனால் அந்த ஆள், கையில் ஆயிரம் ரூபாய்கூட இல்லாதவன், வீடு வாங்கும் ஆசை இல்லாததால் அதிர்ச்சியுறவில்லை. தன் மன அமைதியை இழக்கவில்லை. சந்தோஷமாகவே இருந்தான். ஆகவே ஆசை இருந்ததனால்தான் துன்பம் வந்தது அல்லவா?

'பற்றற்று இருந்தால் மனத்தில் கவலைகள் போய் சந்தோஷம், நிம்மதி உண்டாகும்' சில மணி நேரங்களுக்கு முன் தான் புத்தகத்தில் படித்தது நினைவுக்கு வந்தது.

அவன் வாய் முணுமுணுத்தது. 'சாமியார் எழுதியது சரிதான்'

**க**டைசி பத்து ஓவரில் நூறு ரன்களை அடித்துக் குவிக்கும் இந்திய அணி போல், கடைசி ஒரு மாதத்தில்தான் மாங்கு மாங்கென்று சிலபஸ் முடிப்பது நம் பள்ளி, கல்லூரிகளின் வழக்கம்.

ஆனால் ஒவ்வொரு செமஸ்டரிலும் ரெகுலர் பாடங்களோடு, கூடுதலாக ஒரு டிப்ளமோவும் படிக்க வேண்டும் என்று அப்ளிகேஷன் ஃபார்ம் வாங்குவதிலிருந்தே வித்தியாசமாகச் செயல்பட்டு வியக்கவைக்கிறது. சென்னை வேப்பேரியிலுள்ள ஜி.எஸ்.எஸ். ஜெயின் மகளிர் கல்லூரி.



'இருக்கும் பாடங்களைப் படிப்பதற்கே இருபத்து நான்கு மணி நேரம் போதவில்லை. அதில் கூடுதலாக டிப்ளமாவா?' என்று மனதில் அசை போட்டுக் கொண்டே கல்லூரிக்குச் சென்றால் கேட் வாசலில் கறுப்புப் பூனை, கறுப்பு யானை, இஸட், டபிள்யூ என அத்தனை பாதுகாப்புத் தடைகளையும் தாண்டித்தான் உள்ளே விடுகிறார்கள்.



அடடா, பூக்களுக்கு கை, கால் முளைத்து சுடிதார், டாப்ஸ், ஜீன்ஸ் அணிவித்தது போல், எங்கெங்கு காணினும் பெண்கள். 'இசை கேட்டால் தாவரங்கள் செழித்து வளரும்' என்பது போல், எப்போதும் ஒலிக்கும் டீன்ஏஜ்களின் 'கியாமுயா' சத்தத்தில், சிரிப்பலையில் மரங்களெல்லாம் அழகாக பூத்துக் குலுங்கிக் கொண்டிருந்தன.

வந்த விஷயத்தை ஸ்டூடண்ட் பிரசிடெண்ட் மம்தாவிடம் சொல்லி முடித்ததுமே, ஒரு அவசர ஆலோசனைக் கூட்டத்தைக் கூட்டிவிட்டார்.

"**இ**து ஆர்ட்ஸ் காலேஜ்தான். இதுல வெறும் ஆர்ட்ஸ் பாடங்களை மட்டும் படிச்சு வெளியில போறவங்களோட நிலைமை எல்லோருக்கும் தெரிஞ்சதுதான். அதனால ரெகுலர் டிகிரியோடு, தொழிற்கல்வி

டிப்ளமாவை கூடுதலா படிக்கணும்கிறது இங்கே கட்டாயம். டிப்ளமா இன் விஷுவல் கம்யூனிகேஷன், வெப் டிசைனிங், கம்ப்யூட்டர் அப்ளிகேஷன், அக்ளெண்ட்ஸ் டாலி, ஹார்டுவேர், குக்கரி, ஃபிட்னஸ்... இப்படி பன்னிரண்டு விதமான பாடங்களிலிருந்து அரை டஜனைத் தேர்ந்தெடுத்து மூணு வருஷத்துக்குள்ளே முடிச்சாதான் டிகிரி சர்டிபிக்கேட்டே கையில தருவாங்க."

"இது கூடுதல் சுமையில்லையா?" என்ற கேள்விக்கு சிம்பிளாக பதில் வந்தது. "சான்ஸே இல்லை. எல்லாமே ப்ராடிக்கல் பேஸ்ட் சப்ஜெக்ட்ங்கிறதால ரொம்ப





# அடிக்குதே அதிர்ஷ்டக் காத்து!

முதல்வர் மாலதி

இன்ட்ரஸ்டிங்கா இருக்கு. எங்க மேல இவ்வளவு தூரம் அக்கறை காட்டற கல்லூரிக்கு வருஷா வருஷம் குறைந்தது 98% ரிசல்ட் காண்பிச்சிருவோம்'' என்று ஸ்மைலிங்காக பதிலளித்தவர்கள் அடுத்து, சுவாரஸ்ய விஷயமொன்றைக் கூறினார்கள்.

''எங்க காலேஜுல டெய்லி ஏதாவது விழா நடந்துட்டேயிருக்கும். அதுல தவறாம ஏதாவதொரு வி.ஐ.பி. கலந்துக்கிட்டு லெக்சர் கொடுப்பாங்க. எங்க காலேஜ் ராசிப்படி இங்க வந்த அப்துல் கலாம், அடுத்த சில நாட்கள்ல ஜனாதிபதி ஆயிட்டாரு. (அப்படிப்போடு!) அலெக்ஸாண்டர் கவர்னரானாரு. விஜயகுமார் ஐ.பி.எஸ்.-ஐ கூப்பிடலாம்னு நினைச்சிருந்தோம். அவர் அந்த ராசியிலேயே(!) வீரப்பனை வதம் பண்ணிட்டாருன்னா பார்த்துக்கோங்களேன். நீங்களும் இந்த ஆர்டிகலை நல்லா எழுதுங்க. உங்கப் பக்கமும் அதிர்ஷ்டக் காத்து அடிக்கும்'' என்று முடிக்கும்போது 'ஹோ'வென இரைச்சல். (காது 'கொய்ங்')



ஓவர் டு பிரின்ஸிபல் மாலதி. ''எங்க பசங்ககிட்ட பேசினீங்களா? எவ்வளவு அமைதியான பொண்ணுங்க இல்லை!'' என்றார். (ஆமா!) ''கடுமையான போட்டிகளைக் கொண்ட உலகம் இது. அதனாலதான் ஒன்லி நூறு ரூபாய் ஃபீஸ்ல ஒவ்வொரு செமஸ்டரிலயும் ஒரு டிப்ளமா கோர்ஸ் பண்ண வைச்சு, கூடுதல் தகுதிகளை வளர்த்துவிடறோம். ப்ரைவேட் காலேஜ் என்றாலும், நூறு சதவிகித மெரிட்டில்தான் மாணவிகளைத் தேர்வு செய்கிறோம்.

''பூசின உடல்வாகுள்ள பெண்கள் வெளியே ஆயிரக் கணக்கில் செலவழிச்சு உடல் இளைக்க முற்படுவார்கள். ஆனால் எங்களிடம் டயட்டிஷியன் கோர்ஸ் மூலமாக மிகச் சுலபமாக்குகிறோம். அதேபோல எங்கள் மாணவிகளின் பர்சனல் குறைகளைத் தீர்க்கவும் தனியே கவுன்ஸலிங், அதற்கென ஆசிரியர்கள் உண்டு. வெறும் பாடங்களை மட்டும் ஒப்பித்து வெளியுலகில் அவர்கள் கஷ்டப்படக் கூடாது. ஏனென்றால் அவர்கள் எங்கள் குழந்தைகள்'' என்று டச்சிங்காகப் பேசினார் முதல்வர் மாலதி. கல்லூரியின் நிஜ ஐஸ்வர்யா ராய் இவர்தானாம்!

''பெண்ணாய்ப் பிறந்தாலும் ஜி.எஸ்.எஸ். கல்லூரியில் படிக்க மாதவம் செய்திட வேண்டும்' என்று மூன்றாம் வருட காமர்ஸ் மாணவி உஷா ராகத்தோடு பாடிய போது, 'யாஹூ... ஊ' என்று ஆர்ப்பரித்து மகிழ்ச்சி வெள்ளத்தில் கரைபுரண்டு ஓடினர், இதர மாணவிகள்.

**- ச.ந.கண்ணன்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

‘தெய்வப் பிறவி’ மதுரையில் ஒரு தியேட்டரில் ஓடிக் கொண்டிருந்தது. அப்படத்தில் சிவாஜியும், எஸ்.எஸ்.ஆரும் மோதிக் கொள்ளும் காட்சிகளின் போது, ஒரு நாள் உணர்ச்சி வசப்பட்ட இரண்டு பேரின் ரசிகர்களும் ஒருவரையொருவர் தாக்கிக் கொண்டார்கள். மோதல் முற்றி கத்தியாலும் குத்திக் கொண்டார்கள். இச் சம்பவம் மதுரையில் அப்போது மிகப் பெரிய பரபரப்பை ஏற்படுத்தியதை என்னால் இன்னமும் மறக்க முடியவில்லை. தெய்வப் பிறவி




# பூனைக்கு

1960 ஏப்ரல் மாதம் 13ம் தேதி தமிழ்ப் புத்தாண்டு தினத்தன்று வெளியானது. பொதுவாக தமிழ் வருடப் பிறப்பு ஏப்ரல் 14ம் தேதிதான் வரும். ஆனால் அந்த ஆண்டு லீப் வருடமானதால், பிப்ரவரியில் இருபத்தொன்பது நாட்கள். அதனால் தமிழ் மாதங்களில் ஒரு நாள் முன்னதாகி, ஏப்ரல் 13ம் தேதியே தமிழ்ப் புத்தாண்டு வந்தது.

‘தெய்வப்பிறவி’ பெரும் வெற்றிப் படமாக அமைந்தது. அந்த வெற்றிக்கு கே.எஸ். கோபால கிருஷ்ணனின் அருமையான வசனங்களும் ஒரு முக்கியமான காரணம்.

அதே ‘தெய்வப்பிறவி’யை ‘பிந்தியா’ என்ற பெயரில் ஹிந்தியில் எடுத்து, அதே வருடம் டிசம்பர் மாதம் 29ம் தேதி வெளியிட்டோம். ஆனால் அது தமிழைப் போல வெற்றியடையவில்லை. ‘தெய்வப் பிறவி’யின் வெற்றிக்கு கே.எஸ். கோபாலகிருஷ்ணனின் பங்கும், கலைஞர்களின் நடிப்பும் முக்கியக் காரணங்களாக அமைந்ததை யாரும் மறுக்க முடியாது. ஆனால் ‘பிந்தியா’வில் சிவாஜி, எஸ்.எஸ்.ஆர், பத்மினி போல நடிப்பை வெளிப்படுத்த, அந்தக் கலைஞர்களால் முடியவில்லை என்பது உண்மை.

இதை சிவாஜி எங்களிடம் முன்னதாகவே சொல்லியிருந்தார். தெய்வப்பிறவியை ஹிந்தியில் எடுக்க இருப்பது பற்றி நான் பேச்சுவாக்கில் தெரிவித்தபோது, “இது வேண்டாம் சரவணன். சரியா வராது. தமிழ்ல நான், எஸ்.எஸ்.ஆர். பப்பி எல்லாம் கொடுத்த பர்ஃபார்மென்ஸ்லதான் படம் நின்னுது. இந்த பர்ஃபார்மென்ஸ் ஹிந்தியில் பண்ண மாட்டாங்க. எதுக்கு வீணா ட்ரை பண்றீங்க?” என்றார் நடிகர் திலகம்.

இப்படி அவர் சொன்னபோது, அருகிலிருந்த (கிருஷ்ணன்) பஞ்சுவுக்குக் கோபம்கூட வந்தது.

ஆனால் கடைசியில் சிவாஜியின் கணிப்பு, நூற்றுக்கு நூறு சரியாக அமைந்ததை உணர்ந்தோம்.

என் மைத்துனர் அருண் வீரப்பன் நல்ல திரைப்பட ஆர்வலர். திருமணத்துக்கு முன்பே அவருக்கு அந்த ஆர்வம் வளர்ந்திருந்தது. அப்போது திருச்சியில் நாங்கள் அவரது வீட்டுக்குச் சென்றிருந்தபோது, திரைப்படங்கள் பற்றிய விவரங்களை உலக அளவில் அவர் சேகரித்து

வைத்திருந்ததை நான் பார்த்திருக்கிறேன். திருமண மாகி எங்கள் வீட்டு மாப்பிள்ளையாக அவர் ஆன பின்பு, அந்த ஆர்வம் அவருக்குள் வளர்ந்து கொண்டு வந்தது.





நான் தயாரிப்பு வேலைகளையும், நிர்வா கத்தையும் கவனித்துக் கொண்டு வந்தாலும், தனியாகப் படம் தயாரிக்கவில்லை. 'நமக் கென சொந்தமாக ஒரு படத்தை நாமே தயாரித்தால் என்ன?' என்று ஒரு நாள் என் சகோதரர்கள் முருகன், குமரன், நான், என் மைத்துனர் அருண் வீரப்பன் எல்லோரும் ஆலோசனை செய்தோம். அப்போது என் இளைய சகோதரர் பாலசுப்பிரமணியன், லயோலா கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தார். 'செய்யலாம்' என்று முடிவுக்கு வந்தோம். இந்த முடிவுக்கு எங்கள் தாயார் ராஜேஸ்வரி அம்மையாரின் முழு ஆதரவும் இருந்தது.

அப்பச்சியிடம் பர்மிஷன் கேட்க வேண்டுமே, யார் போய்க் கேட்பது?

இது போன்ற முக்கியமான தருணங்களில், பூனைக்கு மணி கட்டும் பொறுப்பை வழக்கம்போல எங்கள் தாயாரிடம் ஒப் படைத்தோம். அப்பச்சி மாடியில் தனியாக இருந்த போது, ஒரு நாள் எங்கள் தாயார் அவரைச் சந்தித்தார்.

# மணி!




## ஏவி.எம்.சரவணன்

"பசங்க தனியா படம் எடுக்கணும்னு ஆசைப் படறாங்க."

"இப்பவும் அவங்கதானே எல்லாத்தையும் பாத்துக் கிறாங்க."

"ஆமாம். இருந்தாலும் முழுசா அவங்களே பொறுப் பேத்து படம் பண்ணணும்னு ஆசைப் படறாங்க. நீங்க சரின்னு சொல்லணும்."

"சரி... செய்யட்டும்..."

இந்த இடத்தில் நான் ஒன்றைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும். எங் களுக்கு எம்.கே.சீனிவா சன் என்று சட்ட ஆலோ சகர் ஒருவர் இருந்தார். அப்பச்சிக்கு ரொம்ப நெருக்கம். எங்கள் குடும் பத்தில் ஒருவர். அவருக்கு நாங்கள் சினிமாத் தொழி லில் ஈடுபடுவதில் ஆர்வமே இல்லை.

"சினிமா ரொம்ப ரிஸ்க்கி பிஸினஸ். பசங்களை அதில் விடாதீங்க. வேற ஏதாவது தொழில் செய்து அவங்க முன்னுக்கு வரட்டும்" என்று அவர் அப்பச்சியிடம் சொன்னபோதெல்லாம், எங்கள் தாயார்தான் எங் களுக்கு ஆதரவாகப் பேசிய வர்.

"அவங்க சினிமாவில்

தான் இருக்கணும். உங்க வழியிலேயே அவங்க வந்து, உங்க பிஸினஸைத் தொடர்ந்து பண்ணி நல்லா இருக்கணும்" என்று என் தந்தையிடம் வாதாடியவர். தாயாரின் ஆதரவு இல்லாமல் இருந்தால், நாங்களெல்லாம் இன்று சினிமாவில் இருந்திருப்போமா என்பது சந்தேகமே.

தனியாகப் படம் தயாரிக்க அப்பச்சியின் அனுமதியை அவர் வாங்கித் தந்தார். அப்போது 'மானமே பெரிது' என்று ஒரு கதை எங்கள் டிஸ்கஷனில் இருந்து வந்தது. ஆனால் அது சரியாக வரவில்லை. நாங்கள் எதிர்பார்த்தபடி ஷேப் ஆகாமல் அரைகுறையாகவே இருந்தது. நாங்களே பொறுப்பெடுத்துச் செய்யும் முதல் படம் தோற்றுவிடக் கூடாது என்கிற நியாயமான ஆர்வத்தில், வேறு நல்ல கதையை தேடத் தொடங்கினோம்.

அப்போது எங்களிடம் கே.ஆர். வெள்ளைச்சாமி என்று ஓர் ஊழியர் இருந்தார். விசுவாசம் மிக்கவர். வேலையிலிருந்து ஓய்வு பெற்று விட்டாலும், இப்போதும் அடிக்கடி வந்து என்னைப்



• 'தெய்வப்பிறவி' படத்தில்...

பார்த்து விசாரித்து விட்டுப் போவார். 'மானமே பெரிது' கதையை நாங்கள் டிஸ்கஸ் செய்து கொண்டிருப்பதை அறிந்து, "ஏன் ஸார் அந்தக் கதையை வச்சி முட்டிக்கிட்டிருக்கீங்க. ஜாவர் சீதாராமன் ஸார் ஒரு நல்ல கதை வச்சிருக்கார். அப்பச்சிகிட்டதான் இப்போ அது இருக்கு. அதை 'ட்ரை' பண்ணலாமே" என்று உரிமையுடன் ஐடியா தந்தார்.

மேற்கொண்டு விசாரித்ததில் 'பட்டுவும் கிட்டுவும்' என்ற அந்தக் கதையை ஜாவர் சீதாராமன் அப்பச்சியிடம் தந்திருப்பதாகவும், நல்ல கதைதான் அது என்றாலும், அப்போதைக்குப் பயன்படுத்திக் கொள்ள இயலாத தமது நிலையை அப்பச்சி ஜாவருக்குத் தெரிவித்து விட்டதாகவும், இதற்கிடையில் வேறு ஒரு கம்பெனிக்கு அந்தக் கதையைத் தரலாமே என்று, அன்று மாலை அதைத் திரும்பப் பெற்றுக் கொள்ள ஜாவர் வர இருப்பதாகவும் தகவல் கிடைத்தது.

அப்பச்சியிடம் போய்ச் சொன்னோம்.

"நல்ல வேளை. சரியான சமயத்தில் வந்து சொன்னீங்க. இன்னிக்கு சாயங்காலம் நாலு மணிக்கு ஜாவர் என்னைப் பார்த்து கதையை வாங்கிப் போவதற்காக வர்றார். அவர் வந்ததும் சொல்லியனுப்பறேன். வந்து பாருங்க" என்றார்.

அதே போல் சொல்லியனுப்பினார். போனோம்.

"இந்தக் கதையை நம்ம பசங்க சொந்தமா எடுக்க ஆசைப்படறாங்க, ஜாவர்" என்றார் அப்பச்சி.

மிகவும் மகிழ்ச்சியடைந்த ஜாவர், 'அப்படியே செய்யட்டும்' என்று அந்தக் கதையை எங்களுக்குத் தந்தார்.

அந்தக் கதைதான், 'களத்தூர் கண்ணம்மா'வாக எடுக்கப்பட்டது.

அந்தப் படம் எடுப்பதற்கு முன்பாக பலவாறாக யோசித்தேன். அப்போது 'அமர தீபம்', 'உத்தமபுத்திரன்' போன்ற வெற்றிப் படங்களை இயக்கி டி.பிரகாஷ்ராவ் பிரபலமாக இருந்தார். 'களத்தூர் கண்ணம்மா'வுக்கு அவரை டைரக்டராகப் போட வேண்டும் என்று எங்களுக்கு ஆசை.

ஏவி.எம். நிறுவனத்தில் எங்களுக் கென்று ஒரு டைரக்டர் யூனிட் இருந்ததால், 'வெளியிலிருந்து பிரகாஷ் ராவைக் கூப்பிட வேண்டுமா' என்ற கேள்வி எழுந்தது. எங்கள் டைரக்டர்களுக்கு பதினையாயிரம் முதல் இருபதாயிரம் ரூபாய் வரைதான் அப்போது சம்பளம். ஆனால் பிரகாஷ் ராவ் நாற்பதாயிரம் ரூபாய் சம்பளம் கேட்டார்.

அப்பச்சியிடம் விவரம் சொன்னோம். எங்கள் ஆர்வத்துக்கு அணை போட

விரும்பாத அவர், 'சரிப்பா செய்யுங்க' என்று சொல்லி விட்டார்.

அச்சமயத்தில் 'யார் பையன்' படத்தில் நடித்து ரசிகர்களை மிகவும் கவர்ந்திருந்த டெய்ஸிராணி என்ற குழந்தையையும், களத்தூர் கண்ணம்மாவுக்காக ஒப்பந்தம் செய்திருந்தோம்.



• அருண் வீரப்பனுடன்...

ஒரு நாள் டாக்டர் சாரா ராமச்சந்திரன் என்பவர் எங்கள் வீட்டுக்கு வந்தார். தம்முடன் மூன்றரை அல்லது நான்கு வயதுப் பையன் ஒருவனையும் அழைத்து வந்திருந்தார். என் தாயாரைப் பார்க்க அடிக்கடி டாக்டர் சாரதா அம்மையார் வருவதுண்டு. அவர் உள்ளே என் தாயாரிடம் பேசிக் கொண்டிருந்தபோது, வெளியே அந்தப் பையன் கால் முட்டியைக் கட்டிக் கொண்டு, முகத்தில் சுரத்தில்லாமல் 'உம்'மென்று உட்கார்ந்திருந்தான்.

அவனைக் கவனித்த என் தாயார், "ஏன் இந்தப் பையன் இப்படி காலைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறான்?" என்று டாக்டரிடம் கேட்டார்.

"தெரிஞ்ச பையன். நான் இங்கே வரேன்னு தெரிஞ்சதும் 'நானும் வருவேன்... எனக்கும் ஏவி.எம். செட்டியாரைப் பார்க்கணும்னு ஆசையா இருக்கு'ன்னு சொல்லி கூடவே வந்துட்டான். நான் இங்கே வந்து இவ்வளவு நேரம் ஆகியும், அவனைப் பத்தி ஒண்ணும் சொல்லலேன்னு எம்மேல கோபம். அதான் 'உம்முனு' உட்கார்ந்திருக்கான். அவனுக்கு நடிக்க ஆசை" என்றார் டாக்டர் சாரா.

பிறகு அந்தச் சிறுவன் சில பாடல்களைப் பாடிக் காட்டினான். அப்போது பிற்பகல் நேரம். எப்போதும் சாப்பாட்டுக்குப் பிறகு சற்று கண்ணயரும் பழக்கம் அப்பச்சிக்கு உண்டு. தூங்கி எழுந்தவுடன் காலிங்பெல் அடிப்பார். உடனே காபி எடுத்துக் கொண்டு, வீட்டில் வேலை செய்யும் உதவியாளன் மேலே மாடிக்குப் போவான். இது வழக்கம்.

அதே போல அன்று மேலேயிருந்து அப்பச்சி காலிங்பெல் அடித்ததும், "இந்தப் பையனைக் கூட்டிப் போய் அப்பச்சியிடம் காட்டு" என்று என்னிடம் சொன்னார் என் தாயார்.

அழைத்துப் போனேன்.

பகலில் படுத்திருக்கும்போது கூட தன் படுக்கையருகில் இருக்கும் டேபிள் லைட்டைப் போட்டு, பல்பை 'ஸீலிங்' பக்கமாக திருப்பி வைத்திருப்பார் என் தந்தை. அப்படி கூரையில் ஃபோகஸ் ஆகிவிடுவதால் அறை முழுவதும் ஒரு வித இதமான வெளிச்சம் பரவியிருக்கும்.

நான் அந்தப் பையனை அழைத்துப் போனதும் "யாரப்பா இது?" என்று கேட்டார்.

"அப்பச்சி, இவன் நடிக்க ஆசைப் படுகிறான். கொஞ்ச நேரம் முன்னாடி கீழே எங்ககிட்ட 'சல்திகா நாம் காடி' ஹிந்திப் படத்தின் பாட்டெல்லாம் பாடிக் காட்டினான்" என்று அறிமுகப்படுத்தினேன்.

அந்தப் பையனை ஏற இறங்கப் பார்த்த அப்பச்சி, "உன்னால் டெய்ஸி ராணியைப் போல நடிக்க முடியுமா?" என்று கேட்டார்.

'முடியும்' என்பது போல அவன் தலையை ஆட்டினான். நடித்துக் காட்ட ஆரம்பித்ததும், தமது அருகில் இருந்த டேபிள் லைட்டை அந்தப் பையனின் முகத்தில் முழு வெளிச்சமும் படுமாறு திருப்பி வைத்தார். அந்த வெளிச்சம் கலை உலகின் புதிய பரிணாமத்தின் மீது போடப்பட்ட வெளிச்சம் என்பதை அப்போது நாங்கள் அறியவில்லை.

(இன்னும் சொல்வேன்)

# பறக்க



சதா சர்வ காலமும் யாரைக் கவிழ்க்கலாம், எப்படி ஊழல் பண்ணலாம், என்ன ஸ்டண்ட் அடிக்கலாம் என்றே யோசித்துக் கொண்டிருக்கும் அக்மார்க் அரசியல்வாதிகளிடையே, ஜார்கண்ட் மாநிலத்து முதலமைச்சர் அர்ஜுன் முண்டா ரொம்பவே வித்தியாசமானவர்!

தம்முடைய மாநிலத்தைச் சேர்ந்த இருபத்தைந்து பழங்குடி மாணவர்களுக்கு, ஜார்கண்ட் அரசு செலவில், விமானம் ஓட்டும் பயிற்சியைக் கற்க ஏற்பாடு செய்து தந்திருக்கிறார்... அவர்களில் பன்னிரண்டு பேர் பாண்டிச்சேரியில் உள்ள ஓரியண்ட் ஃபிளைட் ஸ்கூலில் படிப்பவர்கள்.

சமீபத்தில் உருவான மாநிலம்தான் ஜார்கண்ட். மிகவும் பின் தங்கியதும்கூட! இங்கு பழங்குடி மக்களின் எண்ணிக்கை அதிகம். வருங்கால சந்ததியினர் வளமாக இருக்க வேண்டுமென்றால், வேலை வாய்ப்பு மிக்க தொழிற்கல்வி தரப்பட வேண்டும் என்பதில் கவனமாக இருக்கும் அர்ஜுன் முண்டா, இப்படியொரு திட்டத்தைச்



• பறக்கும் படையுடன் கேப்டன் கிரி...

செயல்படுத்தியிருக்கிறார்.

"கமர்ஷியல் பைலட் லைசென்ஸ் வாங்க பதினெட்டு மாதங்கள் படிக்கணும். இருநூற்று ஐம்பது மணி நேரம் விமானம் ஓட்டி பயிற்சி பெற்றிருக்கணும். இதற்கு, பதினைந்து லட்சரூபாய் செலவாகும். இவ்வளவு பணத்துக்கு நாங்க எங்கே



போவோம்? நல்லவேளை, எங்க முதல்வர் தயவால, ஒரு பைசா செலவில்லாம படிக்கிறோம்" என்று நன்றியுடன் தழுதழுக்கிறார்கள் ஜார்கண்ட் மாணவர்கள்.

"இப்படி பதினைந்து லட்ச ரூபாயை, தனி நபர் வளர்ச்சிக்குச் செலவழிப்பது, அநாவசியமாகத் தோன்றுகிறதே?" என்று கேட்டால், "இல்லை... நாங்கள் படித்து, நல்ல வேலையில் சேர்ந்ததும், அரசாங்கம் சுட்டிக் காட்டும் இரண்டு மாணவர்களுக்கு பள்ளி இறுதி வரையிலான கல்விக் கட்டணத்தை ஏற்போம் என்று உறுதிப் பத்திரம் எழுதிக் கொடுத்திருக்கிறோம். நிச்சயம் செய்வோம்" என்றார்

# வைத்த முதல்வர்!

பிரமானந்த சிபுசோரன் ("நீங்கள் சிபுசோரனுக்கு உறவா?" என்றால் மையமாகத் தலையாட்டுகிறார்!)

ஜார்கண்ட் மாணவர்களைத் தவிர, மற்ற மாநிலத்து மாணவர்களும் பயிற்சி பெறுகிறார்கள். அதில் அருமருந்தாக, ஒரே ஒரு பெண்! ஜன்னத் சாந்து... உயர உயர பறப்பதற்காகவே டெல்லியிலிருந்து வந்திருக்கும் சீக்கிய தேவதை!



• ஏ.ஜே. வர்கீஸ்



• ஜன்னத்



• அர்ஜுன் முண்டா

"எங்கப்பா காப்டன் எஸ்.பி. சாந்து, சஹாரா ஏர்லைன்ஸில் பைலட்டாக இருக்காரு. சின்ன வயசிலிருந்தே பிளேன் பொம்மைகளை வைச்சுதான் விளையாடுவேன்! ப்ளஸ் டூ முடிச்சதும் "என்ன படிக்கிறே?'ன்னு கேட்டாரு. "நான் உங்க பொண்ணுப்பா"ன்னு சொல்லிவிட்டு

பாண்டிச்சேரிக்கு வந்துட்டேன்'' என்று சந்தோஷப்படும் ஜன்னத்திடம் ''உங்க வருங்காலக் கணவர் என்னவா இருக்கணும்?'' என்று கேட்டால், ''ஹவுஸ் ஹஸ்பெண்ட்'' என்று பளிச் பதில் வருகிறது. (யாரப்பா.. அந்த அடக்க ஒடுக்க அதிர்ஷ்டசாலி?)

ஓரியண்ட் ஃபிளைட் ஸ்கூலில் முதன்மைப் பயிற்சியாளராக இருக்கிறார் அசோக்.கே. கிரி.

''நானும் ஜார்கண்ட் மாநிலக்காரன் தான். நான் அப்போது ஜம்ஷெட்பூர் ஏர் போர்டில் பைலட்டாகப் பணிபுரிந்து கொண்டிருந்தேன். எங்கள் மாநில எம்.எல்.ஏ.வான அர்ஜுன் முண்டாவைச் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்த போது, விரைவில் நிறைய விமான சர்வீஸ்கள் வரவிருப்பதால், பைலட்டுகளுக்கு டிமாண்ட் அதிகமாகும் என்று காஷுவலாகத் தெரிவித்தேன்.

''அர்ஜுன் முண்டா, சமுதாய நலத் துறை மந்திரி ஆனதும், இந்தத் திட்டத்துக்குப் பிள்ளையார் சுழி போட்டார். முதல்வர் ஆனதும் செயல்படுத்தியே விட்டார். புதிய ஊர், புதிய பாஷை என்று நம்ம ஊர் மாணவர்கள் தவித்து விடக் கூடாது என்பதால், நானும் வேலையை விட்டுவிட்டு பாண்டிச்சேரிக்கு வந்து விட்டேன். வாரம் ஒரு முறை மாணவர்களின் முன்னேற்றம் பற்றிய ரிப்போர்ட்டை ஜார்கண்ட் மாநில அரசுக்கு அனுப்புகிறோம். அர்ஜுன் முண்டாவும் அடிக்கடி அன்புடன் நலம் விசாரிப்பார்'' என்றார் பெருமையாக!

''பாண்டிச்சேரி லாஸ்பேட் பகுதியில் சிவில் ஏராட்ரோம் வளாகத்தில் இருக்கும் ஓரியண்ட் ஃபிளைட் ஸ்கூலுக்கு டிசம்பர் பதினாறு வந்தால், பத்தாண்டுகள் நிறைவுறுகிறது. இந்தியாவின் நம்பர் ஒன் தனியார் விமானப் பயிற்சிப் பள்ளியாக இருப்பதோடு, மெடிக்கல் இவாகுவேஷன் பணியிலும் சிறந்து விளங்குகிறது.



## நியூஸுக்கே நியூஸ்!

சமீபத்தில் தாயாகியிருக்கும் சன் டீ.வி ரத்னா, இரட்டைக் குழந்தைகளுக்கு அத்விகா, அனிருத் என பெயர் சூட்டியிருக்கிறார்.

யாருக்காவது அடிபட்டாலோ, தீவிர சிகிச்சை தேவைப்பட்டாலோ, உடனடியாக விமானப் போக்குவரத்து வசதி செய்து தந்து, எத்தனையோ உயிர்களைக் காப்பாற்றியிருக்கிறோம். இன்னொரு நல்ல செய்தி. விமானத் துறையில் நிறைய தனியார் நிறுவனங்கள் வரவிருக்கின்றன. இந்திய அரசாங்கத்தின் விமான சர்வீஸும் மிக நவீனமாகவிருக்கின்றது. அதெல்லாம் நடந்தால், சாமானியர்களும் விமானங்களில் பறக்கலாம்'' என்றார் ஓரியண்ட் ஃபிளைட் ஸ்கூலின் கூடுதல் இயக்குநர் ஆனந்த் ஜேக்கப் வர்கீஸ்.

''ஊரெல்லாம் பிடிச்சிருக்கா?'' என்று கேட்டால், ''யா, உங்க இட்லி சாம்பார், சன் டீவி, 'கில்லி' விஜய் எல்லாமே பிடிச்சுருக்கு'' என்கின்றனர் கோரஸாக!

- வாணி ஸ்ரீ

# கபாலியின் கணினி மொழி!



எண்ட்டர் : பூட்டிய வீட்டில் (திருடப்) புகுவது
கீ போர்டு : பல வகை சாவிகள் கொண்ட கொத்து
மானிட்டர் : தொழிலுக்குப் போகுமுன் அருந்தும் உற்சாக பானம்
விண்டோஸ் : எளிதான வழி
சாஃப்ட்வேர் : துணிமணிகள் கிடைப்பது
ஹார்டுவேர் : நகை நட்டு கிடைப்பது
புரோகிராம் : இருட்டில் நடப்பது
மௌஸ் : சில சமயம் இருட்டில் குறுக்கே நடமாடிக் கெடுப்பது.
லெஃப்ட் கிளிக்: தொட்டுப் பார்த்து வேண்டாமென்று ஒதுக்குவது
ரைட் க்ளிக் : காஸ்ட்லி பொருளை 'லபக்'குவது
மெமரி : திருடின இடத்துக்கே திரும்பவும் போகாத நினைவாற்றல்
பிரிண்ட் : கைரேகை பதியாமல் கவனம் தேவை
டூல்ஸ் : கத்தி, கயிறு, ஸ்குரு டிரைவர், ஸ்பேனர்
ஹெல்ப் : வீட்டுக்காரர்கள் வெளியூர் செல்வது
ஷிஃப்ட் : பிரச்னை வந்தால் ஏரியா மாறுவது
கண்ட்ரோல் : போலீஸை (மாமூலாக) கட்டுக்குள் வைத்திருப்பது
குவிட் / எக்ஸிட் / எஸ்கேப்: தப்பிச் செல்லும் வழிகள்.

கற்பனை: **வசந்தி வள்ளுவன்**

# மகுட வைரம்

## 21. மலையேறிய தமிழ்

தன்னைப் பற்றியே அதிகம் சிந்திப்பவர்களுக்கும், சற்றுத் தாழ்வாகவே நினைத்துக் கொண்டிருப்பவர்களுக்கும், உண்மையை ஒப்புக் கொள்வதிலும், ஏற்றுக் கொள்வதிலும் சற்றுத் தயக்கமிருக்கவே செய்கிறது. அந்தத் தயக்கம் எதிரிலிருப்பவரின் கேள்விக்கு உண்மையைக் கூறாமல், வேறு காரணங்களையே தேடுகிறது. பராந்தகனும் அந்த நிலையில்தான் இருந்தான்.

பகதத்தனின் உருண்ட முகத்திலிருந்த பெருவிழிகள் பராந்தகனை நோக்கி உருண்டு உருண்டு விழித்தன. "பரசுராமரிடம் உண்மையை ஒப்புக் கொண்ட கர்ணனைப் போல் நீயும் ஒப்புக் கொள். அதுதான் வீரனுக்கு அழகு. இளவரசியைப் பற்றி உன் மனத்தில் ஒன்றும் தோன்றியதேயில்லையா?"

ஒருமுறை தலையைக் குலுக்கிக் கொண்ட பராந்தகன், "பகதத்தா, என்னைக் குழப்பாதே. எனக்குத் தோன்றுவது இருக்கட்டும். அவள் மன்னர் மகள். நான் சோழ நாட்டின் ஏழை விவசாயி. நம் படைத்தலைவர் உதவியால் தற்போது வீரனாயிருக்கிறேன். அவ்வளவே" என்றான்.

"ஆமாம் அப்பனே, ஆமாம். அங்கேதானிருக்கிறது விஷயம். பெண்களுக்கு பிறந்த வீட்டின் மீதும், ஊரின் மீதும், மனிதர்கள் மீதும் இருக்கும் அன்பு அலாதியானது. தங்கள் ஊர் உத்தரகுமாரனைக் கூட அர்ச்சுனனாகக் கொண்டாடுவார்கள்."

"நான் என்ன சாதித்து விட்டேன்?"

"அதைத்தான் முன்னமே சொன்னேனே. பெண்களின் பார்வைக்கு அர்த்தம் காண்பது ஒரு கலை. வியாசரும், பராசரரும் சொல்லியிருக்கிறபடி பார்த்தால், இளவரசியின் மனதை நீ பறித்தாகிவிட்டது."

"மன்னர் ஏற்றுக் கொள்ள வேண்டாமா?"

"அப்படி வா வழிக்கு. மன்னர் ஏற்றுக் கொள்வதானால் உனக்குச் சம்மதம் தானா?" என்று நகைத்த பகதத்தன், "பராந்தகா, மகள் தேவயானிக்காக வயிற்றைக் கிழித்துக் கொண்டு மாண்டு போக ஒப்புக் கொண்ட சுக்ராச்சாரியாரை விட மன்னர் ஒருபடி மேலானவர். ஏறக்குறைய எல்லாத் தந்தைகளுமே மகள் விஷயத்தில் அப்படித்தான். தவிர, குலத்தையும் அந்தஸ்தையும்விட அறிவையும், வீரத்தையும் மதிப்பவர் மன்னர். இந்தப் போர்கள் முடிந்தபின், பாண்டியரிடம் உனக்கு உயர்ந்த பதவி நிச்சயம் கிடைக்கும். பிறகென்ன தடை? ஏதோ, நீ பெரிய மனிதனாகி என்னைக் கவனிக்காமல் விட்டால் சரி, துரோணரைக் கவனிக்காமல் விட்ட துருபத ராஜனைப் போல" - என்ற பகதத்தன் பெரிதாக நகைத்தபடியே கால்களை நீட்டிப் படுத்தான். சற்று நேரத்தில் உறங்கியும் போனான்.

பராந்தகனுக்கு உறக்கம் எளிதில் வருவதாகத் தெரியவில்லை. அறிவுக்கும் உணர்ச்சிக்கும் ஏற்படும் போராட்டம் மனிதனை உறங்க விடுவதில்லை என்ற உண்மையை, அந்த இரவில், கூபகர்களின் அந்த மலைக்குடிசையில் உணர்ந்து கொண்டான் பராந்தகன்.

"பதவி, அந்தஸ்து, திருமணம் என்று நல்ல வாழ்க்கை அமையும்போது அதை ஏற்பதுதானே புத்தியுள்ளவர்களின் செயல்? ஆனால் இங்கு கிடைக்கும் நல்வாழ்வு, நம்மை பாண்டிய நாட்டுடன் நன்றிக் கடனால் கட்டிப் போட்டு விடுமே! அது ஏற்கக் கூடிய விலைதானா?"

பராந்தகனது சித்தம் அலைபாய்ந்தது.

அவன் இமைகளுக்கு நடுவில் இளவரசியின் எழில் முகம் வந்து, விழிகளை மூட விடாமல் தடுத்து குறுநகை புரிந்தது. 'அவள் பார்வையில் ஏதோ இருக்கத்தான் செய்தது. நாம்தான் அதைப்பற்றி அதிகமாகச் சிந்திக்கவில்லை.'




அடுத்து அவன் மனதில் சோழ நாடும், வண்டாழஞ்சேரியும், அரிசிலாற்றங்கரையும், பசேலென்று விரிந்த வயல்வெளியும் வலம் வந்தன. 'என்ன அன்பான மனிதர்கள்! எத்தனை நிம்மதியான வாழ்க்கை! அறிவைப் புகட்டிய தந்தை ஏதோ அடிக்கடி கூறுவாரே, என்ன அது? "பராந்தகா. மனிதனுக்கு வாழ்வில் தேவையானது பொன்னல்ல, பொருளல்ல, பதவியல்ல, ஓரளவுக்கு மேல் கல்வியும்கூட அல்ல. மன நிம்மதிதான் தேவை. நிம்மதி என்பது இருப்பதைக் கொண்டு திருப்திப்படுவதில் இருக்கிறது. திருப்திக்கு ஒரே வழி எளிமை, நேர்மை, புரிந்துகொள்."

பராந்தகனின் மனம் தெளிவடையத் தொடங்கியது. தான் இனி என்ன செய்ய வேண்டுமென்பதைத் தீர்மானித்துக் கொண்டவன், அமைதி நிலவத் தொடங்கிய மனத்துடன் படுத்தான். மெல்ல உறங்கியும் போனான்.

இயற்கையின் இனிய ஸ்வரங்கள் எத்தனை வகையென்பதை நிரூபித்துக்

கொண்டு அந்த மலைப்பகுதியின் காலைப் பொழுது வெகு மனோகரமாக விடிந்தது. பட்சிகளின் ஒலிகளோடு பசுக்களும், ஆடுகளும் ஊடே குரல் கொடுத்து அழைத்தன. குழந்தைகளின் கூச்சலும், சிரிப்பொலியும் கலந்து ஒலித்தன. தூரத்து அருவியின் இரைச்சலும் ஓயாத அடிநாத மாகக் கேட்டது.

'எந்த மன்னாதி மன்னனின் அரண் மனையிலும் காலைப்பொழுது இத்தனை ரம்மியமாக இருக்காது' என்று எண்ணிய படியே விழித்து எழுந்தான் பராந்தகன். வெளியில் பகதத்தனிடம் முதியவர் ஏதோ கூறிக் கொண்டிருந்தார்.

வாயிலில் முதியவருடன் திடமான உடலமைப்புடன் வாலிபன் ஒருவன் நின்றிருந்தான். அவனது வலுவான கரங்களில் தெரிந்த வாள் வடுக்கள் அவன் வீரனென்பதைத் தெரிவித்தன. அகன்று கிடந்த அவன் மார்பில் வேல்களைக் கொண்டு கீறியதுபோல் ஆழமான வடுக்களும் இருந்தன. கறுத்துக் கிடந்த அவன் முகத்தில் வெட்கமும், தயக்கமும் மித மிஞ்சித் தெரிந்தன.

பராந்தகனைக் கண்டதும் அந்த வாலி பனின் முதுகில் அறைந்து முன்னால் தள்ளிய முதியவர், "பராந்தகரே, இவன் என் மகன் வேழன். உங்கள் முன் வர வெட்கிக் கொண்டு நேற்று முதல் தயங்கிக் கொண்டிருக்கிறான்" என்றார்.

முதியவர் அறைந்த வேகத்தில் முன்னால் வந்து தடுமாறிய வேழனின் கருங்கல் தோள்களைப் பற்றி நிறுத்திய பராந்தகன், "வேழனே, இந்த வாள் வடுக்கள் நீ வீரனென்பதைத் தெரிவிக்கின்றன. வீரனுக்குத் தயக்கம் எதிரி. போரில் தயக்கம் தாக்குபவருக்குப் பலவீனம்" என்றான்.

"பராந்தகரே, இவன் தங்களை அருவி நுகர அழைத்துச் செல்வான். நீராடிவிட்டு வாருங்கள்" என்றவர் வேழனிடம், "மகனே, தூவர்கலித்த எருவைப் புல்வெளி வழியே அழைத்துச் செல்லாதே. சிலம்புத் தராய் வழியே அழைத்துச் செல்" என்று உத்தரவிட்டு அகன்றார்.

வேழனுடன் நடந்த பராந்தகன், "பகதத்தா, முதியவர் என்ன கூறினார்? விளங்கவில்லையே!" என்றான்.

"ஒன்றுமில்லை பராந்தகா. இந்த மலைக் காற்றைப் போல இது சுத்தமான தமிழ். நெருக்கமான கோரைப்புற்களின் வழியே அழைத்துச் செல்லாதே, பாறைகளிருக்கும் மேடான பகுதி வழியே அழைத்துச் செல் என்றார். சுத்தத் தமிழ் மலையேறத் துவங்கிவிட்டது என்பது இதுதான்" என்ற பகதத்தன் நகைத்தான்.

மலைப்பாதை கரடுமுரடாக இருந்தது.

"இந்திரகீல மலைக்கு அர்ச்சுனன் போன பாதையாக அல்லவா இருக்கிறது இந்தப் பாதை" என்றான் பகதத்தன்.

"இந்திரகீல மலையா? அது எங்கிருக்கிறது?" - கேட்டான் வேழன்.

"அதைப் பிறகு கூறுகிறேன். வேழனே, உன் மார்பில் இந்த வடுக்கள் எப்படி வந்தன? அதைச் சொல்."

வேழனின் முகத்தில் வெட்கம் பரவியது. "இங்கு காவினத்தையும், மனிதர்களையும் அடித்துக் கொன்று திரிந்தது ஒரு வேங்கை. அது அருவிக் கரையில் என்னிடம் சிக்கிய போது, நான் எறிந்த அயில்வேல்கள் குறி தவறிப் போயின."

"பிறகு அந்த வேங்கை நீ எறிந்த வேலை எடுத்து உன் மார்பில் கோடு கிழித்ததா?"

"இல்லை. அதை நான் வெறும் கைகளால் கொல்லும்படி நேர்ந்துவிட்

## நியூஸுக்கே நியூஸ்!

தம்முடைய கணவர் நடத்தும் 'ராஜு கைட்' என்ற இசை நிகழ்ச்சிக் குழுவுடன் மஸ்கட் போய் வந்திருக்கிறார் சந்தியா ராஜகோபால்



டது. குறி தவறாமல் வேலெறிய எனக்கு வரவில்லையென்று தந்தையாருக்கு என் மீது வெறுப்பு. அடுத்து என்னைக் கூபகர் தலைவனாக்கவும் தயங்குகிறார்" - வேழனின் முகத்தில் வருத்தம் தெரிந்தது.

"வேழனே, வருந்தாதே, உன் குறையை நான் நிவர்த்தி செய்து தருகிறேன்" என்றான் பராந்தகன்.

"எதற்கும் இன்னொரு வேங்கையைப் பிடித்து வைத்துக் கொள்" என்று நகைத்தான் பகதத்தன்.

நியூஸுக்கே நியூஸ்!

'ஸ்ருதி - டயல் எ ஃபுட்' என்ற பெயரில் கேட்டரிங் சர்வீஸ் நடத்துகிறார் மீரா கிருஷ்ணா



வளைந்து திரும்பிய மலைப்பாதை சரிந்து இறங்கியது. எதிரே விரிந்த காட்சி மலைக்க வைத்தது. "ஹோ" வென்ற பெரும் இரைச்சலுடன் வெகு உயரத்திலிருந்து சரிந்து விழுந்த அருவி, கீழே கிடந்த பாறைகளை ஆக்ரோஷத்துடன் தாக்கி வெகு தூரம் வரை சாறலைத் தெளித்துக் கொண்டிருந்தது. உள்ளே நுழைந்தவர்களைத் தாக்கி, புரட்டியெடுத்த அருவி புத்துணர்ச்சி தந்தது.

கீழே தெரிந்த பாசி படர்ந்த பாறையைக் காட்டிய வேழன், "தலைவரே, இங்குதான் அந்த வேங்கையைக் கொன்றேன்" என்றான் வெட்கத்துடன்.

அருவியிலிருந்து திரும்பியவர்கள் குடிசைகளை அடைந்தபோது, கூபக வீரர்கள் பயிற்சிகளில் ஈடுபட்டுக் கொண்டிருந்தனர். வரகுக் கஞ்சியை மட்டும் அருந்திய பராந்தகன், வேழனிடம் வாட்களை எடுத்து வரப் பணித்து விட்டு முன்னால் சென்றான்.

முதியவர் கடுகடுத்த முகத்துடன் வேழனைக் கவனித்துக் கொண்டிருக்க, "வேழனே, உன் வாளைக் கொண்டு என்னைத் தாக்கு, தயங்காதே" என்றான் பராந்தகன்.

சற்றுத் தயங்கியபடி வாளை வீசத் தொடங்கிய வேழன், தன் தாக்குதலைப் பராந்தகன் அனாயாசமாகத் தடுப்பதையும், எளிதாகத் திருப்பி விடுவதையும் கண்டு வேகத்தைக் கூட்டினான். கூபக வீரர்களும், முதியவரும் சற்று நின்று ரசித்தனர்.

ஒரு நாழிகை நேர வீச்சில் வேழனின் வாட்பயிற்சியில் உள்ள குறையைப் புரிந்துகொண்ட பராந்தகன், "வேழனே, உன் விழிகளை எதிரியின் வாள் மீது பதிக்காதே. எதிரிலிருப்பவன் விழிகளைக் கவனி. கரத்தின் அசைவையும், திசையையும் அது புலப்படுத்தும். எதிரியின் தாக்குதலுக்கேற்ப உன் கால்களை அடி வைக்காதே. உன் வீச்சுக்கு ஏற்றபடி அடி மாற்று. இப்போது வாளை வீசு" என்றான்.

மீண்டும் பயிற்சி துவங்கியது. அடுத்த ஒரு ஜாம நேரத்தில் வேழனின் வாள் வீச்சில் தெளிவு புலப்பட்டது. பலமான வீச்சு லாகவமான வீச்சானது. நேர்த் தாக்குதலும், பக்கவாட்டுத் தாக்குதலும், குறி பிசகாது வாளைப் பதிக்கும் முறையும் கைவந்தது. வாளைப் பதிக்கப் பழகியவனுக்கு, அடுத்து அயில்வேலையும் குறி தவறாமல் வீச எளிதாகக் கைவந்தது. அவன் ஆர்வம் உயர்ந்தது. இரண்டு தினங்கள் கடுமையான பயிற்சி தொடர்ந்தது. முதியவரின் முகத்தில் மலர்ச்சி தெரிந்தது.

மூன்றாவது தினம் காலையில் பயிற்சிகள் பாதியில் நின்றன. தென்திசைக் காவலுக்குச் சென்றவர்கள் திரும்பிக் கொண்டிருந்தனர். அவர்களை விசாரித்த முதியவர், கடுமை படர்ந்த முகத்துடன் அவர்களை பராந்தகன் முன்பாகக் கொண்டு நிறுத்தினார். "நீங்கள் கண்டவற்றைத் தலைவரிடம் கூறுங்கள்" என்றார்.

"தலைவரே, நம் தென் எல்லையில்



# நித்யஸ்ரீயின் தாலாட்டு

சீஸன் இசையைக் கொண்டாடும் ரசிகக் கண் மணிகளுக்கு இந்த வாரம் கொஞ்சம் ஏமாற்றம்தான்! நித்யஸ்ரீ மகாதேவன் இந்த டிசம்பர் இசை விழாவில் பாடவில்லை!

"என்ன செய்யறது? எனக்கே கொஞ்சம் கஷ்டமாத்தான் இருக்கு. ஆனால் குழந்தை தேஜஸ்ரீக்கு இரண்டு மாசம்தான் ஆகுது... தவமிருந்து பெற்ற குழந்தையாச்சே! அதான் கூடவே இருந்து கண்ணும் கருத்துமா பார்த்துக்க வேண்டியிருக்கு" என்றார் நித்யஸ்ரீ.

அதனால் என்ன...? நித்யஸ்ரீயின் இசை நிகழ்ச்சி ஜெயா டி.வியில் ஒளிபரப்பாகிறதே! அதைக் கேட்டு ஆறுதல் கொள்ள வேண்டியதுதான்!

நித்யஸ்ரீ தம்முடைய மகளுக்கு குறிஞ்சி ராகத்தில் அமைந்த 'கண்ணே... கண்மணியே' பாடலைத் தாலாட்டாகப் பாடுகிறாராம்.

- ஏ எஸ்

வெதிர்க்காடு பரவியிருக்கிறது."

"அடர்ந்த மூங்கிற்காடு" என்றான் பகதத்தன்.

"நேற்றிரவு அங்கு வில்லவனைக் கண்டோம். நம்மைத் தாக்கத் தொடங்கியவன், எல்லைப்புறத்து பொச்சைக் காவல் வீரர்களைக் கண்டதும் வெதிர்க் காட்டுக்குள் ஓடிவிட்டான்."

"பொச்சைக் காவல்...?"

"பராந்தகா, மலைப் பகுதியில் வாழும் நம் கூபக மக்கள் எல்லையில் நிறுத்தியிருக்கும் வீரர்கள்."

"பிறகு என்ன நேர்ந்தது?"

"அவர்களை இரவின் இரண்டாம் ஜாமத்தில் மீண்டும் கண்டுபிடித்தோம். உடன் வடநாட்டவர் போல சிலரும் இருந்தனர். அந்த இரவில் அனைவருமே எங்கோ நீராடிவிட்டு வந்ததைப் போல், சொட்டச் சொட்ட நனைந்தபடியே ஓடி புரவிகளில் ஏறி, கொற்கைப் பாதையில் சென்று மறைந்து விட்டார்கள்."

"என்ன உளறுகிறாய்? வில்லவனும் வடநாட்டவரும் இரண்டாவது ஜாமத்தில் நீராடிவிட்டு நனைந்தபடி ஓடினார்களா?" முதியவரின் முகத்தில் குழப்பம் தெரிந்தது.

வேழனின் குரல் தெளிவாக ஒலித்தது. "தந்தையே, நடந்தவற்றுக்குக் காரணம் எனக்குப் புரிகிறது. இந்த வில்லவன் நம் ஜென்மப் பகைவன் மட்டுமல்ல. கொற்கையில் முத்துக்களவு நடக்க உதவியவன் என்று தாங்களே தெரிவித்தீர்கள். எனக்கு அனுமதி தாருங்கள். நான் சென்று வில்லவனையும், உடனிருப்பவர்களையும் அழித்துவிட்டுத் திரும்புகிறேன்."

"சரி மகனே, நீ பராந்தகரிடம் வாட் பயிற்சி பெற்றது மட்டும் போதாது. பாண்டிய மன்னரிடம் கூற நீ எதையேனும் சாதிக்க வேண்டும். பிறகுதான் உன்னை அடுத்த கூபகர் தலைவனாக நான் அறிவிக்க இயலும். கொற்கை முத்துக்களைக் களவாடியவர்களை அழித்துவிட்டு வா. அது இயலாதெனில் திரும்பி வராதே. புறப்படு" என்றார் முதியவர்.

அடுத்து செய்தி கொண்டு வந்தவர்களை நோக்கியவர், வீரர்களே, வேறு ஏதேனும் கூற விடுபட்டிருக்கிறதா? அந்த வடநாட்டவரைப் பற்றி ஏதேனும் குறிப்பாக அடையாளம் உண்டா?" என்றார்.

வீரன் சற்று சிந்தித்துவிட்டுக் கூறினான். "தலைவரே, அந்த வடநாட்டவரின் தலைவனாகத் தெரிந்தவனது முகம் மிகக் குரூரமாயிருந்தது. அவன் நெற்றியிலிருந்து முகத்தின் குறுக்கே நீண்ட வாள் வடு ஒன்று இருந்தது."

"ராகுலன்" என்று பலமாக முணுமுணுத்தான் பகதத்தன்.

(தொடரும்)

# அக்னிசர்மா பக்கம்

# நடக்குமென்பார் நடக்கும்!

**மேஷம்:** நாடிப் போனதும் தேடிப் போனதும் நாளைக்கே முடியணும்னு பார்த்தா, நாலைஞ்சு நாள் இழுத்தடிச்சிட்டிருந்ததில்லையா? அந்த நிலைமை மாறிப் போய், எல்லாக் காரியமும் எக்ஸ்பிரஸ் வேகத்தில வெற்றிகரமா முடியும். பொருளாதாரம் கொஞ்சம் அப்படியிப்படித்தான் இருக்கும். கவலைப்படாதீங்க, சரியாயிடும். பயணங்கள்ல கொஞ்சம் எச்சரிக்கையா இருங்க. ஆபீஸ்லயும் உங்க திறமை கூடி புதிய பொறுப்புகள் சேரும். தொழில், வியாபாரம்னு இருக்கறவங்களுக்கு எதிர்பாராத திருப்பம் ஒண்ணு காத்திருக்கு. குடும்பத்தில பொதுவான பலன்கள்தான் என்றாலும் சுப காரியங்கள்ல அனுகூலமான திருப்பம் ஏற்படும். பெண்களுக்கு மகிழ்ச்சியான வாரம்.

**ரிஷபம்:** பட்சி பறக்கறதுக்கு இறக்கை மட்டும் போதாதுங்க. காத்தும் வேணும். உங்க துணிவும் தன்னம்பிக்கையும் போதாது. தெய்வ அனுகூலத்தைக் கூட்டிக்கிறதுதான் உங்களுக்கு நல்லது. புது அறிமுகங்கள் சில கிடைக்கலாம். பத்தரை மாத்தாவுமிருக்கலாம், பாலீஷ் போட்டதாவுமிருக்கலாம், பாத்துக் கோங்க. ஆபீஸ் தொல்லையெல்லாம் மொத்தமா இல்லைன்னு ஆயிடும். தொழிலும் வியாபாரமும் தொட்டுத் தொட்டு வளரும். குடும்பத்தில கல்யாண லிஸ்டிலே இருக்கிறவங்களுக்கு சீக்கிரம் கிரீன் சிக்னல் கிடைக்கும். பெண்கள் நினைச்சதைச் சாதிப்பாங்க.

**மிதுனம்:** அல்ஜீப்ரா கணக்கா இருந்த உங்க வாழ்க்கைக்கு அர்த்தம் தெரியப் போகுது. எதிரியா இருந்தவங்கல்லாம் உதிரி உதிரியாய்ப் போயிடுவாங்க. ஆபீஸ்ல அடுத்த சீட்டுக்கு அட்ரஸ் மாறிப் போன அதிர்ஷ்டம், அப்படியே திரும்பி உங்களை அள்ளிக்கும். தொழில், வியாபாரம்னு இருக்கிறவங்க அகலக் கால் வெச்சிடாதீங்க. படிப்படியா முன்னேறுங்க, போதும். குடும்பத்தில ஒற்றுமையும் மகிழ்ச்சியும் கூடும். பெண்களுக்குப் புதுசா ஏதாவது பொருள் வந்து சேரும்.

**கடகம்:** நின்னு நிதானிச்சுப் போனா, நிச்சயமா முன்னேறலாம். உங்க மனத் தெளிவுதான் பல காரியங்களை வெற்றிகரமா செய்து முடிக்கப் போவுது. பொருளாதாரம் கொஞ்சம் அப்படியிப்படிதான் இருக்கும். உஷாரா இருங்க. உத்தியோகத்தில உற்சாகத் திருப்பங்கள் சில காத்திருக்கு. தொழிலும், வியாபாரமும் முன்னேறும்னாலும், கொடுக்கல் வாங்



**பரதக் கலைஞர் ஷோபனா ரமேஷுக்கு (மேஷ ராசி) மகிழ்ச்சியான வாரம்!**

**டிசம்பர் 15 முதல் 21 வரை**

## இது நல்ல வாரம்

| கிழமை | தேதி | நட்சத்திரம் | நட்சத்திரம் | மற்றவை |
|---|---|---|---|---|
| புதன் | டிச.15 (கார்.30) | உத்திராடம் | சதுர்த்தி | முகூர்த்த நாள் |
| வியாழன் | டிச.16 (மார்.1) | திருவோணம் | பஞ்சமி | சகல ஆலயங்களிலும் தனுர் மாத பூஜை |
| வெள்ளி | டிச.17 (மார்.2) | சதயம் | சஷ்டி | நகராத்தார் பிள்ளையார் நோன்பு |
| சனி | டிச.18 (மார்.3) | பூரட்டாதி | ஸப்தமி | சிதம்பரம் ஆருத்ரா த்வஜாரோகணம் |
| ஞாயிறு | டிச.19 மார்.4 | உத்திரட்டாதி | அஷ்டமி | - |
| திங்கள் | டிச.20 (மார்.5) | ரேவதி | நவமி | ராமேஸ்வரம் உற்சவம் |
| செவ்வாய் | டிச.21 (கார்.6) | அஸ்வினி | தசமி | சிதம்பரம் நடராஜர் வெள்ளி பூத வாகன உலா |

கல்ல கொஞ்சம் நிதானமா இருங்க. குடும்பத்தில கொஞ்சம் செலவுகள் காத்திருக்குன்னாலும், எல்லாம் சுபச் செலவுகள்தான். பெண்களுக்கு மகிழ்ச்சியான வாரம்.

**சிம்மம்:** 16ம் தேதி வரை பொறுங்க போதும். அப்புறம் எட்டி எட்டிப் போனதெல்லாம் கிட்டே நெருங்கி வந்துடும். வி.ஐ.பிக்கள் ஆதரவும் பணவசதியும் கூடி உங்களுக்குத் தெம்பு தரும். ஆபீஸ்ல அப்படியே கிடந்த உங்க அப்ளிகேஷனெல்லாம் அனுகூலமா நிறைவேறிடும். கையைக் கடிச்ச புண்ணாக்கிய தொழிலும் வியாபாரமும், கை நிறைய லாபம் கொடுக்க ஆரம்பிக்கும். முதல்ல பழைய கடன்களை பைசல் பண்ணிடுங்க. என்னைப் பிடி, உன்னைப் பிடின்னு இருந்த குடும்பம், குழப்பமெல்லாம் தீர்ந்து குதூகலம் பெறும். பெண்களுக்கு பொன்னும் பொருளும் சேரும்.

**கன்னி:** எப்போ வரும்னு ஏங்கிக் கிடந்த நல்ல செய்தியெல்லாம் கொத்துக் கொத்தா வந்து சேர்ந்து, கும்மாளம் போடவைக்கிற நேரங்க இது. கல்வி, ஆராய்ச்சி, விஞ்ஞானம்னு ஈடுபடறவங்க கனவெல்லாம் நிறைவேறும். ஆபீஸ்ல இடமாற்றம், பதவி உயர்வு, சிலருக்குக் காத்திருக்கு. காவல், ராணுவம், மருத்துவம்னு முக்கியத் தொழில்ல இருக்கிறவங்களுக்கு பெயரும் புகழும் ஏற்படுற நேரம். குடும்பத்தில எலியும் பூனையுமா இருந்தவங்க இணை பிரியாதவங்களா ஆக நல்ல சந்தர்ப்பம். பெண்களுக்கு குழந்தைகளால் மகிழ்ச்சி கிட்டும்.

**துலாம்:** போனாப் போவுது, வந்தா வருதுன்னு உங்க மேலேயே நம்பிக்கை இல்லாம காலத்தை ஓட்டினீங்க இல்லையா? இனி நிலைமை மாறி உங்க பலம் என்னன்னு உங்களுக்கே புரியும். புரிஞ்சுக்கிட்டா ஏற்றமோ ஏற்றம்தான். ஆபீஸ்ல அலட்டல் இல்லாம அமைதியா நடக்கறது நல்லது. தொழில், வியாபாரம்னு இருக்கறவங்களுக்கு நெருக்கடி மறைஞ்சு, நிம்மதி கிடைக்கும். குடும்பத்தில சந்தோஷமா செய்யக் கூடிய சுபச் செலவுகள் காத்திருக்கு. பெண்களுக்கு உற்சாகம் உல்லாசம் கூடும்.

பரிகாரம்: பிள்ளைக் கலி தீர்க்க ஒரு பிள்ளையும் பிறந்து, அது கவலையைத் தரும் சவலையாயிருந்து விட்டால் வாழ்க்கையில் வேறு வேதனையும் சோதனையும் வேண்டவே வேண்டாம். எந்த ஸ்பெஷலிஸ்டும் தீர்க்க முடியாத, மாற்ற இயலாத கவலையை மாற்றுவது மட்டுமல்ல, வேதனையை ஆற்றவும் காத்திருக்கிறான் தேன்மலை ஷண்முகம். மஹாமண்டபத்துத் தலைமயன் விநாயகனும், அம்மையப்பனும் உடன் நிற்க, சிறு குழந்தைகளின் எந்தப் பிணிக்கும் அருமருந்தாக, அழகு வடிவேல் முருகன் வெள்ளி மயில் மேல், வள்ளி தேவானை சமேதராய் கருணையோடு அபயம் தரக் காத்திருக்கிறான். புதுக்கோட்டையிலிருந்து 11 கி.மீட்டரில் உள்ளது இந்தத் திருக்கோயில்.

- வி



**விருச்சிகம்:** எதிர்காற்றில போராடிப் போராடி சலிச்சுப் போயிருந்தீங்க இல்லியா. எதிர்காற்று இனி இசைக் காற்றா மாறப் போவுது. சரியா பயன்படுத்தினா, எதிர்காற்றை எதிர்காலக் காற்றா மாத்திக்கலாம். ஆபீஸ்லயும் உங்க திறமை ஜொலி ஜொலிச்சு பெயரையும் பதவியையும் தேடித் தரப் போகுது. தொழில், வியாபாரம்னு இருக்கிறவங் களுக்கு, நின்னு போன பாக்கியெல்லாம் வந்து சேர்ந்து நிம்மதி தரும். கூட்டுத் தொழில்ல எதிர்பாராத லாபம் கிட்டும். குடும்பத்தில கல்யாண மேளச் சத்தம் கேக்கற நேரம் நெருங்குது. பெண்களுக்கு அதிர்ஷ்டமான வாரம்.

**தனுசு:** பத்துக்கு நாலுதாங்க பழுதில் லாம நடக்கும். பார்த்து செயல்படுங்க. குரு பகவான் பார்வை கொஞ்சம் அனு கூலமா இருக்கிறதால, உங்க திறமை கை கொடுத்துத் தூக்கிவிடும். தெய்வபலத்தைக் கூட்டிக்கோங்க. புதியவர்கள் சிலர் பழக வருவாங்க. பாம்பா பழுதான்னு பார்த்துப் பழகுங்க. ஆபீஸ்ல அனுகூலமான நேரம் தான்னாலும் அடக்கி வாசிங்க. புதிய முயற்சிகள் எதுவும் இப்ப வேண்டாம். குடும்பத்தில விறைப்பு, முறைப்பு எல்லாம் சமாதானமாகி ஒற்றுமை கூடும். பெண்களுக்கு உற்சாகமான வாரம்.

**மகரம்:** சொல்லிச் சொல்லிஅடிக்கிற கில்லி சார் நீங்க. திட்டம் போட்டு நிதானமா, சமயம் பார்த்து நிறை வேத்திக்கிட்டே போவீங்க. கொஞ்சம் தெய்வீக ஈடுபாடும் வளர்த்துகிட்டா நல்லது. ஆபீஸ்ல அதிர்ஷ்டமும், அதி காரிகளும் துணைக்கு நின்னு உங்களுக்கு அனுகூலத்தைக் கூட்டுவாங்க. தொழில், வியாபாரத்தில கேட்ட உதவிகள் கிடைக் கும். புதிய தொழில்ல ஈடுபட நேரிடலாம். குடும்பத்தில குருபலன் நிறைஞ்சு, சுப மங்கள காரியம் ஈடேறும்.

**கும்பம்:** பத்துக்கு நூறா செலவு பண்ணித்தான் எந்தக் காரியமும் முடியும் நேரம்க இது. பாங்க் பாலன்ஸ் ஏறி ஏறி இறங்கும். உஷாரா கவனிச்சுக்கோங்க. ஆபீஸ்ல பிரச்னைகள் கொஞ்சம் குறை யும். புதிய முயற்சியில அகலக் கால் வைக் காதீங்க, சறுக்கிடும். தொழில், வியா பாரம்னு இருக்கிறவங்களுக்கு முன்னேற் றம் மெதுவாத்தான் ஏற்படும். குடும்பத்தில வசதிகள் கொஞ்சம் கூடி மகிழ்ச்சி தரும். பெண்களுக்கு மன சஞ்சலங்கள் குறைந்து தெளிவு கூடும்.

**மீனம்:** திருப்பத்துக்குத் திருப்பம் உங்களுக்கு சாதகமான புதுப்புது உதவிகளும், எதிர்பாராத மனிதர்கள் அறிமுகமும் காத்திருக்கு. உற்சாகமும் உல்லாசமும் தூக்கலான வாரம். பண நடமாட்டம் வேற அதிகமாகி குஷிப் படுத்தும். ஆபீஸ்ல உங்க முன்னேற் றத்துக்குக் குறுக்கே நின்னவங்க விலகி வழிவிட்டே ஆகணும். புதிய முயற்சி யேதும் இருந்தா, தைரியமா ஆரம்பிங்க. தொழில் வியாபாரமெல்லாம் எதிர் பார்த்த உதவிகள் கிடைக்கப் பெறும். வர வேண்டிய பணம் வந்து சேரும். குடும் பத்தில சீக்கிரம் சுபகாரியம் நடக்கும். பெண்கள் நினைச்சதை சாதிப்பாங்க.

## ஸ்ரீ பரிபூரண விநாயகர்!

ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகளுக்கு வைகை ஆற்றங்கரையோரம்



• ஸ்ரீ பரிபூரண விநாயகர்

திருக்காட்சி தந்து ஆட் கொண்டவர்தான் பரிபூரண விநாயகர்!

'மதுராபுரி வடக்காய் வைகை நதித்
தென்பால்
சதுரார் ரயில்பாலம் தன் மேற்காய் -
எங்கும்
கதித்தோங்கும் செந்நெல் சூழ்
கட்டடத்தின் கீழ்பால்
உதித்தாய் என் உள்ளத்துறை!' என

சுவாமிகளே பாடியுள்ளார்.

ஒரு நாள் விடியலில் வழக்கம் போல, சுவாமிகள் நீராடி தியானத்தில் அமர்ந்த போது, என்றும் காணாத தோற்றம் ஒன்றை ஆற்றங்கரையில் கண்டார்கள். செம்மேனி கொண்ட ஞானசுந்தர வடிவான விநாயகப் பெருமானைக் கண்டு அகமகிழ்ந்து, அணைத்துக் கொள்ளச் சென்றபோது, அது சிலையாக மாறிவிட்டது. உடனே அங்கிருந்த அரச மரத்தடியில், அன்பர்கள் சூழ, நன்னீராட்டி, அமைத்து, வழிபாடு செய்து கொண்டாடினார்கள்.

இன்றைக்கும் மதுரை ரயில் பாலத்தின் மேற்குப் பகுதியில், ஸ்ரீ பரிபூரண விநாயகர் பக்தர்களுக்கு அருள்பாலித்து வருகிறார்.

- ஆர். லலிதா,
சென்னை - 17

மும்பையில் மிக வரப்ரசாதியாக விளங்குபவர் டிட்வாலா மகாகணபதி. நினைத்ததை நிறைவேற்றுபவர். மேலிரண்டு கைகளில் பாசமும், அங்குசமும், கீழ் வலக்கையில் ஜபமாலையும், இடக் கையில் மோதகமும் கொண்டு, ஸர்ப்பத்தை பூணூலாக அணிந்துள்ளார். கண்களிலும், நாபியிலும் வைரக் கற்கள் பளபளக்கின்றன. கணபதியே நேரில் பேசுவது போன்ற உயிரோட்டத்துடன் காட்சி தருகிறார். நாகபந்தனத்தாலான பீடத்தில் அமர்ந்துள்ள இவ் விநாயகரின்

காதலை

சிறப்பு, விரும்பியவரை மணக்க அருள் புரிவதே! ஆம்! சகுந்தலையும், துஷ்யந்தனும் திருமணம் புரிந்து கொண்டது இந்த விநாயகரின் சந்நிதியில்தானாம்.

பல்லாயிரம் ஆண்டுகட்கு முன் கண்வ முனிவரின் ஆசிரமத்தில் சகுந்தலை, துஷ்யந்தனின் காந்தர்வ விவாகம் நடந்தது. பின் துர்வாச முனிவரின் சாபத்தால் அரசன் சகுந்தலையை மறந்துவிட, சகுந்தலை நாளும் பொழுதும் இந்த டிட்வாலா மகா கணபதியையே வணங்கி வேண்ட, துஷ்யந்தனும் நினைவு திரும்பி, இவ்விடத்தில் சகுந்தலையை மணந்து கொண்டதாக புராண வரலாறு. இதனால் இவ்வாலயத்தில் இளம் ஆண், பெண்களின் கூட்டம் எப்பொழுதும் அதிகமாகக் காணப்படும். காதலர்களை இணைப்பதுடன், பிரிந்த தம்பதியர் ஒற்றுமையாக சேர்ந்து வாழவும் இத்தல கணபதி அருள் செய்வதாக நம்பிக்கை.

தற்போதைய ஆலயம் 1772ம் ஆண்டு மாதவராவ் பேஷ்வாவால் உருவாக்கப்பட்டது. திருமணம், பிள்ளைவரம், நல்ல வேலை, சிறப்பான கல்வி போன்றவையும் இம் மகா கணபதியை

# நிறைவேற்றும் கணபதி!



• மும்பை மகா கணபதி

உள்ளம் உருகிவேண்ட, விரைவில் நிறைவேறுகிறது. -

- ராதா பாலு, நவி மும்பை

## தேவாரம் தந்த பொல்லாப் பிள்ளையார்!

நமது தீவினைகளை அழிக்கும் படைக்கலமாக விளங்குபவை, தமிழ் வேதங்களான தேவாரத் திருமுறைகள்.

அத்தகு பெருமை பெற்ற தேவாரத்துக்கு மூலாதாரம் திருநாரையூர் அருள்மிகு பொல்லாப் பிள்ளையார்.

பூலோக கைலாயமாம் சிதம்பரத்தின் தென்மேற்கில், காட்டுமன்னார்குடி செல்லும் வழியில் 16 கி.மீ தூரத்தில் உள்ளது திருநாரையூர்.

ஆதிசைவ மரபில் வந்த அருந்தேச



• "நம்பி, பொறு!"

சிவாச்சாரியார் ஆலய பூஜை செய்து வந்தார். "பூஜை செய்த அமுதை விநாயகர் உண்டார்" எனத் தந்தை கூறியது பசுமரத்து ஆணி போல் சிறு பிள்ளையான நம்பியின் மனத்தில் பதிந்தது. இறைவன் திருவிளையாடலை யார் அறிவார்?

எதிர்பாராமல் ஒரு நாள் அருந்தேசர் வெளியூர் செல்ல வேண்டி இருந்தது. எனவே தம் புதல்வனை பூஜை செய்யப் பணித்தார்.

நம்பி பூஜை செய்து அமுதைப் படைத்தார். அமுது அப்படியே இருக்கக் கண்டார். காரணம் தெரியாது தவித்தார்,



துதித்தார். பலன் இல்லை. எனவே தன் தலையைக் கருங்கல்லில் மோதிக் கொள்ள விநாயகர், "நம்பி! பொறு" எனத் தடுத்து அமுதினை உண்டார்.

விநாயகர் உண்டதனை தன் தந்தையிடம் கூற, தந்தை நம்பவில்லை; "பொய் உரைக்கிறான்" என்றார்.

ஞானப்பால் உண்ட ஞானசம்பந்தர், "தோடுடைய சிவன் தூவெண் மதி சூடி" எனப்பாடி தன் தந்தைக்கு இறைவனையும், இறைவியையும் காட்டியது போன்று, நம்பியும் விநாயகர் அமுது உண்பதைத் தம் தந்தைக்குக் காட்டினார். ஊரே நம்பியின் பெருமையை உணர்ந்தது.

சோழ மன்னர்களில் இராசராச அபய குல சேகர சோழ மகராச பூபதி சிறந்த சிவ பக்தர். அவரது காலம் கி.பி. 985 முதல் கி.பி 1014 வரை என்பர். மன்னர், சிவனடியார்கள் மூவர் அருளிய பதிகங்களுள் சில பாடக் கேட்டு தேன் உண்ட வண்டானார். பதிகங்கள் முழுவதையும் கேட்க, ஆவல் கொண்டார். சிவனடியார்கள், நம்பி ஆண்டார் நம்பி மூலம் பெறலாம் என்றார்கள். உடன் மன்னர் தம் பரிவாரங்களோடு திருநாரையூர் சென்றார்; நம்பியை வேண்டினார். நம்பி, விநாயகரைத் துதிக்க "சிதம்பரம் அருள்மிகு நடராஜப் பெருமான் ஆலயத்தின் வடமேற்கு மூலையில் உள்ளது; காட்டுவோம்" எனக் கூறி காட்டினார். அறையோ பூட்டிக் கிடந்தது. தாள் திறக்க மன்னர் வேண்டினார். ஆடல் வல்லானோடு உடன் வந்த தில்லைவாழ் அந்தணர்கள் "உரியோர் வந்தால் திறக்கலாம்" என்றார்கள்.

மதி நுட்ப மன்னன் மூவர் உருவச் சிலைகளை நன்கு அலங்கரித்து எழுந்தருளச் செய்தார். பூட்டிய அறை திறக்கப்பட்டது. பனை ஓலையில் எழுதப்பட்டவை மூடியே இருந்ததால் கறையான் புற்றால் மூடப்பட்டிருந்தது. சிந்தாமல், சிதறாமல் எடுக்கச் சிந்தித்த மன்னன், எண்ணெயை குடம் குடமாக ஊற்றிக் கரையானைப் போக்கினார். "சென்றது போக நின்றது நாழிகை" என எஞ்சிய சுவடிகளைக் கண்டார்.

தேவாரம் கண்ட பொல்லாப் பிள்ளை யாரை வணங்கி அருள் பெறுவோம்!

- சீ. முத்துக்கிருட்டிணன்,
சிதம்பரம்-1.

பங்குச் சந்தை டிப்ஸ்

# ரிலையன்ஸ் பங்கு வாங்கலாமா?

சமீபத்தில் ஒரு ஆங்கில (பொருளாதார) தினசரியில், திருபாய் அம்பானி தம் மகன்களைப் பற்றி பெருமையாக ஒரு விஷயம் சொன்னதாக வெளியாகி இருந்தது. தமது நண்பர் ஒருவரிடம் திருபாய் "1+1 இரண்டல்ல 1+1=11" என்று சொன்னாராம். அதாவது தம்முடைய இரண்டு மகன்களுடைய திறமை, பதினொரு பேருக்குச் சமம் என்பதாகும். அந்த அளவுக்கு தமது மகன்கள் பேரில் நம்பிக்கை கொண்டிருந்தார்.


• முகேஷ்


• அனில்

ஒரு லட்சம் கோடி ரூபாய் சொத்துகள் உள்ள ரிலையன்ஸ் நிறுவனத்தில் குடும்பச் சண்டை என்றதும், ரிலையன்ஸ் பங்குதாரர்களின் வயிற்றில் நெருப்பு. அதற்கேற்றாற்போல் ரிலையன்ஸ், அதைச் சார்ந்த ரிலையன்ஸ் எனர்ஜி, ரிலையன்ஸ் காபிடல் கம்பெனிகளின் பங்குகளும், பங்கு மார்க்கெட்டில் கொஞ்சம் சரிவடைந்து பிறகு சரியாகிவிட்டது.

கடைசியாக வந்த தகவல்களின்படி (பத்திரிகைச் செய்திதான்) அம்பானி சகோதரர்களிடையே உடன்பாட்டுக்கான முயற்சிகள் வெற்றிகரமாக முடிந்து விட்டதாகவும், அதன்படி ரிலையன்ஸ் நிறுவனத்தின் முழுப் பொறுப்பையும், மூத்த சகோதரர் முகேஷ் அம்பானி ஏற்றுக் கொள்வதென்றும், இளைய சகோதரர் அனில் அம்பானி, ரிலையன்ஸ் எனர்ஜி, ரிலையன்ஸ் டெலிகாம், ரிலையன்ஸ் காபிடல் ஆகிய கம்பெனிகளின் முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்வார் என்றும் சொல்லப்படுகிறது.

எது எப்படியோ? ஒன்று உறுதியாகச் சொல்லலாம். ரிலையன்ஸ் நிறுவனங்களின் பங்குதாரர்கள் கொஞ்சம் கூடக் கவலைப்பட வேண்டியதில்லை. ரிலையன்ஸ் நிறுவனங்களின் அஸ்திவாரம், உறுதியாகவும் பலமாகவும் இருக்கிறது.

இந்திய முதலீட்டு நிறுவனங்கள், வெளிநாட்டு முதலீட்டு நிறுவனங்கள் மற்றும் தனிப்பட்டவர்கள், ரிலையன்ஸ் நிறுவனங்களில் சுமார் 52 சதவிகிதம் பங்குகளை வைத்திருக்கிறார்கள். அம்பானி குடும்பத்தாரின் பங்கு 48 சதவிகிதம். கம்பெனிகள் நல்ல முறையில் நிர்வகிக்கப்படுகின்றன.

ரிலையன்ஸ் பங்குகள் வைத்துள்ளோர் அவற்றை அவசரமாக விற்க வேண்டாம். புதிதாக வாங்க விரும்புவோரும் தைரியமாக வாங்கலாம். இன்றைய விலைக்கு அந்தப் பங்குகளின் மதிப்பு குறையாது என்று நிச்சயமாக நம்பலாம்.

அடுத்த இதழில் பார்ப்போம்.

• வி.கோபாலன்



தென்கச்சி சுவாமிநாதன்



# விடுதலை...



அந்த மனிதனைப் பாருங்கள்.

ஐயோ பாவம்!

அவனை சங்கிலியால் கட்டிப் போட்டிருக்கிறார்கள்.

அந்தச் சங்கிலியின் பிணைப்பிலிருந்து அவன் விடுபட விரும்புகிறான்.

அதற்கு என்ன வழி?

யோசிக்கிறான்.

அந்தச் சமயத்தில் ஒரு பெரியவர் அந்த வழியாக வருகிறார்.

"என்னப்பா... இந்த விலங்கிலிருந்து நீ விடுபட விரும்புகிறாயா?"

"ஆமாம் ஐயா!"

"அதற்கு இரண்டே வழிகள்தான் உண்டு!"

"என்ன அது... சொல்லுங்கள்!"

"ஒன்று, உன்னைச் சுருக்கிக் கொள்வது. இன்னொன்று, உன்னைப் பெருக்கிக் கொள்வது."

"என்ன சொல்லுகிறீர்கள்?"

"நீ சின்னவனாக ஆனால் சங்கிலி தானே கழன்று கொள்ளும். நீ விடுபடுவாய்!"

இதைத்தான் ஞானிகள் கொஞ்சம் வேறு விதமாகச் சொல்கிறார்கள்.

"தாஸோகம்...தாஸோகம் என்று அடக்கத்துடன் இருந்து... தன்னை சிறியவன்... சிறியவன் என்று சுருக்கிக் கொள்ளும்போது, கட்டின பந்தம் விலகுகிறது.

சிவோஹம்... சிவோஹம் என்று உன்னை நீ பெருக்கிக் கொள்ளும்போது, சங்கிலி பொட்டென்று உடைந்து போகிறது.... பந்த விடுதலை கிடைக்கிறது..."

ஒரு குடும்பத் தலைவர். வீட்டில் தனியாக இருந்த சமயம். திருடன் வந்தான்... வீட்டில் இருந்த நகை பணம் எல்லாவற்றையும் சுருட்டி எடுத்துக் கொண்டு புறப்பட்டான். அவர் சொன்னார்.

"எனக்கு ஒரு உதவி செய்ய முடியுமா? என்னை இந்த நாற்காலியில் கட்டிப் போட்டு... வாயில் ஒரு துணியைத் திணித்து விட்டுப் போ! அது போதும்!"

"எதுக்கு இப்படி...?"

"நீ அப்படிச் செய்யலேன்னா... இந்தப் பணம் நகை எல்லாத்தையும் நானே திருடிகிட்டுப் பொய் சொல்றதா என் சம்சாரம் சந்தேகப்படுவா...

இது ஒரு விதமான பந்த விடுதலை!

(அடுத்த வாரம் சந்திப்போம்)

தெம்புக்குப் படிங்க! 7

# மைக்ரோவேவ் மாமி



"இப்போ ஆப்பிள் சீஸனாச்சே! ஆப்பிள் ஜூஸ், ஜாம், ஆப்பிள் பஜ்ஜி, ஆப்பிள் ஊறுகாய்னு ஏதேதோ செய்வீங்களாமேனு நிறையப் பேர் ரெஸிபி கேட்டு ஈமெயில் அனுப்பியிருக்கா! ஆப்பிள் டிலைட்னு அட்டகாசமான ஒரு டெஸர்ட் இருக்கு. ஐஸ்க்ரீமோட சாப்பிட வேண்டிய அயிட்டம். அதைப் பற்றி சொல்லித் தர்றேன்" என்று ஆர்வமா சமையலறைக்குள்ளே போனார் மைக்ரோ வேவ் மாமி.



# ஆப்பிள் டிலைட்

**தேவையான பொருள்கள்:**

நடுத்தர சைஸ் ஆப்பிள் - 6

எலுமிச்சைச் சாறு - 2 மேஜைக் கரண்டி

மெல்லிய பேரீச்சைத் துருவல் - 1 கிண்ணம்

சர்க்கரை - 1 கிண்ணம்

வெண்ணெய் - 1 கிண்ணம்

பொடி செய்த பட்டை - அரை தேக்கரண்டி

ஆப்பிள்களை சுத்தமாகக் கழுவி, துடைத்துக் கொள்ளவும். ஆப்பிளின் ஒரு பாகத்தில் துளையிட்டு, வட்ட வட்டமாகத் துளைத்துக் கொள்ளவும். ஆனால் ஆப்பிளின் முழு வடிவத்துக்கு எந்த விதச் சேதாரமும் இருக்கக் கூடாது. இப்போ ஆப்பிள் கிண்ணங்கள் தயார்.

பேரீச்சைத் துருவல், முந்திரித் துருவல், எலுமிச்சைச் சாறு கலந்து பிசைந்து, ஆப்பிள்களின் துளைகளில் இட்டு நிரப்பி, மைக்ரோஅவனின் டிரேயில் வைத்து விடவும்.

ஒரு தம்ளர் நீரை, அடுப்பில் வைத்து கொதித்து வந்ததும், சர்க்கரை, வெண்ணெய், பட்டைத் தூளை கலக்கவும். இலேசாக நுரைத்து வந்ததும், சர்க்கரை ஸிரப்பை, ஆப்பிள்கள் மீது ஊற்றி 180° டிகிரி வெப்பத்தில் வைத்து வேக விடவும். இறக்கி வைத்து, எஞ்சிய சர்க்கரைப் பாகை ஆப்பிள் மீது ஊற்றி ஐஸ்க்ரீமுடன் பரிமாறவும்.

# குறுந்தொகை

இந்தியன் வங்கி மானேஜர் பதவியைத் துறந்து, முழு நேர எழுத்தாளராக இயங்குபவர் இந்திரன். அந்தப் பதவியில் இருந்தபோது மும்பையிலிருந்து சிவகங்கைக்கு மாற்றப்பட்டார். அங்கே கவிஞர் மீராவைச் சந்தித்து அவரின் நெருங்கிய நண்பரானார். மீரா தம் முன்னுரைகளையெல்லாம் தொகுத்து ஒரு நூலாக்கினார். அந்த நூலுக்கு முன்னுரை எழுதியவர் இந்திரன்தான். இப்போது இந்திரன் தீவிரமாக எழுதிவரும் நூல், காலஞ்சென்ற மீரா பற்றிய நினைவுத் தொகுப்பு.



• இந்திரன்



• ஜெயபாஸ்கரன்



• ஜெயந்தி நாகராஜன்

## தொகுக்கப்படும் நினைவுகள்!

சமூக உணர்வு நிறைந்த கவிதைத் தொகுதி மூலம் பலரது கவனத்தைக் கவர்ந்தவர் ஜெயபாஸ்கரன். இப்போது அவரது கட்டுரைகள் முதன்முறையாகப் புத்தகமாகின்றன. கட்டுரைகளிலும் தொட்ட இடமெல்லாம் சமுதாயச் சிந்தனைகள்தான். கவிஞர் அழகிப் போட்டி நடத்துபவர்களைக் கூண்டிலேற்றி விசாரிக்கிறார். ஜல்லிக்கட்டு மாடுகளின் பின்னால் ஓடி ஓடிப் பரிவு காட்டுகிறார். யானைகளின் மேல் மாபெரும் இரக்கம் காட்டுகிறார். இப்படிப்பட்ட மணிமணியான 16 கட்டுரைகளின் தொகுப்புக்குத் தலைப்பு: 'ஜெயபாஸ்கரன் கட்டுரைகள்.'

கோகுலம் ஆசிரியர் அழ. வள்ளியப்பா குறித்து பூவண்ணன், வள்ளியப்பாவின் புதல்வி தேவி நாச்சியப்பன் ஆகியோர் நூல் எழுதியிருக்கிறார்கள். இப்போது அவரைப் பற்றி மாணவர்கள் அறிந்துகொள்ளும் வகையில் ஒரு நூல் வெளியாகிறது. ஆசிரியர்: நாமக்கல் கவிஞர், காமராஜர் பற்றி நூல்கள் எழுதி அனுபவம் உள்ள 'ஜெயந்தி நாகராஜன்'. 'ஏ.வி. மெய்யப்பன் கேட்டதால் ஒரே ஒரு திரைப்பாடலை வள்ளியப்பா எழுதினார். அது 'வா ராஜா வா' படத்தில் வரும் 'கல்லெல்லாம் சிலை செஞ்சான் பல்லவராஜா'. பரசுராமய்யரும் அவரது மகன் வடமலையழகனும் நடத்திய 'டிங்டாங்' இதழில் 'குண்டோதரன்' என்ற பெயரில் வள்ளியப்பா எழுதினார். சக்தி வை.கோவிந்தன் அவரைச் சென்னைக்கு அழைத்து வந்தார். சக்தி ஆசிரியராக தி.ஜ.ர. இருந்தபோது, வள்ளியப்பா துணுக்குகளைத் தமிழாக்கம் செய்தார்' என்பன போன்ற பல தகவல்கள் இந்நூலில் உண்டு.

பல ஆண்டுகளுக்கு முன்னால் தையல் கலைஞர் சுந்தரம் எழுதிய 'தையல்கலை' நூல் வெளியீட்டு விழாவில் கலந்துகொண்டு அண்ணாதுரை உரையாற்றினார். அப்போது அண்ணா சொன்னது: 'என்னால் தையல் பற்றி நூல் எழுத முடியும். கருணாநிதி கலை பற்றி எழுதுவார். அவரே கலைஞர்தானே! தையல் பற்றி நானும், கலை பற்றி கருணாநிதியும் எழுதினாலும், எங்கள் இருவராலும் தையல் கலை பற்றி எழுத இயலாது. அத்தகைய நூலை சுந்தரம் மட்டும்தான் எழுத முடியும்!'

- திருப்பூர் கிருஷ்ணன்

**சீதா ரவி**

# குயில் தோட்டம்

குளிரூட்டிய சூழல் இதமாக இருந்தது. விலையும் எடையும் பார்த்துப் பார்த்து மனசுக்குள் கணக்கு போட்டுக் கொண்டே, பொருள்களைத் தேர்வு செய்தாள் வினோதினி.

“ஏன்மா யோசிச்சு யோசிச்சு ஒவ்வொண்ணா எடுக்கற.... நான் வேகமாக எடுத்துப் போட்டுட்டா... நீ வண்டியைத் தள்ளிட்டு வா...”

“வேண்டாம் கண்ணு... நீயே தள்ளு. நான் செலக்ட் பண்றேன். உனக்குத்தான் அழகா ட்ராலியைத் திருப்ப வருமில்லே...”

அழகாய் ஒரு சிறிய புனைந்துரையில் சமாளிக்க முடிகிறது - குழந்தையல்லவா...? அம்மா சொன்னால் உடனே மகிழ்ந்து ஏற்கிறது. பெரியவர்களைத்தான் நம்ப வைக்க முடியாது. கடந்த ஆறு மாதங்களாக மளிகைப் பொருள்களைக் கூட, வாரமொரு முறையாக விலை பார்த்துத்தான் வாங்க வேண்டியிருக்கிறது. ஒரு மாதச் சரக்கானால் ஏற்றிச் செல்ல ஆட்டோவுக்குத் தர வேண்டும். அல்லது காரை எடுக்க வேண்டும். கார்த்திகேயனுக்கு வருமானம் சுத்தமாக நின்று விட்ட நிலைமையில், இந்தச் செலவுகள் சொகுசு போல் தோன்றின. தவிர்த்தாள். நந்தினிக்கு ஏமாற்றம் அளிக்காமலிருக்க, வழக்கமாய் செய்யும் சூப்பர் மார்க்கெட் ஷாப்பிங்கை மட்டும் பொடி நடையாய் நடந்து சென்று சிக்கனமாகத் தொடர்ந்தாள்.

“நந்து, போகலாமா...?”

“இரும்மா! இன்னும் மியூசிக் செக்ஷன் பார்க்கலியே நாம... அப்பாவோட சி.டி.யையெல்லாம்





எண்ணிப் பார்க்க வேண் டாமா...?"

ஒவ்வொரு முறையும் எண்ணிப் பார்த்துவிட்டு, வீடு திரும்பியதும் ஞாபகமாக கார்த்திகேயனிடம் சொல்லு வாள் நந்தினி :

"அப்பா இன்னிக்கு த்ரீ ஸ்டார் சூப்பர் மார்க்கெட்ல உன்னோட சி.டி.. டுவென்டி எய்ட் இருந்தது...!"

பத்து விரல்களுக்குள் இருபத்தெட்டை எண்ணிக் காண்பிக்க முயற்சி செய்யும் குழந்தையைப் பார்த்துப் பார்த்துப் பூரித்துப் போவான்.

"டுவென்டி எய்ட்டா...? அப்படின்னா அப்பா வோட சி.டியெல்லாம் வித்துப் போகாம, அழகா அப்படியே உட்கார்ந்திருக்குன்னு சொல்லு..."

அவன் சொல்வதன் உள்ளீடு புரியாமல் நந்தினி தொடர்ந்து பொரிந்து கொட்டுவாள்... "நாளைக்கு நான் திருப்பியும் போய் எண்ணிப் பார்ப்பேன்... ஹன்ட்ரட் வர வரைக்கும் எண்ணுவேன்..."

விழுந்து விழுந்து சிரிப்பான் கார்த்திகேயன். காலில் ஸ்பிரிங் பொருத்தியது போல் குதிக்கும் நந்தினியையும், அவனையும் மாறி மாறிப் பார்த்து மகிழ்ந்து போவாள் வினோதினி.

இன்றைக்குப் போய் அப்படி ஒரு கணக்கை



ஒப்பித்தால் கார்த்திகேயன் அதை எவ்வாறு எதிர்கொள்வான்...? கற்பனை செய்து பார்க்க அச்சமாயிருந்தது.

அவன் குரல் பிசகிப் போனதிலிருந்து தன் ஒலிப்பதிவுகளை வீட்டில் கேட்க அவன் அனுமதிப்பதில்லை. நந்தினிக்காக ஒரு நாள் ஆசையாய்ப் போட்டபோது ஆக்ரோஷமாகிக் கத்தினான்.

"ஏன்... ஏன்? எதுக்குப் போட்டே...? என்னைப் பழிச்சுக் காட்டறதுக்கா..? சவால் விடறியா...?"

திகைத்துப் போனாள் வினோதினி. "இல்ல கார்த்தி... குழந்தை ஆசையா கேட்கறா பாருங்கோ..."

''வேண்டாம்! யாரும் கேட்க வேண்டாம்!'' சுவிட்சை அணைத்ததோடு, சி.டி. பிளேயரின் பிளக்கையும் பிடுங்கி எறிந்தான்...

எப்போது வெடிக்கும் என்று அனுமானிக்க முடியாத ஓர் எரிமலையை உள்ளங்கையில் அடைகாப்பது போல் தோன்றியது வினோதினிக்கு.

டிராலியை ஒப்படைத்துவிட்டு நந்தினி முன்னதாக மியூசிக் பிரிவுக்கு ஓடிவிட்டிருந்தாள். வினோதினி அங்கு சென்ற போது கணக்கெடுப்பு முடிந்திருந்தது. "நாலு சி.டி. ஏழு காசெட் இருக்கும்மா. இங்க ஒரு மாமா இருப்பாரே... அவர்கிட்டே கேட்டேன்... உள்ளே ஸ்டாக் வேற கிடையாதுன்னு சொல்லிட்டார்..."

ஒரு வகையில் ஆறுதலாயிருந்தது. மேடையில் பாட முடியாது போனாலும், கார்த்திகேயனை ரசிகர்கள் மறக்கவில்லை. முன்னிலும் வேகமாய் அவன் இசைப்பதிவுகள் விற்கின்றன... 'ராயல்டி ஒப்பந்த முறையில் அல்லாமல் ஒட்டுமொத்தமாக ஒலிப்பதிவுகளை விற்றது தவறோ...? ராயல்டி முறையில் கூடுதலான தொடர் வருமானம் கிடைத்திருக்குமோ...?' இந்த எச்சரிக்கையுணர்வு ஏன் முன்னமே இருக்கவில்லை...?'

அளப்பரிய செல்வமாக அவன் குரலையும், நிரந்தர வைப்பு நிதியாக அவனுடைய இசைத் திறனையும் நம்பியது தவறா...?

தன் சுகத்திலும் துக்கத்திலும் பங்கேற்ற அவன் இசையின் திடீர் மௌனம், அவளுக்குத் தனிப்பட்ட பேரிழப்பு. அதை விழுங்கிக் கொண்டு பெருமுயற்சியுடன் அவனுக்கு எவ்வாறு உதவ முயன்றாலும் விபரீதமாகி விடுகிறது.

கடைசியாய் வெளிவந்த 'ஸாமகானம்' சி.டியைக் கையில் வைத்துப் புரட்டிப் புரட்டிப் பார்த்த நேரத்தில், தோளில் இலேசாக ஒரு தட்டு!

திரும்பிப் பார்த்தால்...

"கமலி!..."

''எப்படியிருக்கே வினோதினி? கார்த்திகேயன் நிலைமை என்ன...? ஏதாவது முன்னேற்றம் உண்டா...?"

உரையாடலைக் கேட்டு ஓடி வந்தாள் நந்தினி.

"கமலி ஆன்ட்டி!"

''நந்தினி குட்டி! நேத்திக்கு நான் ஃபோன் பண்ணினதைச் சொன்னியா அப்பாகிட்டே...?"

'சட்டென்று முகம் வாடி நின்ற குழந்தையைப் பார்த்ததும் புரிந்து கொண்டாள் கமலி. பேச்சை மாற்றும் விதமாக, பர்ஸைத் திறந்து ஒரு சிறிய சீட்டில் எழுதி வைத்திருந்த பட்டியலை நந்தினி



யிடம் தந்தான்...

"ப்ளீஸ் நந்து... அதோ, அங்க நிக்கிற அக்காகிட்டே இந்த லிஸ்டைக் கொடுத்து சாமான் ரெடி பண்ணச் சொல்றியா...?"

குழந்தை ஓடினாள்.

"என்னாச்சு வினோதினி...? டாக்டர் என்ன சொல்றார்? கார்த்திகேயன் போன்ல கூப்டா பேச மாட்டேங்கறான். ஈமெயில் அனுப்பிச்சா பதில் இல்லே... அவன் பாடலைன்னா எங்க பாட்டுக்கெல்லாம் கூட அர்த்தம் இல்லாமப் போறது... எனக்கு ஜூனியர்தான்னாலும் ஆதர்சம் அவன்... அவனை மாதிரி வரணும்னு நினைச்சு நல்ல இடத்துக்கு வராத ஆர்டிஸ்ட்டே இன்னிக்கு இல்லே... அவனுக்கு ஏன் இப்படி ஆச்சு...? நான் வேண்டாத தெய்வம் இல்லே..."

"தேங்க்ஸ் கமலி... டாக்டருக்கே புதிரா இருக்குன்றார். கிளினிகலி எல்லாம் சரியாயிருக்கு... ஆனா மனசு நினைச்சதை முன்ன மாதிரி குரல் பேச மாட்டேங்கறது... யார்கிட்டயும் சொல்லாதே சொல்லாதேன்றார். ஆனா தொண்டையில பிரச்னைன்னு இப்போ உலகம் பூரா தெரிஞ்சு போச்சு..."

"அனுதாபப்படுறாங்க இல்லியா...? அதனாலே பிரச்னைதான் வளரும்..." - கமலி சொன்னபோது, மிக வறண்ட சிரிப்பொன்று வினோதினியிடமிருந்து வெளிப்பட்டது.

ஒருகணம் அவளை உற்றுப் பார்த்தாள் கமலி. "அவனை விட உனக்குத்தான் கஷ்டம் அதிகம்... எனக்கு அது நன்னா புரியறது வினோதினி. உன் ஏமாற்றத்தையும் பயத்தையும் சந்தேகங்களையும் காமிச்சுக்காம, அவனை நீ தேற்றியாகணும்..."

"இல்லை, எனக்குக் கூடை கூடையா கவலை இருக்கு, பயம் இருக்கு. ஆனா நிச்சயமா ஏமாற்றமில்லை கமலி. கார்த்தி நல்ல மனுஷர். அவரோட குரலும் பாட்டும் அவரோட ஒரு பகுதிதான்... அது இல்லைன்னா எனக்கொண்ணும் குறையா தெரியலை.... ஆனா அதை அவரால ஏத்துக்க முடியலை... இப்போ அதுதான் பிரச்னை..."

## நியூஸுக்கே நியூஸ்!

**ரா**ஜ் டீ.வி ஸ்ரீதர், சமீபத்தில் 'மிகச் சிறந்த செய்தி வாசிப்பாளர்' விருது வாங்கியிருக்கிறார். ஐரோப்பாவிலுள்ள டி.பி.என் என்ற தமிழ் சேனல் வழங்கியுள்ளது.



தொகுப்பு: அனு

வினோதினியின் கையை அழுத்திப் பற்றினாள் கமலி.

"உன் நல்ல மனசுக்கு எல்லாம் சீக்கிரம் சரியாகும் பாரு... ஆனா முக்கியமா சில விஷயங்களை நீ புரிஞ்சுக்கணும்... திரும்பவும் ஒரு கலைஞனா, பழைய நிலையை விட உயர்ந்த நிலைக்கு வரணும்னுதான் கார்த்திகேயன் விரும்புவான்... அதுக்கு எவ்வளவு நாள், எந்தெந்த விதத்துல எல்லாம் அவன் போராட விரும்பறானோ, அத்தனைக்கும் நீ துணையா இருக்கணும்..."

"இருக்கேன்... இருப்பேன்..." - தன் கைப்பிடிக்குள் வினோதினியின் கை நடுங்க, கூடுதலாக ஓர் அழுத்தம் கொடுத்துச் சொன்னாள் கமலி : "அவனோட கோபம், தாபம், ஏமாற்றம், எல்லாத்துக்கும் இப்போ ஒரே இலக்கு நீதான் இல்லியா...?"

வினோதினி பதில் பேசவில்லை.

"ரொம்பப் பொறுமையா இருக்கே நீ. எனக்குத் தெரியும். ஆனா உன் பொறுமையும் அளவோட இருக்கட்டும்..."

"என்ன சொல்றேன்? புரியலையே..."

''அத்துமீறி கோபப்பட்டாலோ மோசமா நடந்துக்கிட்டாலோ பேசாம இருக்காதே...''

''என்ன பண்ண முடியும்?.... போலீஸ்லையா புகார் கொடுக்கறது...?''

''ச்சே! ச்சே! இந்த சினிஸிஸம்தானே வேண்டான்றது. சரியான நேரத்துல ரொம்ப உறுதியா அவனோட தப்பைச் சுட்டிக்காட்டறதும் உன்னோட பொறுப்பு வினோதினி... அப்படிப் பண்ணினாத்தான் அவனோட சிந்தனை




உள்முகமாகத் திரும்பும்.. இப்போ அவன் இருக்கற நிலைமைல அப்படித் திரும்பி அவன் யோசிக்க வேண்டியது ரொம்ப முக்கியம்... அதைச் செய்ய வைக்க உன்னால தான் முடியும்... உன்னால மட்டும்தான் முடியும்...''

''முயற்சி பண்றேன்...''

''ம்ஹூம்...! ஜெயிக்கப் போறே நீ... எனக்குத் தெரியும்... அப்போ உன்னை விட அதிகமா நான் சந்தோஷப்படுவேன்...''

நெகிழ்ச்சியில் உடலெல்லாம் துவண்டது வினோதினிக்கு...

''நான் வரட்டா? நாளைக்கு அரங்கிசையில என்னோட ரெகார்டிங் ஒலி பரப்பாறது.. மறக்காம கேளு... கார்த்தி கேயனையும் கேட்டு எனக்கு விமர்சனம் தரச் சொல்லு...''

அசட்டுத்தனமாக புன்னகை செய்தாள் வினோதினி... வீட்டில் பாட்டு என்று ஒன்று ஒலித்தே வெகு காலமாகி விட்டது.

''நான் சொன்னது ஞாபகமிருக்கட்டும்...'' என்று கிளம்பி விட்டாள் கமலி.

**வீ**ட்டுக்குள் நுழையும்போதே நந்தினி குதித்தபடி கத்தியது. ''அப்பா! அம்மா! கமலி ஆன்ட்டியைப் பார்த்தோம் கடையிலே...''

''ஆமாம் கார்த்தி. நாளைக்கு அரங்கிசைல கமலி பாட்டு... மறக்காம கேட்டு விமர்சனம் தரச் சொன்னார்...''

''கொண்டு உடைப்பிலே போடு!...'' என்று எரிந்து விழுந்தவனைப் பார்த்து உறுதியாய்ப் பேசினாள் வினோதினி!

''இப்போ பேசின மாதிரி நீங்க என்னிக்கும் எப்பவும் பேசக் கூடாது... தெரிஞ்சுதா! சங்கீத வித்வான் கார்த்திகேயன் பேசற வார்த்தை இல்லை இது!.... புரிஞ்சுதா?''

அவன் பார்வையில் தெரிந்த திகைப்பு வினோதினிக்குத் தெம்பூட்டியது. நந்தினிக்கு வேலை கொடுத்து மாடிக்கு அனுப்பிவிட்டுத் தொடர்ந்தாள்.

(தொடரும்)

நேர்த்தியான வடிவமைப்பில் பந்துவராளியை, காயத்ரி கிரீஷ் வளர்த்தபோது 'அங்கே கொஞ்சம் இங்கே கொஞ்சம் செதுக்கிக் குறைத்தால் இன்னும் எத்தனை அழகாக இருக்கும்?' என்று தோன்றியது. ஆலாபனையை அவர் ஆரம்பித்த விதத்தில், அது பூர்வி கல்யாணியோ என்று தடுமாறியது நான் மட்டுமல்ல, பக்கத்து இருக்கை அம்மணியும்தான். வி.வி.எஸ் முராரி வயலினில் அதே ராக ஆலாபனையைத் தொடங்கிய போது என் மாயை நீங்கியது. ஆனால் காயத்ரி 'சிவ சிவ சிவ என ராதா' பாடி, அட்டகாசமான கணக்கு வழக்குகளுடன் ஸ்வரம் போட்ட பிறகும், அடுத்த இருக்கை அம்மணி பூர்விகல்யாணி பிரமையிலிருந்து விடுபடவில்லை! பழியைப் பாடகர் மீது போடுவதா, பந்துவராளி மீது அல்லது பூர்வி கல்யாணி மீது போடுவதா என்பதை ரசிகர்களிடமே விட்டு விடுகிறேன்!

நுங்கம்பாக்கம் கல்சுரல் அகாடமியில் காலையில் கச்சேரி பாடிவிட்டு பிற்பகல் பிரம்ம கான சபாவில் பாடிக் கொண்டிருந்தார் காயத்ரி கிரீஷ். இப்படி டபுள் ஷிஃப்ட் பார்த்ததாலோ என்னவோ, மேல் ஸ்தாயிகளில் பிசிறும், சுருதி விலகலும் அவ்வப்போது தோன்றிய வண்ணம் இருந்தன. கீழ் ஸ்தாயிகளில் அற்புதமான



• விளையலங்கார ரூட்

# குன்னக்குடி எக்ஸ்பிரஸ்!

கச்சிதம் கடைப்பிடிக்கிறவர் கொஞ்சம் முயன்றால், மேலேயும் ஜெயிக்கலாமே என்று ஆதங்கம் ஏற்பட்டது.

காயத்ரி கவனிக்க வேண்டிய இன்னொரு விஷயம் நிரவல். இரண்டு மணி நேரக் கச்சேரியில், காலே அரைக்கால் நிரவலோடு முடித்துக் கொள்வது என்ன நியாயம்? அத்தனை அழகான பைரவி ஆலாபனை, அதற்கு முராரியின் எஸ்ஸன்ஸான எதிரொலி, அதற்கப்புறம், அட, 'ரக்ஷ பெட்டரே...!' 'கேட்டு எத்தனை நாளாயிற்று...?' என்று மகிழ்ந்து போன கணத்தில், அந்த ஆன்டிகிளைமேக்ஸ் நிரவல்!

அப்புறம் ஜிகு ஜிகுவென்று ஓடி முடிந்த தனியாவர்த்தனம். காயத்ரி 'வாஞ்சதோலுனா' பாடியபோது, சிட்டஸ்வரத்தில் தாளவாத்திய வித்வான்கள் (சேர்த்தலை அனந்தகிருஷ்ணன் மிருதங்கம், குருபிரசாத் கடம்) காட்டிய இணக்கம் தனியாவர்த்தனத்திலும் தொடர்ந்தது. பாபுலர் பிளஸ் பழைய கீர்த்தனைகளைக்



• சீனியர் ஸ்லாட் நோக்கி....

கொண்டு, சிறப்பாக நிகழ்ச்சியை வடிவமைத்திருந்தார் காயத்ரி கிரீஷ். துளியூண்டு ஹரிகாம்போஜியைத் துல்லியமாய் வழங்கவும் தெரிகிறது; பைரவியை ஆழ உழவும் முடிகிறது. அழகியல் அம்சங்



தம்புரு

கள் கவனம் பெறவும், காயத்ரி கிரீஷ் சீனியர் ஸ்லாட்டுக்கு முன்னேறவும், வயதில் (மட்டும்) சீனியரான தும்புருவின் ஆசிகள்!

**சு**த்த ஸாவேரி டிராக்கில் சுறுசுறுப்பாகப் புறப்பட்டது குன்னக்குடி எக்ஸ்பிரஸ். ஆழ்வார்பேட்டை நாரதகான சபா அரங்கில், கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ் ரயில் நிலையத்திலிருந்து பயணம். தாராசுரம் கணபதி (மிருதங்கம்), திருக்கடையூர் தக்ஷிணாமூர்த்தி (கஞ்சிரா), மெட்ராஸ் கல்யாணராமன் (கடம்), கண்ணன் (மோர்சிங்), சென்னை ஸ்ரீநிவாஸுலு (தபலா) என்று ஐந்து கம்பார்ட்மெண்ட்கள் - அத்தனையும் அடக்கமான ஏ.ஸி ஸ்லீப்பர்கள் - அதாவது செகண்ட் கிளாஸ் அல்லது அன்ரிசர்வ்ட்டில் காணக்கிடைக்கும் பயண அதிசயங்களற்ற 'தகதிமி தகதிமி' பின் தொடர்பு. குன்னக்குடியாரும் அவரது வாத்தியமும்தான் 'ஹை பவர்ட் இஞ்சின்'. சுத்த ஸாவேரியைச் சுத்தமாக ஆரம்பித்து, படாடோபமான தமது பாணியையும் கோடி காண்பித்துவிட்டு, அவுட்டரில் நின்றுவிட்டது வண்டி! நன்றி நவிலலை ஆரம்பித்தார் வித்வான்! வாய்ப்பளித்த சபாவுக்கு நன்றி, முன்பொரு சமயம் தமிழிசை வேந்தர் பட்டம் அளித்ததற்கு நன்றி, குன்னக்குடிக்குப் பக்கத்து ஊர்க்காரரான வாஞ்சை மிகு புரவலருக்கு நன்றி...

'சதாசிவ குமாரா' என்ற பாபநாசம் சிவன் பாடலை, கர்னாடகம், கிராமியம் என்று துள்ளித் திரிந்து பொழிந்தது நிச்சயம் பாபநாசம் சிவனுக்கே (மேலுலகில் தான்) கேட்டிருக்கும். அவரும் 'சே! சே! இது நிச்சயமாய் நான் போட்ட பாட்டில்லை...' என்று 'டிஸ்கிளெய்மர்' விட்டிருப்பார்.

சும்மா சொல்லக் கூடாது, கற்பனை ஸ்வரங்களில் என்ன வித்தை காட்டினாலும், ராகத்தின் ஜீவ ஸ்வரத்தை விடாமல் பற்றிக் கொள்வதால், குன்னக்குடி எக்ஸ்பிரஸ் தடம் புரள்வதேயில்லை.

ஹரிகாம்போஜி ஆலாபனையில் குன்னக்குடி ஈஹிமஹூதி ஆனார்! அப்புறம் டிருக்னன்கு ஆனார்! அதாவது: ஒரே வயலினில், இரு வயலின்கள் ஒன்றன்பின் ஒன்றாகவும், ஒன்றையொன்று எதிரொலிப்பது போலவும், ஸ்பெஷல் எஃபக்ட்களைப் பொழிந்தார். சுப்ரமண்ய பாரதி பற்றி சுத்தானந்த பாரதி பாடிய 'பாமாலை' தமிழ்ப்பாவை வாசித்தார்.

கொட்டாங்குச்சி வயலினை வைத்துக்கொண்டு கச்சேரி செய்வது எத்தனை கஷ்டம்? அதைவிடக் கஷ்டம் கச்சேரி வாத்தியத்தில் கொட்டாங்குச்சி வயலினின் நாதத்தைப் பொழிவது. குன்னக்குடி எக்ஸ்பிரஸ், மோகனம் ஜங்ஷனில் இந்த வித்தையையும் காட்டியது. கொட்டாங்குச்சி வயலின் என்ன... 'ஒரு மிருகக்காட்சி சாலையே இதிலே இருக்கிறது பார்' என்பது போல் அச்சாலையின் கதவுகளைத் திறந்தும் விட்டுவிட்டது! இத்தனைக்கும் பிறகு 'ராமனைக் கண்ணாரக் கண்டேனே' என்று ஆரம்பித்தார். நாம் பார்க்கப் போவது ராமனையா? ராவணனையா என்று சந்தேகம் வந்து தொலைத்தது! பிரதான ராகமான பைரவியும் இப்படியே படாதபாடு பட்டது.

குன்னக்குடி எக்ஸ்பிரஸ் விபத்தின்றி பயணம் செய்வது வெற்றிதான். ஆனால் எடுத்துக் கொள்ளும் ரூட்டின் குண்டு - குழிகளில் விழுந்து எழும் பயணிகள் களைத்துப் போகின்றனர். (அன்று அரங்கம் பாதிக்கு மேல் காலி என்றால் நம்ப மாட்டீர்கள்)

சங்கீதத்துக்கென்று, அதிலும் கர்னாடக சங்கீதத்துக்கு, ஒரு அழகான ரூட் இருக்கிறது. அதற்குப் பெயர் சௌக்கியபாவம். குன்னக்குடி எக்ஸ்பிரஸ் அதைப் புறக்கணித்துவிட்டு, மிகைபாவம் என்ற ரூட்டில் பகிரங்கப் பயணம் செய்கிறது. ஓட்டுனருக்கே ஒருநாள் சலிப்பு வராதோ!?

## நியூஸுக்கே நியூஸ்!



சன் டீ.வி அருணா ரமேஷ் கோஜுரியோ கராத்தேயில் கறுப்புப்பட்டை வாங்கியிருக்கிறார்.

## போஸ்ட் கார்ட் கதைகள்

# சரக்கு

"நம்ம கம்பெனி லேபிளை ஒட்டி, டுப்ளிகேட் அழகு சாதனப் பொருள்களைத் தயார் செஞ்சு விக்கறவங்க யார்னு ஆதாரத்தோடு தெரிஞ்சு போச்சு. அவங்கமேலே நடவடிக்கை எடுக்க ஏற்பாடு செய்யட்டுமா ஸார்?" மேனேஜர் நல்லசிவம் பவ்யமாய்க் கேட்டார்.

"வேண்டாம். நம்ம தயாரிப்புகளைவிட அவங்களது தரமா இருக்கு. விற்பனையும் நல்லா இருக்கு. நமக்கு நஷ்டம் அதிகமா இருக்கறதால கம்பெனிய மூடிட்டா, கேவலமா பேசுவாங்களேன்னு



தயங்கினோமே, இனி யோசிக்காம இழுத்து மூடிடலாம். ஜனங்களுக்கு எப்பவும் போல சரக்கு கிடைச்சிட்டிருக்கறதாலே இந்த விஷயமே வெளியே தெரியாது."

மேனேஜர் வாயடைத்து நின்றார்.

எம். கதிர்வேல்

# யானை

க. இந்துமதி



மணிஓசை எழுப்பியபடி அசைந்து அசைந்து கடை வீதியை வலம் வந்து கொண்டிருந்தது யானை. யானையின் மத்தகத்தின் மீது சிறுவன் ஒருவன் அமர்ந்து கொண்டிருக்க, யானைப் பாகன் ஒவ்வொரு கடையாகச் சென்று காசு வசூலித்துக் கொண்டிருந்தான். சிறுவர், சிறுமியர் கூட்டம் கூச்சலிட்டவாறு யானையைப் பின் தொடர்ந்து கொண்டிருந்தது. சில குழந்தைகள் யானையின் மீது அமரவைக்கப்பட்டு கீழே இறக்கப்பட்டுக் கொண்டிருந்தார்கள். என் ஏழு வயது மகன், அப்பா, "சின்னப் பசங்களை யானை மேலே எம்பா ஏத்தறாங்க?" என்றான்.

"யானை மீது ஏறினால் நல்லா படிப்பு வரும்" என்று பதிலளித்தேன்.

"அப்ப, யானை மேல் உட்கார்ந்து வர்ற பையன் ஏன் ஸ்கூலுக்குப் போகாம, படிக்காம இருக்கான்?"

நான் என் மகனுக்கான பதிலையும், கீழே அறுந்து விழுந்த மூக்கையும் தேடி தலைகுனிந்தேன்.

# ரிலயன்ஸ் இப்படிச்

● வே. சித்ரா, கும்மிடிப்பூண்டி

*? பெண்களுக்குச் சாமியார்கள் என்றாலே பயம் ஏற்பட்டுள்ளதே?*

! அதைவிடப் பெண் சாமியார்களைக் கண்டு இன்னும் அதிக பயம் எல்லோருக்குமே ஏற்படுகிறது. "சங்கராச்சார்யார் கைது பற்றி சோனியாவின் மௌனமே ஒரு சதித்திட்டம்'' என்று ஒரே போடாகப் போட்டார் பாருங்கள்!

● கு. சின்னதுரை, சாக்காங்குடி

*? கடவுள் இல்லை என நம்புவதால்தான் சாமியார்கள், மடாதிபதிகள் அதர்மமான செயல்களில் ஈடுபடத் துணிகிறார்கள் என்கிறேன்...*

! தங்களைக் காண வரும் பக்தர்களைப் பார்த்துவிட்டு, கர்வப்பட்டுத் தங்களையே கடவுள் என்று நினைத்து விடும் முதல் அதர்மம், மற்ற அதர்மங்களுக்கு வழி வகுக்கிறது.

● எம். தாஹிரா ஃபாத்திமா,
நெல்லை - 5

*? காங்கிரசுடன் ஜனநாயகப் பேரவை இணைந்திருப்பது குறித்து...?*

! காங்கிரஸ் கோஷ்டிப் பூசலுக்கு மேலும் ஒரு கோஷ்டி!

● ப. ராமகிருஷ்ணன்,
ஆவணத்தங்கோட்டை

*? ஸ்ரீ ஜயேந்திரர் மீது அனுராதா ரமணன் குற்றம் சாட்டியுள்ளாரே?*

! குற்றம் சாட்டியது அனுராதா ரமணனா அல்லது அனுராதா ரமணன் என்னும் நாவலாசிரியையா என்பதை, ஜயேந்திரர் மீதான வழக்குகளின் இறுதித் தீர்ப்புகள் வெளியான பிறகுதான் நிர்ணயிக்க முடியும்.

● காஞ்சனா ராதாகிருஷ்ணன்,
சென்னை - 28

*? சில வருடங்களாக கண்களை மூடிக் கொண்டு அந்தத் தலைவர் சொன்னதை ஆதரித்து வந்த கல்கியில் சமீப காலமாக ஒரு மாற்றம் காணப்படுகிறதே...?*

! கண்ணை மூடிக் கொண்டு எதிர்ப்பவர்களுக்கு, கல்கி கண்ணை மூடிக் கொண்டு ஆதரித்தது போல் தோன்றுவதில் வியப்பில்லை. கல்கி, கண்களை மட்டுமல்ல, சிந்தனையையும் திறந்து வைத்துள்ளது. அதன் விமர்சனங்கள், தலைவர்களின் செயல் - சொல் இவற்றுக்கு ஏற்ப மாறுபடத்தான் செய்யும். இதற்குப் பெயர்தான் நடுநிலைமை.



* அர்த்தமற்ற வெளியேற்றம்!



* நிர்ணய காலம்



* மிளகாய்ப் பொடி!

# செய்யலாமா?

● க. செல்வம், காரைக்கால்

? ஆங்கில நிகில் படம் - தமிழ் நிகில் படம் - என்ன வித்தியாசம்?

! ஆங்கிலத்தில் நிகிலுக்கு நடுவே கொஞ்சம் நகைச்சுவை இருக்கும். தமிழில் நிகிலே நகைச்சுவையாக இருக்கும்.

● ஆர்.எம்.இ. மலை,
அக்ரஹாரம் (அஞ்சல்)

? ஜயேந்திரர் கைது நடவடிக்கை தமது அரசியல் வாழ்க்கையில் எடுக்கப்பட்ட வேதனையான முடிவு என்று ஜெயலலிதா சொல்லியிருக்கிறாரே...?

! ஜெயேந்திரர் மீதான வழக்குகளில் அவர் குற்றவாளி என நிருபணமாகி தண்டனை பெற்றால், ஜெ. எடுத்தது நிச்சயம் வேதனையான முடிவு; விடுதலை பெற்றாலோ, ஜெக்கு அதை விடப் பல மடங்கு வேதனையான முடிவு. எனவே ஜெ. கூறியது உண்மை என ஏற்க முடிகிறது.

● எம். அசோக்ராஜா,
அரவக்குறிச்சிப்பட்டி

? ரஜினி அரசியலிலிருந்து வெளியே வந்து விட்டாராமே...?

! தமிழ்நாட்டில் நடிப்பும் அரசியல்தான்; அரசியலும் நடிப்புதான். இதில் 'இறங்குவது', 'வெளியேறுவது' போன்ற வார்த்தைகளுக்கே அர்த்தமில்லை!

● ரா. சாலமோன், ஆலங்குளம்

? செய்தி என்பது எப்படி இருக்க வேண்டும்?

! சமுதாய நலன் கருதுவதாக, உண்மையானதாக, நடுநிலையாக, உள்நோக்கம் அற்றதாக... என்.டி.டி.வி போல் விருது பெறத் தகுதி உள்ளதாக!

● வே. பாலா, திண்டுக்கல்

? சங்கரராமன் போல இனி தமிழகத்தில் கொலையுண்டவர்க்கெல்லாம் ஐந்து லட்சம் நிதி உதவி வழங்கப்படுமா என்று கருணாநிதி கேட்டுள்ளது பற்றி...?

! மிக மோசமான முன்னுதாரணம் என்று கூறியிருந்தால், அரசியல் பிராண்ட் பருப்புப்பொடி; கருணாநிதி கேள்வி கேட்ட விதம் மிளகாய்ப் பொடி!



● உடையப்பர்!



● 'மௌன'... மிரட்டல்!

● வசீகரன், சென்னை - 18

? இசைக்கு மொழி இல்லை என்கிறாரே இளையராஜா... அப்படியானால் கவிஞர்கள் தேவையில்லையா...?

! மொழியைக் கடந்த சக்தி இசைக்கு



● மகிழ்ச்சி மெட்டு

உண்டு என்பதையே அவர் குறிப்பிடுகிறார். கவிஞர்களோ, கவிதையோ தேவையில்லை என்று நினைத்தால், திருவாசகத்துக்கு அவர் இசையமைப்பாரா...? தாம் பிறந்ததே அப் பணிக்குதான் (நன்றி சின்னமனூர் ஜி. மாரியப்பனின் கேள்வி) என்று பேசுவாரா...? அந்தத் திருவாசகத்தையும் ஸிம்ஃபனி முறையில், மேலை - கீழை இசைகளின் சங்கமமாக மெட்டுக் கட்டி மகிழ்வாரா...?

● **ரேவதி ஸ்ரீதர், மேட்டுப்பாளையம்***

? ***நோயாளியான ஸ்ரீரங்கம் உஷாவை இந்த அளவுக்குக் கேவலப்படுத்தியது பத்திரிகை சுதந்திரமா...?***

! விற்பனைத் தந்திரம்!

● **ஆசிரஸ். பிரபு, சென்னை - 41.**

***'கல்கி பத்திரிகை கூறுவது போல் பீடாதிபதியை விட பீடம் உயர்ந்தது என்று பிரித்துப் பார்க்க முடியாது' என ஓம் சக்தி இதழ் கருத்துக் கூறியுள்ளதே, இது ஏற்புடையதுதானா?***

! ஓம் சக்தி அவ்வாறு கூறியிருப்பின் அது ஏற்புடையதல்ல. பீடாதிபதியைவிட பீடமே உயர்ந்தது என்று, தம் வாழ்நாளில் அப்



• பிரும்மாண்ட.....



•... தயாரிப்பு!

பீடத்தை எளிமையாய் அலங்கரித்த பரமாச் சார்யாரே பலமுறை சுட்டிக் காட்டியுள்ளார். ஒரு துறவி என்கிற முறையில் தமக்குச் செய்யப்படுகிற நமஸ்காரத்தைக் கூட, இறையர்ப்பணம் செய்ய வேண்டும் என்று நியதி இருப்பதைச் சுட்டியுள்ளார்.

● **ஜி. ராமதாஸ், தஞ்சாவூர்**

? ***மத்திய அரசின் மொத்த வருவாயில் ஏறத்தாழ பத்து சதவிகிதம் சேவை வரி மூலம் பெறப்படுவதாக ப. சிதம்பரம் கூறியுள்ளது...?***

! மாநில அரசுக்கு விற்பனை வரி போல, மத்திய அரசுக்கு சேவை வரி ஓர் அக்ஷய பாத்திரம். மக்களுக்குத் திருவோடு! பல்வேறு நேர்முக, மறைமுக வரிகளையெல்லாம் செலுத்திய பிறகு, அவர்களிடம் பிச்சைக் காசு கூட மிஞ்சுவதில்லை.

● **விமலா வரதராஜன், ஹைதராபாத் - 47** ❐

? ***மக்களால் மிகவும் மதிக்கப்படும், ரிலயன்ஸ் போன்ற மிகப் பெரிய நிறுவனம், Illegal routing of calls என்ற மிகத் தவறான ஒரு செயலைப் புரிந்தது குறித்து...?***

! அரசு நிறுவனத்துக்கு நியாயமாகச் சேர வேண்டிய பெருந்தொகையைக் கொடுத்து, கணக்கை இப்போது நேராக்கி விட்டார்கள். எனினும் ரிலயன்ஸ் இழைத்தது தெரிந்து செய்த குற்றமா? அல்லது அறியாமல் செய்து விட்ட தவறா என்பது கண்டறியப்பட வேண்டும்.

● **எம். ஆண்டனி தமிழரசன், மும்பை - 17**

? ***'2010ம் ஆண்டு நான் முதல்வர் ஆவேன்' என்று டி. ராஜேந்தர் சொல்வது...?***

! அட்வான்ஸ் பாராட்டுகள்! ஆறு வருஷத் தயாரிப்பென்றால் பிரும்மாண்டமாக இருக்கும் என்பது புரிகிறது. சரி, முதல்வராக நடிக்கப் போவது இவரேவா? சிம்புவா!

* ரூ.50 பரிசு பெறுபவர்
ரேவதி ஸ்ரீதர்,
3D லிங்கம்மாள் நிலையம்,
போரே கவுடர் வீதி!
எல்.எஸ்.புரம்,
மேட்டுப்பாளையம் - 641 301

❐ ரூ 100 பரிசு பெறுபவர்:
விமலா வரதராஜன்
ஃபிளாட் 203, இரண்டாவது மாடி,
எஸ்.வீ.ஸ் ரமணா பாரடைஸ்,
ஈஸ்ட் ஆனந்த் பாக்,
மல்கஜ்கிரி, ஹைதராபாத் - 500 047

# சின்னான் செய்திகள்



"ஏலேய் என்ன இது. அநியாய மாயில்லை இருக்கு. எந்தப் பயப்புள்ளையோ பேசினதுக்கு இடி, அதாங்க பில்லு என் தலைல வந்தில்ல விழுந்திருக்கு. அந்த செல்ஃபோன் கம்பெனிக்காரன் நாசமாப்போக" இப்படி ஒரு திருநெல்வேலி அண்ணாச்சி குமும்பிப் போயிருக்காரு. பக்கத்துல நானும் பேசாத நம்பருக்கெல்லாம் பில் கட்டணுமான்னு தேம்பத் தேம்ப முழிச்சிட்டிருந்தேன். அது என்னமோ தெரியலை, எங்க வீட்டு பெட்ரூமுக்குப் போனா சிக்னலே கிடைக்காது. 98.3 டிகிரில சிக்னல் கிடைக்கும். அவ்வளவுதான். அந்த நேரத்துல ஏதும் கால் வந்துச்சுன்னா, அவ்ளோதான். செல்லை அசைச்சா கால் கட் ஆயிருமோன்னு, நானும் அதே டிகிரில தலை கீழா நின்னு பேச வேண்டியிருக்கு. கொடுமைடா சாமி!

நெட்வொர்க் தகராறு, பில் குளறுபடி, வாடிக்கையாளர் சேவை மையத்துக்கு ஃபோன் பேசினா, கண்டுக்காம இருக்கிறது... இப்படி எல்லாத்திலேயும் நம்பர் ஒன்னாக இருக்கிறது BSNL தான் அப்படின்னு 'ட்ராய்' தன் டிராயரிலிருந்து ஓர் அறிக்கையை எடுத்து விட்டிருக்கு. அப்படிப் போடு!

இந்த மாதிரி பண்ணியிருந்தாங்கன்னா நான் பண்ற குசும்புக்கு பள்ளிக்கூடத்துக்கே போயிருக்க மாட்டேன். எந்த மாதிரி? அதான் லண்டன்ல சில பள்ளிகள்ல க்ளாஸ்ரூம்ல எல்லாம் வெப் காமிரா வைச்சு அதுக்கு லிங்க் பெற்றோர்களோட வீட்டு அல்லது ஆபீஸ் கம்ப்யூட்டர்ல கொடுத்திருக்காங்களாம். புள்ளைங்க எந்தச் சேட்டையும் பண்ணாமதேமேன்னு இருக்க வேண்டியதுதான். இந்த திட்டத்துக்கு செம ரெஸ்பான்ஸாம். ஆனா, வீட்லெ இருந்துக்கிட்டே நம்மூர் (தூத்துக்குடி) 6-ஆவது படிக்கிற ஸ்கூல் பையன் ஒருத்தன், ஊரையே கதிகலங்க வச்சிட்டான். ஸ்கூலுக்கு லேட்டா போனதால வாத்தியார் திட்ட, பையன் நேரா வீட்டுக்கு வந்து பாம் இருக்குன்னு சொல்லி ஸ்கூலுக்கு மர்ம ஃபோன் பண்ணிட்டான். க்யூ பிராஞ்ச் போலீஸ் முதற்கொண்டு நாயெல்லாம் கொண்டு வந்து தேட, ஒண்ணுமில்லை. அப்புறம் ஸ்கூல் ஃபோன்ல இருக்கிற காலர் ஐடி வச்சு, பையனை மடக்கியிருக்காங்க. சின்னப் பையன்றதாலே கண்டிச்சு விட்டிருக்காங்க. (பையன் எதிர்காலத்துல சின்னானா வர வாய்ப்பிருக்கு)

"அண்ணன் வழி கு..கு..றுக்கு வழி", "அரசியலுக்கு வருவேன்னு சொல்லிக்கிட்டேயிருக்கணும், ஆனா வரவே கூடாது"', "அடப்பாவிகளா! ஊமைப் படத்துல கூட பஞ்ச் டையலாக் கேப்பீங்களே நீங்க", "எனக்கு இமயமலைக்கு போக நேரமாயிடுச்சு", "படத்தோட பேரை மாத்தச் சொல்லி நீங்க சொல்லக் கூடாது. உங்க கட்சி பேர மாத்தச் சொல்லி நாங்க ஏதாவது சொல்றோமா?" இப்படி மகாநடிகன்ல சத்யராஜ் யாரையும் விட்டு வைக்காம வசனத்துல வறுத்தெடுத்துருக்காராம். எங்கேயிருந்து எதிர்ப்பு கிளம்பினாலும் படத்துக்கு மாஸ்தான். செம தில்லுப்பா.



* ஊர்த்தவ தாண்டவர்

ஆயிரம் தீபங்கள் ஏற்றி வைத்தாலே 'லட்ச தீபத் திருவிழா' என்று கொண்டாடுவது நம் வழக்கம். உண்மையிலேயே ஒரு லட்சம் அகல் தீபங்களை ஏற்றி வைத்தால் எப்படியிருக்கும்? ஒரு லட்சமல்ல, அதற்கும் மேல் தீபங்களை ஏற்றினார்கள் திண்டுக்கல் தாடிக் கொம்பு சௌந்தர ராஜப் பெருமாள் கோயிலில் - கார்த்திகைக்கு ஒரு லட்சத்து ஏழாயிரம் அகல் தீபங்கள் வாசல், மதிற் சுவர், மேல் தளம், சந்நிதிகள், கோயிலின் 3 ஏக்கர் மைதானம் என்று வரிசையாக அடுக்கி ஒரே நேரத்தில் ஏற்றி வைக்க, அந்தக் 'கண் கொள்ளாக் காட்சி'யைக் காண சுற்று வட்டார மக்கள் கூட்டம் அலை மோதியது.

இந்த சௌந்திரராஜப் பெருமாளின் அதி விசேஷம், வழக்குகளைத் தீர்ப்பது. வந்த வம்பு, வராக்கடன், சொந்தச் சிக்கல், சொத்துச் சிக்கல், எல்லாவற்றுக்கும் தேய்பிறை அஷ்டமி பூஜையில் பங்கேற்று பிரார்த்தனை செய்தால் போதும்.



* அகோர வீரபத்திரர்



* நரசிம்ம ஹிரண்ய யுத்தம்



நாடி வந்து நம்பிச் செய்தால், தேடி வந்த வம்பெல்லாம் தாடிக்கொம்பு அழகர் பார்வை பட்டு ஓடிப் போய் விடுமாம்.

தாடிக்கொம்பு சௌந்திரராஜப் பெருமாள் கோவில் ஆன்மிக அறக்கட்டளைத் தலைவர், தொழிலதிபர் பி.எஸ். வேலுச்சாமி தலைமையிலான குழு இந்த ஏற்பாட்டைச் செய்து வருகிறது.

- ஜெயச்சந்திரன்



* ஹிரண்ய சம்ஹாரம்

* ஸ்ரீ சௌந்திரராஜப் பெருமாள் கோயில்



* ஸ்ரீ சக்கரத்தாழ்வார்





# ஜெயஸ்ரீ ராஜ்

**அஞ்சலி**



'**க**டவுள் ஒரு தோட்டக்காரன்! எப்போதும் நல்ல கனிகளையே முதலில் பறித்துக் கொள்கிறான்'- ஜெயஸ்ரீராஜின் அகால மரணச் செய்தியைக் கேட்டதும் (டிசம்பர் 6ம் தேதி) இந்தக் கன்னட சொல வடைதான் நினைவுக்கு வந்தது.

ஜெயஸ்ரீராஜ், 'கல்கி' வாசகர்களிடையே பெரும் பிரபலம். அமரர் 'கல்கி'யின் அண்ணாவின் பேத்தி. 'மும்பை மசாலா' பகுதியை, சூடாகவும், சுவையாகவும் எழுதி வந்தவர்... அந்த அந்தாதி ஸ்டைலும், அற்புதமான தொகுப்பும் வாசகர்களை வெகுவாகக் கவர்ந்தவை. அது அமிதாப்பச்சனின் சிறப்புப் பேட்டியாகட்டும், ஆறு வரிச் செய்தியாகட்டும், அத்தனை சிரத்தை யோடும் கறுகறுப்பாகவும் தயாரிப்பார். ஒரு ஃபோன் போதும். மழையோ, இடியோ, மறு நாளே சூரியரில் மேட்டர் பறந்து விழும்! வேகம்... வேகம்! அந்த வேகத்துடன், மாயக் கதைகளில் வரும் தேவதை போல மறைந்தும் விட்டார்!

அவரது சிரித்த முகம், தயாள குணம், படைப் புத்திறன், ஆக்கபூர்வமான பேச்சு, அபரிமித மான நம்பிக்கை போன்ற குணங்களை எடுத்துச் சொல்லிச் சொல்லி ஜெயஸ்ரீயின் உறவுகளும், தோழிகளும் கடிதங்கள் எழுதிக் கொண்டிருக் கின்றனர். யாருக்கு யார், என்ன ஆறுதல் சொல்ல?

**அ**ன்பான கணவர், ஒரே மகன், மகள் என அழகான குடும்பம், வசதியான வாழ்க்கை, சமுதாய சேவை, கலை ஆர்வம் என முழுந்து மகாராணியாக வாழ்ந்து கொண்டிருந்தவருக்குத் தொண்டையில் ஏதோ பிரச்னை.

"தொண்டையிலே கிச்...கிச்... விக்ஸ் மாத்திரை சாப்பிடுங்க... 'கீச்...கீச்...சை விரட்டுங்க" என்று ஃபோனில் சொன்ன போது...

"விக்ஸ் ஃபேக்டரியே சாப்பிட்டாச்சு! என்னால விக்ஸோட ஷேர்ஸ் விலை எல்லாம் ஏறியிருக்காமே!" என்றார். அப்போதும் சிரிப்புதான்!

மும்பை முலுந்த் ஃபைன் ஆர்ட்ஸில் பெண்கள் பிரிவை நிறுவி உறுப்பினர்களின் திறமையை வெளிக் கொணர்ந்த ஜெயஸ்ரீ மேடைப் பேச்சாளராகவும் பிரகாசித்தவர். சுகி சிவம், கு.நா. போன்றவர்களின் மனமார்ந்த பாராட்டைப் பெற்றவர்.

பேச, பழக இலகுவானவர்; பொது சேவையில் அமைதியாக ஈடுபட்டு வந்தார்.

அமரர் கல்கிக்கும், ஜெயஸ்ரீக்கும் இரண்டு ஒற்றுமைகள்:

- நையாண்டி நகைச்சுவை
- ஐம்பத்தோரு வயதில் மறைந்தது

அஞ்சலி செலுத்துகிறோம். துயர் ஆறுவதற்கு நெடுங்காலம் ஆகும்.

**- பானு, அனு**

# தெரிஞ்சா சொல்லுங்க!

லைஃப்ல சில பல கேள்விகளுக்குப் பதிலே தெரியமாட்டேங்குது எனக்கு...

'ஸோ வாட் சுமி! நீ சின்னப் பொண்ணு தானே, போகப் போகப் புரியும்'னு என்னைச் சமாதானம் பண்ணுவீங்க... நோ! 'நல்லவங்களுக்கே ஏன் எல் லாக் கஷ்டமும் வருது? லல்லு பிரசாத் யாதவை ராப்ரி எப்படி கல்யாணம் பண்ணிக்கிட்டாங்க? இந்த வருஷம் மட்டும் ஏன் தமிழ்நாட்டுல பருவ மழை பெய்தது?'ன்ற மாதிரியான ஃபிலஸாஃபிகல் கேள்விகளைப் பத்திப் பேசலை நான். அதுக்கெல்லாம் பதில் தெரியாம இருக்கிறதே நல்லது.

என்னோட டவுட் வேற ரேஞ்சுல போகுது.

இலக்கிய நூல்கள், கவிதைத் தொகுப்புகள் வெளியிடற எழுத்தாளர்கள், எதுக் காக மினிமம் இரண்டு பேர்கிட்ட முன்னுரை வாங்கறாங்க?

ஒரு நூலை ஒரு நிபுணர் மதிப்பிட்டு கருத்துச் சொன்னா போதாதா...?

அப்புறம், அதே நூலை ரிலீஸ் பண்ணுகிற போது, குறைஞ்ச பட்சம் ஏழு பேர் அதைப் பத்திப் பேசணுமா?

இன்விடேஷன்ல போடற டைமுக்கு ஏன் எந்த புத்தக வெளியீட்டு விழாவுமே தொடங்கறதில்லே? அதிலே குறிப்பிட்டிருக்கற ஸ்பீக்கர்ஸ்ல அட்லீஸ்ட் மூணு பேர், ஏன் லேட்டா வராங்க? ('தலைமை'ன்னு போடற பெரிய தலை, விழாப் பக்கம் தலை வைச்சே படுக்காமப் போறதும் உண்டே?)

பேச வர்றவங்க, சம்பந்தப்பட்ட எழுத்தாளரையும் அவர் படைப்பையும் வாழ்த்தற போக்குல, வேற கோஷ்டிக்காரங்களை ஏன் வைது வயித்தெரிச்சல் கொட்டிக்கறாங்க?

வெளியிடப்படற புக்கோட அட்டைக்கும் உள்ளே இருக்கற கதை / கட்டுரை / கவிதைக்கும் சம்பந்தமே இல்லாம அமைக்கறது எப்படி, எதுக்கு ஃபாஷனாச்சு?

போதும் போதாததுக்கு, கவிதைப் புத்தகமானா, உள்ளே பக்கத்துக்குப் பக்கம் இங்கிலீஷ் மாகஸீன்லேருந்து முயல்குட்டி காது, பட்டாம்பூச்சி மீசை, சிந்திய டீயோட கப் சாஸர், அழகான(?) பெண்ணின் அலைபாயற கூந்தல்னு அர்த்தமில்லாத படங்கள் வரது ஏன்?

இந்த மாதிரியெல்லாம் காம்ப்ரமைஸ் ஃபார்முலாவுல புக் கொண்டு வந்து, ஃபார்மாலிடி ஃபார்முலாவுல அதை ரிலீஸ் பண்ணினா, எழுத்துக்கு மதிப்புக் கூடுமா குறையுமா?

– இதுக்கெல்லாம் பதில் தெரிஞ்சு நீ என்ன பண்ணப்போற சுமி...? சூப்பர் மார்கெட் ரைட்டிங்ஸை தொகுப்பா போடற திட்டமிருக்கான்னு கேட்கறீங்க இல்லே...?

நோ! தி ஆன்ஸர் இஸ், எ ஃபார்ம் நோ!

இந்தக் கேள்விகளை கல்கி எடிட்டர்கிட்டே 'டாஸ்' பண்ணிக்கிட்டிருந்தப்போ, தும்புரு ஸார் வந்து சேர்ந்தார். அவர் பங்குக்கு ஒரு கேள்வியை எழுப்பி வைச்சார்:

'ஜூனியர் ஆர்டிஸ்டுகளுக்கெல்லாம் நாங்க வாசிக்க முடியாதுன்னு நேத்து வரை முறுக்கிட்டிருந்த சில பக்க வாத்திய பெரிசுங்க, இன்னிக்கு சில தொட்டில் பாப்பாக்களின் மழலை கீதத்துக்குக் கூட வாசிக்க ஓடோடி வராங்களே...? சைல்ட் பிராடிஜிகளின் போஷகர்களாகத் தங்களைக் காட்டிக்கறதுக்கா? இல்லைன்னா, அப்படி யாவது சான்ஸ் கிடைச்சா சரின்ற சரணாகதி நிலையா?..

பதில் தெரிஞ்சவங்க எழுதிப் போடலாம்.

- சுமி






பிரணவத்தின் உயர்வைப் பற்றிச் சொன்னேனல்லவா... பிரணவத்தைத் தனித்து உபாஸனை பண்ணுவதற்கு சன்னியாசிகளுக்கு மட்டும்தான் அதிகாரமுண்டு. சன்னியாசிகளாக இருக்கக் கூடியவர்கள் நித்யம் பிரணவோபாஸனை பண்ண வேண்டும். மூன்று மாத்திரை விராமத்திலே பிரணவத்தை ஜபம் பண்ண வேண்டு. அவர்கள் கையிலே இருக்கிற தண்டத்தில் உள்ள வஸ்திரத்துக்குப் பவித்ரம் என்று பெயர். அதை எடுத்து, அதை நனைத்து, கையிலே மூடிக் கொண்டு ஜபம் பண்ணவேண்டும்.

நித்யம் பிரணவத்தைத் தனித்துச் சொல்வதற்கு சன்னியாசிகள்தான் அதிகாரிகள்; கிருஹஸ்தாசிரமத்திலோ மற்ற ஆசிரமத்திலோ இருக்கக் கூடியவர்கள் மந்திரத்தோடு சேர்த்துத்தான் பிரணவத்தைச் சொல்ல வேண்டும்.

ஸ்த்ரீகள் ஒரு நாளும் பிரணவத்தை வாக்கினால் சொல்லக் கூடாது. அதற்கு பதிலாக 'அம்' என்று அவர்கள் சொல்ல வேண்டும். அப்படி 'அம்' என்று சொன்னால், பிரணவத்தைச் சொன்னால் புருஷர்களுக்கு என்ன பலன் ஏற்படுமோ, அதே பலன் ஸ்த்ரீகளுக்கும் ஏற்படும்.

பிரணவோச்சாரணை ரொம்ப நீளமாகவும் இருக்கக் கூடாது. ரொம்ப குறுகியும் இருக்கக் கூடாது. அதற்குக் காலத்தை நிர்ணயம் பண்ணி, இவ்வளவு மாத்திரையில் அதைச் சொல்ல வேண்டும் என்று விதித்திருக்கிறது.

சர்வ வேதங்களுக்கும் முடிச்சு இந்தப் பிரணவம். வேதமனைத்துக்கும் பீஜம் (விதை) அது. பிரணவத்தை விவரித்தால் வியாக்ருதி; அதை விவரித்தால் உயர்ந்த காயத்ரி. அதை விவரித்தால் எல்லா மந்திரங்களும், எல்லா சாகைகளும் வந்து விடுகின்றன.

ஆகையினால், காயத்ரி என்பது, பிரணவத்தைப் போல் ரொம்ப சுருக்கமில்லாமலும், வேதத்தைப் போல் ரொம்ப விரிவு இல்லாமலும், இரண்டுக்கும் இடைப்பட்ட நிலையிலே அழகாக அமைந்திருக்கும்படியான மந்திரம்.

எல்லா சந்தஸ்ஸுக்கும் (சந்த அமைப்பு) மாதாவாக - தாயாக விளங்கக் கூடியது காயத்ரி சந்தஸ். பிராத: காலத்தில் (விடியற்காலையில்) ஓதக் கூடிய மந்திரங்களெல்லாம், காயத்ரி சந்தஸ்ஸில் அமைந்திருக்கின்றன. காயத்ரி சந்தஸ்ஸுக்கு இருக்கும்படியான ஏற்றத்தை வேதமே எடுத்துக் காட்டுகிறது:

முப்பத்து மூன்று நாட்கள் தேவதைகளுக்கும் அசுரர்களுக்கும் யுத்தம் நடந்தது. அதிலே தேவதைகளுக்கே வெற்றி ஏற்பட்டது. கடைசியிலே ஒரு நாள், தேவதைகளுக்குத் தோல்வி ஏற்பட்டுப் போய் விட்டது! வெற்றி ஏற்பட்டதில் சந்தோஷப்பட்டு, தேவதைகள் கடைசி நாள் யுத்தத்துக்குப் போகிற போது தோல்வியே அடைந்தார்கள். ஏன் இந்தத் தோல்வி என்று தெரிந்து கொள்ள முயன்றபோதுதான் அவர்களுக்குப் புரிந்தது... நித்தியம் யுத்தத்துக்குக் கிளம்புவதற்கு முன்னால், அவர்கள் காயத்ரியை ஸேவித்துவிட்டுத் தான் செல்வார்கள். அன்றைய தினம் அவர்கள் காயத்ரியை மறந்துவிட்டார்கள். ஜயம் ஏற்படவே,

**முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்**

ஜயத்தைக் கொடுத்த காயத்ரியை மறந்து விட்டார்கள். மறந்ததனாலே அபஜயம் ஏற்பட்டது, தேவதைகளுக்கு.

– வேதமானது சொல்கிற இந்த விஷயத்தைப் பாராயணமாகப் பண்ணுகிறபோது கூட குரலை இறக்கி, சின்னக் குரலில்தான் சொல்ல வேண்டும். 'தேவதைகளுக்குத் தோல்வி' என்பதைப் பெரும் குரலில் சொல்லக் கூடாது. 'நல்லோர்களுக்கு ஒரு கஷ்டம் ஏற்பட்டால் அதைப் பெருங் குரலில் சொல்லாதே' என்கிறது சாஸ்திரம். பாராயணம் பண்ணிக் கொண்டே வருகிறபோது இந்த இடத்திலே குரலைக் குறைத்துக் கொள்வார்கள் வேத வித்துக்கள். இத்தனை நேரம் வேதம் சொன்னதனால் களைப்பு ஏற்பட்டு அவ்வாறு குரலைத் தாழ்த்தவில்லை... 'நல்லோருக்குக் கஷ்டம் வந்தால் உரத்துச் சொல்லாதே!' என்று சாஸ்திரம் விதித்ததால்தான், அவ்வாறு குறைத்துச் சொல்கிறார்கள்.

**கா**யத்ரியை



மறந்ததாலே தேவர்களுக்கு அபஜயம் ஏற்பட்டது. வீர்யம், தேஜஸ், பலம் எல்லாவற்றையும் அவர்களிடமிருந்து எடுத்துக்கொண்டு போய்விட்டாள் காயத்ரி! போய், தனியே ஓர் இடத்திலே நின்று கொண்டு விட்டாள். அப்போது தேவதைகளெல்லாரும் திரும்பவும் காயத்ரியைப் போய்த் துதித்தனர்.

நல்ல ஓஜஸ்வதி (ஆத்ம சக்தி) காயத்ரி பலஸ்வதி (சரீர சக்தி) காயத்ரி தேஜஸ்வினி (பிரகாசிப்பவள்) காயத்ரி- இவ்வாறு பிரார்த்தித்தார்கள் தேவர்கள். 'தேவதைகளுடைய பெயர், இருப்பிடம் எல்லாமே நீதான்; உன்னை விட்டால் எங்களுக்கு கதி ஏது?' என்று ஸ்தோத்திரம் பண்ணினார்கள்.

ஸ்தோத்திரம் பண்ணிய தேவர்களைப் பார்த்து காயத்ரி குளிர கடாக்ஷித்து, அவர்கள் பக்கம் வந்து விட்டாள்!

அசுரர்கள் எல்லாம் என்ன பண்ணினார்கள். காயத்ரியைக் கண்டவாறு ஏசினார்கள்! எனவே அசுரர்கள் பக்கம் போகாமல், காயத்ரி தேவர்கள் பக்கம் வந்து பலத்தைக் கொடுத்தாள்.

யார் ஜபிக்கிறார்களோ, ஸ்தோத்திரம் பண்ணுகிறார்களோ, அவர்கள் பக்கம் இருந்து அனுக்கிரஹம் பண்ணுகிறாள் காயத்ரி.

**நா**ம் சந்தியாவந்தனத்தில் நித்யம் காயத்ரியை ஜபித்தோமானால், அந்த காயத்ரி நம் பக்கமும் இருந்து நம்மையும் ரக்ஷிப்பாள் என்று ஏற்படுகிறது அல்லவா!

அப்படிப்பட்ட காயத்ரி மந்திரத்தை, எல்லாவற்றுக்கும் ஆதாரமாக, எல்லாவற்றுக்கும் மூலமாக இருக்கக் கூடிய காயத்ரி மந்திரத்தை உள்ளடக்கியது ஸ்ரீ விஷ்ணு சஹஸ்ரநாமத்தின் முதல் இருபத்திநான்கு நாமாக்கள்.

**'விச்வமஸி விச்வாயு:' என்று**
**காயத்ரியிலே வருகிறது.**

**'விச்வம் விஷ்ணுர் வஷட்காரோ'** என்று ஆரம்பிக்கும் சஹஸ்ரநாமம், அந்த 'விச்வமஸி' என்ற காயத்ரியின் சத்தத்திலிருந்து வந்ததுதான்.

ஆகையினால் ஸர்வமாய், ஸமஸ்தமாய் விளங்கக் கூடிய காயத்ரியை, சஹஸ்ர நாமத்தின் முதல் இருபத்திநான்கு நாமாக்களிலே பீஷ்மாச்சார்யர் எடுத்துக் காட்டுகிறார். முதலில் நாம் அதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக எடுத்துக் காட்டுகிறார்.

இப்படியே எல்லா மந்திரங்களும் சஹஸ்ரநாமத்திலே வந்து விடுகின்றன. முதல் மூன்று சுலோகத்தைச் சொன்னாலே காயத்ரி வந்துவிடுகிறது. காயத்ரியிலே எல்லா வேதமந்திரங்களும் அடக்கம்.

காயத்ரி என்ன பண்ணுகிறாள், நித்யம் ஒவ்வொரு வேளையில், ஒவ்வொரு மந்திரத்தைச் சொல்லுகிறாள்.

ரிக் வேதத்தைப் பிராத: காலத்திலே சொல்கிறாள்;

யஜுர் வேதத்தை மத்தியானம் சொல்கிறாள்;

சாயங்கால வேளையில் ஸாம வேதத்தை அவள் சொல்கிறாள்.

இப்படியே நித்யம் ஓர் ஆவர்த்தி வேதம் மொத்தத்தையும் பாராயணம் பண்ணி விடுகிறாள் காயத்ரி தேவி! ஆனால் நமக்குச் சுலபமான வழியை அந்தத் தாயான காயத்ரி பண்ணியிருக்கிறாள். அவ்வளவு வேத மந்திரங்களையும் ஒரே நாளிலே நம்மால் சொல்ல முடியாதே என்பதற்காக, காயத்ரி மந்திரத்தை நாம் சொல்லிவிட்டோமானால், மொத்த வேத மந்திரங்களையும் பாராயணம் பண்ணிய பலன் நமக்கு ஏற்பட்டுப் போகிறது!

## நியூஸுக்கே நியூஸ்!

**தமிழ் உச்சரிப்பு சிறப்பாக இருப்பதாகப் பலராலும் பாராட்டப் பெறுகிற சன் டி.வி சுஜாதாபாபுவின் தாய்மொழி கன்னடம்.**



படங்கள்: ஸ்ரீஹரி

அப்படிப்பட்ட காயத்ரியைத்தான் நாம் முதலில் சொல்ல வேண்டும். காயத்ரியைச் சொன்ன பிற்பாடுதான், சஹஸ்ரநாமத்தைச் சொல்ல வேண்டும். சந்தியாவந்தனம் பண்ணி விட்டு, உடனே உட்கார்ந்து சஹஸ்ரநாமம் பாராயணம் பண்ண வேண்டும். அந்த காயத்ரியைச் சொல்லாமலேயே சுலபமாக இந்த மூன்று சுலோகங்களைச் சொல்லிவிடலாமா என்று கேட்கக் கூடாது! காயத்ரியினு டைய பெருமையைக் காட்ட வந்ததுதான் இந்த மூன்று சுலோகங்களும் என்பத னாலே, காயத்ரி ஜபம் பண்ணிவிட்டுத் தான், சஹஸ்ரநாமம் பாராயணம் பண்ண வேண்டும். இல்லையானால் தாயாரை மறந்து மற்றவர்களுக்கெல்லாம் உபகாரம் பண்ணுகிற மாதிரி ஆகும்.

வீட்டிலே அம்மா இருக்கிறாள். அம்மாவை விழுந்து நமஸ்கரிக்க மாட்டேன் என்கிறான் ஒரு பிள்ளை...! அப்படிப்பட்ட பிள்ளை, "நூற்றியெட்டு திவ்ய தேசங்களிலே இரண்டு இங்கே இல்லை... மீதி நூற்றியாறிலே இன்னும் நான்குதான் பாக்கி; மற்றது மொத்தத் தையும் நான் சேவித்துவிட்டு வந்து விட்டேன்... அந்த நாலையும் கூட கூடிய சீக்கிரத்தில் சேவித்துவிட்டு வந்து விடுவேன்... அதற்கு ஏற்பாடு பண்ணிக் கொண்டிருக்கிறேன்..." என்று சொன்னா னானால் எப்படியிருக்கும்! பிரத்யக்ஷ தேவதையாகத் தாயார் வீட்டில் இருக் கிறாள். அவளை வணங்க மாட்டேன் என்கிறான்!

அப்படிப்பட்டவன் திவ்ய தேசங்களுக் கெல்லாம் போய் சேவித்தால், அந்த தேவதைகளெல்லாம் அவனைத் திரும்பிப் பார்க்குமா?! அம்மாவை வணங்காதவன், ஆயிரம் தெய்வங்களை வணங்கியும் பிரயோஜனமில்லை. தாயாருக்கு ஒரு புடைவை வாங்கித் தராதவன், ஊராருக் கெல்லாம் வஸ்திர தானம் பண்ணுகிறான். தாயாருக்குச் சாதம் போட மாட்டேன் என்கிறான், அவன் நித்ய அன்னதானம் பண்ண, யாரோ சாப்பிட்டுவிட்டுப் போய்க் கொண்டிருக்கிறார்கள். செய்ய வேண்டிய கடமையைச் செய்யாமல், மற்றைய உயர்ந்த கர்மாக்கள் எத்தனை பண்ணினாலும் அதற்கெல்லாம் பலன் ஏற்படுமா!



## நியூஸுக்கே நியூஸ்!

**ரா**ஜ் டி.வி. நிர்மலா ராமன் டெக்ஸ்டைல் டிஸைனிங் பயின்றவர், 'நிம்மிஸ் பொட்டிக்' நடத்துகிறார்.

அப்படித்தான் சந்தியாவந்தனம் பண்ணாமல், காயத்ரியை ஜபிக்காமல், மற்றைய கர்மாக்கள் பண்ணினால் எந்த கர்மா பண்ணுவதற்கும் அவனுக்கு அதிகாரம் இல்லை என்கிறது சாஸ்திரம். அப்படிப்பட்ட சந்தியாவந்தனத்தைப் பண்ணிவிட்டு, பகவத் பந்ததியிலே உட்கார்ந்து இந்த சஹஸ்ரநாமத்தைச் சொன்னால், அந்த காயத்ரியுடைய முழு பலனை நாம் அடையலாம்.

அதனால்தான் பீஷ்மாச்சார்யார் சொன்னார், "எந்த இடத்திலே காயத்ரி ஜபிக்கப்படுகிறதோ, அந்த இடத்திலே துர்மரணம், அகால மரணம் என்பது இராது. பூரணமான ஆயுளோடு எல்லோ ரும் இருப்பார்கள்.

வேதமானது ஒருத்தரை ஆசிர்வாதம் பண்ணுகிறபோது, "பூரண ஆயுளோடு இவன் நூற்றியிருபது வயது இந்த பூலோ கத்திலே நன்றாக வாழ வேண்டும்" என்று ஆசிர்வாதம் பண்ணுகிறது. அப்படிப் பட்ட பூரணமான ஆயுளைக் கொடுக்கக் கூடியது காயத்ரி ஜபம். மரணத்தை அடையக் கூடியவனையும் பிழைப்பூட் டக் கூடியது. இப்படிப்பட்ட காயத்ரியில் சொல்லப்பட்ட இருபத்து நான்கு அக்ஷ ரங்களுடைய பிரபாவத்தை, சஹஸ்ர நாமத்தின் முதல் மூன்று சுலோகங்களில் உள்ள திருநாமங்கள் விவரிக்கின்றன.

(தொடரும்)

கல்கி வழங்கும்
# சென்னை ஸ்ஜேஜ்
கல்கி இதழுடன் இலவச இணைப்பு



8 பக்கங்கள்
19 டிசம்பர் 2004 இதழுடன் இலவச இணைப்பு



## குறையொன்றுமில்லை...

**என்**.டி.ஆர். திரையுலகிலிருந்து அரசியலுக்குப் போய் ஆந்திர முதல்வர் என்ற உச்சத்தை எட்டிய நேரம். திருப்பதிக்கு வந்திருந்தவரை பேட்டி காண்பதற்காக பல பத்திரிகைகளின் நிருபர்களும் முண்டியடித்துக் கொண்டிருக்க, கல்கி குழுவினரும் கூட காத்து நின்றிருந்தனர். முதல் அழைப்பு வந்தது கல்கிக்கு. இலேசான ஆச்சரியத் துடன் உள்ளே நுழைந்த கல்கி குழுவை வரவேற்றார் என்.டி.ஆர். வாழ்த்துகளை சொல்லி விட்டு, பேட்டி காண வந்திருப்பதைத் தெரிவித்ததும் அவர் சொன்ன வார்த்தைகள், கல்கி வரலாற்றில் கல்வெட்டாய் பொறிக்கப்பட்டவை.

"நான் சி.எம்.ஆயிட்டேன்னு பேட்டியெடுக்க வந்தீங்களா?" கேட்டு இலேசாகச் சிரிக்கிறார்.

"இங்க பாருங்க, இந்த என்.டி.ஆர். சாஸ்வதமில்லை. இந்த சி.எம். பதவியும் சாஸ்வதமில்லை. ஆனால், அதோ மலைமேலே நிக்கிற பாலாஜி சாஸ்வதம். அவரைத் தேடி வந்துகிட்டேயிருக்கிற ஜனங்க சாஸ்வதம்... அந்த பாலாஜியை தினம் காலையில் சுப்ரபாதம் பாடி எழுப்புற எம்.எஸ். அம்மாவோட குரல் சாஸ்வதம். அவங்க பத்திரிகையிலேருந்து வந்திருக்கிற உங்களுக்கு இல்லாத பேட்டியா? எனக்குத் தான் பெருமை. கேளுங்க... என்ன வேணா கேளுங்க..."



எத்தனை சத்தியமான வார்த்தைகள்! இசை உலகை ஆண்ட அவர் நினைவும் அவர் தேனும் குழலும் கலந்த குரலும் நம் உள்ளங்களில் சாஸ்வதமாக வாழும்.

- விஷ்வக்




**வ**ள்ளுவர் சிலை - மயிலாப்பூரின் மிக முக்கியமான லேண்ட் மார்க்குகளுள் ஒன்று. இதன் அருகில் இருப்பதோ பலரது கவனத்தையும் கவர்ந்த சமஸ்கிருதக் கல்லூரி. இந்தச் சிலை இங்கு வைக்கப்பட்டதற்கு பல்வேறு அரசியல் காரணங்கள் கடந்த காலங்களில் இருந்ததாகக் கூறப் பட்டாலும், இன்று இந்த சிலை, பாவம் - தனக்குக் கீழே நடக்கும் சில பல விரும்பத்தகாத சம்பவங்களால் தலைகுனிந்து... மன்னிக்கவும்... தலையை வேறுபக்கம் திருப்பிக் கொள்ளலாமா என்று யோசித்த வண்ணம் உள்ளது.

தற்போது வள்ளுவர் சிலை இருக்கும் இடம், சீட்டு விளையாடுபவர்களுக்கும், கோலி விளையாடி - துண்டு பீடி அடிப்பவர்களுக்கும் ஏற்ற நிழற்பாங்கான இடமாக இருக்கிறது பகல் நேரத்தில். ஆனால் இரவு ஏழு மணிக்கு மேலோ தள்ளுவண்டி உணவகங்களின் தற்காலிக டைனிங்ஹாலாக உருமாறி விடுகிறது. "அந்த இடத்திலேயே மதுபானத்தை அருந்திவிட்டு காலி பாட்டில்களைப் போடுவதும், அசைவ உணவுகளைச் சாப்பிட்டுவிட்டு, மீதமுள்ள கழிவுகளை அங்கேயே கொட்டி நாசப்படுத்துவதும் சகஜம்" என்கிறார் இப்பகுதிவாசி ஒருவர். மேலும் நள்ளிரவு நேரத்தில் பல்வேறு சமூக விரோத செயல்களும் அரங்கேறுவதாகவும் வேதனைப்படுகின்றனர் அப்பகுதி மக்கள்.

இதற்கெல்லாம் காரணம் அந்தச் சிலையைச் சுற்றியிருந்த சுவரின் ஒரு பகுதியானது முற்றிலுமாக இடிந்து விட்டதுதான் என்றாலும், அதை ஏன் மீண்டும் சீர் செய்யத் தேவையான நடவடிக்கையை அரசு எடுக்கவில்லை என்பதுதான் பலரது கேள்வி. உலகப் பொதுமறை தந்த வள்ளுவர் ரொம்பவும் பொறுமையானவர்தான் என்பதற்காக, அவரை இப்படியெல்லாமா சோதிப்பது..!

கலை

## கல்யாண சமையல் சாதம்...

**க**ல்யாண வீட்டு விருந்தாளிகளை உபசரிப்பது மிகப் பெரிய பொறுப்பு. காபி, டிபன், சாதம் என்று ஒவ்வொன்றாகப் பார்த்து பார்த்து குறை வைக்காமல் அவர்களை திருப்தி படுத்த வேண்டும். இதை சமாளிக்க ஒரு சுலப வழி இருக்கிறது. சுபம் கணேசன் கேட்டரிங் சர்வீஸிடம் முழு கேட்டரிங் பொறுப்பையும் கொடுத்து விட்டு அக்கடாவென அட்சதை எடுத்துக் கொண்டு ஒதுங்கி விடலாம்.

பஃபே சிஸ்டம், வாழை இலை உபசரிப்பு, நார்த் இண்டியன் வகைகள் இப்படி எது செய்ய வேண்டும் என்று சொல்லி விட்டால் போதும், அவர்களே பார்த்துக் கொள்வார்கள்...

சுபம் கணேசன் கேட்டரிங் சர்வீஸ், போன்: 24953709

## காதுகளுக்கு கொண்டாட்டம்

**தி**ருட்டு டேப், திருட்டு விசிடி இரண்டும் வேண்டாம். நிம்மதியாக வீட்டிலேயே படம் பார்க்க வேண்டும் என்று விரும்புபவர்களுக்கு இருக்கும் ஒரே வழி ஒரிஜினல் கம்பெனி சிடி வாங்குவதுதான். புதிய பழைய திரையிசைப் பாடல்கள், திரைப்படங்கள், எம்.பி.3 தொகுப்புகள் என்று உங்கள் சங்கீத ரசனைக்குத் திகட்ட திகட்ட தீனி போட தயாராக இருக்கிறது எல்லென் மியூசிக்கல்ஸ். குறிப்பாக, கர்னாடக சங்கீதம் தொடர்பான சிறப்பு தொகுப்புகள் இவர்களிடம் கிடைக்கின்றன. தூர்தர்ஷன் நடத்திய பல்வேறு இசைக் கச்சேரிகளின் இசை வடிவமும் இவற்றுள் அடங்கும். இனி என்ன உங்கள் காதுகளுக்கு குதூகல கொண்டாட்டம்தான்.

எல்லென் மியூசிக்கல்ஸ் போன்: 24327807, 24344831

## 'வாழும் கலை'



**ஆ**ர்ட் ஆஃப் லிவிங் எனப்படும் 'வாழும் கலை' பயிற்சியும் தரிசன க்ரியாவையும் உலகெங்கும் பரப்பிய பூஜ்ய ஸ்ரீஸ்ரீ ரவிசங்கர் அவர்கள் தற்பொழுது சென்னையில் தனது தெய்வீக அருளுரையை நிகழ்த்தியிருக்கிறார். டிசம்பர் 19ம் தேதி ஞாயிறன்று சென்னை பச்சையப்பன் கல்லூரியில் பூஜ்ய ஸ்ரீஸ்ரீ ரவிசங்கரின் அருளுரை மற்றும் சத்சங்கம் நடைபெறவுள்ளது. அடுத்தடுத்த தினங்களில் தஞ்சாவூர், ராமநாதபுரம், மதுரை, திண்டுக்கல் ஆகிய இடங்களில் தனது அருளுரையை நிகழ்த்தவிருக்கிறார்.



## இரும்பிலே கலை வண்ணம் கண்டார்!

**இ**ரும்பிலே கலை வண்ணம் பார்த்திருக்கிறீர்களா? இந்திரா பூஜா மெட்டல் ஸ்டோர்ஸிற்கு சென்றால் வித விதமான இரும்புக் கலைநயங்களைக் காணலாம். வீட்டு பூஜையறைகளில் வைக்கக்கூடிய குட்டி விக்கிரகங்கள் முதல் பெரிய சைஸ் கோயில் சிலைகள் வரை இங்கே கிடைக்கும். இரும்பு என்றாலே இறுக்கம்தான் என்ற அர்த்தத்தைத் தளர்த்தி அதனை வளைத்து நுண்ணிய வேலைப்பாடுகளை செய்வித்து அழகான சிற்பங்களாக வடிவமைத்திருக்கிறார்கள். இரும்பும் சிரித்தபடி ஒத்துழைத்திருக்கிறது. இவர்கள் ஸ்பெஷல் தயாரிப்பு பஞ்ச லோக சிலைகள். இந்திரா பிராஸ் பூஜா மெட்டல்ஸ், மைலாப்பூர், போன்: 52102464

# ஒரு காமதேனு



கலை அரங்குகளுக்குப் பஞ்சமில்லாத மயிலையில், திரை அரங்குகளுக்கு பஞ்சமோ பஞ்சம். இந்நிலையில் அரை நூற்றாண்டு திரையரங்குகளெல்லாம் இடிந்து போயும், திருமண மண்டபங்களாகவும் மாறிய சூழ்நிலையில், இன்னமும் தாக்குப் பிடித்துக் கொண்டிருக்கிறது லஸ் கார்னரிலுள்ள 'காமதேனு' திரையரங்கம்.

"ஒரு காலத்துல இந்த தியேட்டரே ஜெகஜ்ஜோதியாக இருந்தது. பழைய படங்கள் ஓடிய அளவிற்கு இன்று இதில் புதிய படங்கள் ஓடுவதில்லை. ஏஸி, டி.டி.எஸ். எந்த வசதியும் இல்லாததால், பலரும் மௌண்ட் ரோடிலுள்ள தேவி, சத்யம் அரங்குகளுக்குச் சென்று விடுகின்றனர்" என்று நம்மிடம் ஆதங்கப்பட்டார் பல வருடங்களாய் இங்கு படம் பார்த்து வரும் சுவாமிநாதன் என்கிற முதியவர்.



'மாமனுக்கு மயிலாப்பூரு தான்' என்றபடி, பல பாடல்களில் பெயர் ஒலித்தாலும் தமிழ் சினிமாவில் மயிலையை சரிவர சித்திரிப்பதில்லை. ஒரு வேடிக்கைப் பொருளாகவே வைத்திருக்கின்றனர் என்கிற குற்றச்சாட்டு இங்குள்ளவர்களுக்கு உண்டு.

தமிழ் சினிமாவைச் சேர்ந்த தயாரிப்பு நிறுவனங்கள் அனைத்துமே சூழலுக்கேற்ப சாலிகிராமம், வடபழனியில் குடியிருக்கும் பொழுது பாரம்பரியம் மிக்க கே.பி.யின் கவிதாலயா நிறுவனம் அமைந்திருப்பது மயிலை கற்பகாம்பாள் நகரில்.



✍ எழில்




'துவைச்சிக்கன்னா ஜெயிப்பீங்க' என்பது தான் இன்றைய பார் சோப் கம்பெனிகாரர்களின் வேண்டுகோளாக இருக்கிறது. இத்தனை நாட்களாக பவுடராய் இருந்த டைட் (Tide) சோப்புக் கட்டியாகவும் உருவெடுத்திருக்கிறது. இன்றைய தேதியில் இந்தியாவின் முன்னணி மாடலான மந்திரா பேடியைக் கொண்டு சோப்புப் போடுகிறார்கள், ஸாரி, விளம்பரம் செய்கிறார்கள்.

டெல்லி பெண்: படங்களில் நடிப்பதை விட விளம்பரங்களுக்கு அதிமுக்கியத்துவம் தருகிறார் மந்திரா.

✍ பப்பி

# கிழக்கில் தோன்றும் புத்தகங்கள்!




புதுமைப்பித்தன், ந.பிச்சமூர்த்தி, கு.ப.ரா. இவர்கள் எல்லாம் கதைகள் எழுதினார்கள் என்பதை தவிர, இவர்களைப் பற்றி நமக்கு வேறென்ன தெரியும்? நாம் தலை மேல் தூக்கி வைத்துக் கொண்டு கொண்டாடும் பாரதியின் வாழ்க்கையைப் பற்றி, அவர் மனைவி செல்லம்மாள் எழுதியதைத் தவிர புதிதாக வேறென்ன தகவல்கள் நம்மிடம் இருக்கின்றன?

இலக்கியத்தை விட்டுத் தள்ளுங்கள். பங்குச் சந்தையைப் பற்றி இன்று ஏதாவது ஒரு புத்தகமாவது தமிழில் இருக்கிறதா? சசின் டெண்டுல்கரின் மனைவி, சசினை விட மூத்தவர் என்பதைத் தவிர அவரைப் பற்றி தெரிந்து கொள்ள வாய்ப்புகள் இருக்கிறதா?

நமக்குத் தெரியாத சங்கதிகள் இது போல் இன்னமும் எவ்வளவோ இருக்க, பல பதிப்பகங்கள் மரகதக் கற்களின் மகிமைகளைப் பற்றியும், எண் சோதிட நுணுக்கங்களைப் பற்றியும், ஒருவரது பெயரை மாற்றுவதன் மூலம், அவரது தலையெழுத்தை எவ்வாறு மாற்றலாம் என்பதைப் பற்றியும் குவியல் குவியலாக புத்தகங்களை அச்சிட்ட வண்ணம் உள்ளன.

நல்லவேளையாக மயிலையிலுள்ள கிழக்கு பதிப்பகம் இவர்களிடமிருந்து விலகி, அரசியல், அம்பானி, வரலாறு, வீரப்பன் என்று இதுவரை யாரும் அச்சில் கொண்டு வராத சங்கதிகளைத் தேடிப்பிடித்து, அவற்றைச் சிறப்பான முறையில் வெளியிட்டு சாதனை படைத்து வருகிறது.

"பல அடிப்படைப் புத்தகங்கள் இது வரை தமிழில் எழுதப்படவில்லை. இந்த நிலையை நாங்கள் மாற்றிக் காட்டுவோம்" என்கிறார் இப்பதிப்பகத்தின் நிறுவனர் பத்ரி சேஷாத்ரி.

இன்றைய பரபரப்பான சூழலில் அரசியல், வணிகம், வரலாறு தொடர்பான புத்தகங்கள் எங்கே விற்பனையாகப் போகிறது என்று அங்கலாய்த்துக் கொள்பவர்களுக்கு ஒரு சிறு செய்தி - பா. ராகவனின் 'டாலர் தேசம்' முதல் பதிப்பு விற்றுத் தீர்ந்து, இரண்டாவது பதிப்பு கடகட அச்சாகிக் கொண்டிருக்கிறது. அதே போல் இவரது 9/11 பற்றிய புத்தகமும், பாகிஸ்தானின் வரலாற்றை மையமாகக் கொண்ட மற்றொரு புத்தகமும், வாசிப்பாளர்களிடையே சிறந்த வரவேற்பைப் பெற்று வருகின்றன.

"முதன் முறையாக ஆதவனின் படைப்புகளுக்கான உரிமங்களை நாங்கள் வாங்கியிருக்கிறோம். அதைப் போல் அசோகமித்திரனின் தொகுக்கப்பட்ட எழுத்துகளும் விரைவில் வெளிவரப் போகிறது" என்கிறார் பா.ராகவன்.

கிழக்கு பதிப்பகத்தின் வெற்றிக்கு என்ன காரணம் என்று, ஒரு புத்தகத்தைப் புரட்டினாலே தெரிந்து விடும். தரமான வடிவமைப்பு, பால் வெள்ளைக் காகிதங்கள், பிழையற்ற பதிப்பு, தேர்ந்த அனுபவமிக்க எழுத்தாளர்களின் படைப்புகள் -- இவையனைத்தும் கையைக் கடிக்காத விலையில். வேறென்ன வேண்டும் புத்தகப் பிரியர்களுக்கு? மற்றொரு மகிழ்ச்சியான தகவல். விரைவில் ஒரு மிகப் பெரிய புத்தகக் கண்காட்சியை மயிலாப்பூரில் இவர்கள் அமைக்க இருக்கிறார்கள்.

✍ மருதன்



# மயிலை மாங்கொல்லை

**ஆர்.எம். வீரப்பன் (எம்.ஜி.ஆர் கழகம்)**

தமிழக அளவில் மட்டுமல்லாமல் தேசிய அளவிலும் ஏற்பட்ட பல்வேறு அரசியல் திருப்பங்களில், மயிலை மாங்கொல்லைக்கு மிகப் பெரிய பங்கு உண்டு. உடனடியாக என் நினைவுக்கு வருவது 1988-ல் அதிமுக இரண்டாகப் பிளவு பட்ட பின்னர் எங்கள் சார்பாக (ஜானகி அணி) ஒரு மாபெரும் பொதுக்கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டு, அதில் ஜானகி எம்.ஜி.ஆர் உரையாற்றினார்கள். அதற்கு முந்தைய நாள்தான் ரஜினிகாந்த் நடித்த 'ஊர்க் காவலன்' படத்திற்கான 100-ஆவது நாள் விழாவில், ரஜினிகாந்த் ஜானகி எம்.ஜி.ஆருக்கு ஆதரவாகப் பேசியிருந்தார். ஆகவே அக் கூட்டம் மிகப் பெரிய அளவில் எதிர்பார்க்கப்பட்ட கூட்டம். அக் கூட்டம் முடிந்த நான்கு நாட்களுக்குள் ஆட்சியே டிஸ்மிஸ் ஆகி விட்டது. ஒரு சவால் நிறைந்த காலகட்டத்தில் நடத்தப்பட்ட மாபெரும் கூட்டம், கூட்டப்பட்ட இடம் என்பதால் மயிலை மாங்கொல்லை என் அரசியல் வாழ்க்கையில் மறக்க முடியாத இடம்.

✍ முத்து







அறுசுவை அரசு என்றால் நளபாக பிரியர்களுக்கு தெரியாமல் இருக்காது. பல மாமாங்கமாய் கேட்டரிங் கலையில் தனக்கென தனி முத்திரை பதித்த அரசு, தற்பொழுது தன்னால் ஹோட்டல்களையும் நடத்த முடியும் என்று இத்துறையில் குதித்துள்ளார்.

புரசை, அண்ணாசாலை, மாயாஜால் அடுத்ததாக மயிலையிலும் புதிய கிளை சமீபத்தில் தொடங்கப்பட்டுள்ளது. உங்கள் ஹோட்டலின் சிறம்பம்சம் என்ன என்று இதன் கிளையை நிர்வகித்து வரும் செளம்யாவிடம் கேட்டபொழுது:

"எங்கும் கிடைக்காத பிடி கொழுக்கட்டையை எங்கள் ஹோட்டலில் காணலாம். இதே போல் அமாவாசையன்று பிராமணர் வழக்கப்படி வெங்காயமில்லாத உணவு வழங்குவோம்" என்றார். டிசம்பர் சீசன் வந்தாலே செவிக்குணவு கிடைத்த திருப்தியோடு 'அறுசுவை' உணவும் வேண்டும் என்பதால் வரும் டிசம்பர் 15ம் தேதி முதல் மிஜூசிக் ஸ்பெஷல் லஞ்ச்' வழங்கவிருக்கிறார்களாம். என்ன வாழை இலையில் ரசம், பாயசத்திற்கு பதில் தேனாறு பாயவிடுவார்களா என்று யோசிக்க வேண்டாம். அதற்கு மட்டும் கறி, கூட்டு வகைகள் டபுளாக இருக்குமாம். கபாலீஸ்வரர் கோவிலைச் சுற்றி பிணைந்துள்ள ஏராளமான ஹோட்டல்களுக்கு மத்தியில் நானும் ரெடி என்று வடக்குமாட வீதியில் தோன்றியிருக்கிறது இந்த உணவகம்.

✍ எழில்




**Dr.ராமகிருஷ்ணர்**

ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் பிரதான பணிகளுள் ஒன்று மருத்துவம். இங்கு வரும் நோயாளிகளுக்கு ஆங்கில ஓமியோபதி முறைகளில் இருதய நோய், காச நோய் உள்ளிட்ட பல்வேறு சிக்கலான நோய்களுக்கு சிகிச்சை அளிக்கப்பட்டு வருகிறது. இதற்கென தேவைப்படும் இ.சி.ஜி., யு.ஜி.இ. எண்டோஸ்கோப் உள்ளிட்ட அனைத்து நவீன உபகரணங்களும் இவர்களிடம் உள்ளன. இத்தனை வசதி, வாய்ப்புகள் இருந்தாலும் எங்கள் நோயை தீர்ப்பதென்னவோ இங்குள்ள மருத்துவர்கள் மற்றும் பணியாளர்களின் புன்னகையும் கனிவும்தான் என்கின்றனர் இங்கு வரும் மக்கள். இங்கு வருபவர்களுள் 90% சாதாரண குடிமக்களே!

✍ கலை

# மயிலை F.I.R.

நம்ம சாந்தோம் சர்ச்சுக்கு மிகப் பெரிய பெருமை ஒன்னு இருக்கு தெரியுமா..? - இயேசுவின் சீடர்கள் 12 பேர்ல, இரண்டே பேருக்குத்தான் கல்லறை ஆலயங்கள் இருக்குதாம். அதுல ஒன்னு ரோம்ல இருக்கு. இன்
[redacted]
சொல்லாதீங்க - அது எங்களது மயிலாப்பூர்லயே இருக்குற சாந்தோம் சர்ச்சுதான். செயின்ட் தாமஸ் மயிலாப்பூர்ல வாழ்ந்தப்போ கட்டின சின்ன ஆலயம்தான் இப்போ பழமை மாறாம புதுப்பிக்கப்பட்டிருக்கு.

இந்த சர்ச்சுக்கு இப்போ புதுசா ஒரு மினி ஆடிட்டோரியமும், மியூஸியமும் கட்டியிருக்காங்க. இந்த ஆடிட்டோரியத்துல செயின்ட் தாமஸ் பற்றிய குறும்படத்தை காட்டப் போறாங்களாம். மியூஸியத்துல அவர் தொடர்பான பல்வேறு பொருட்கள் காட்சிக்கு வைத்துள்ளார்களாம். இந்த ரெண்டு இடத்தையுமே சுத்திப்பார்த்தேன். ரொம்ப அமைதியா இருந்துச்சு.

இனிமையான தென்றல் ரம்மியமான சூழ்நிலை இரண்டும் ஒருங்கே அமைந்த பூங்காக்களில் மயிலை நாகேஸ்வரராவ் பூங்காவும் ஒன்று. அதன் காரணமாகவே சென்னையில் வசிக்கும் (மயிலாப்பூருக்கு வெளியே) பெரும்பாலானோர் இந்தப் பூங்காவிற்குள் ஒருமுறையாவது 'வாக்' செய்துவிட வேண்டும் என்று ஆர்வத்துடன் வந்து, பின்னர் இதன் சிறப்பம்சங்களால் கவரப்பட்டு, ரெகுலராக வரத்துவங்கி விடுவார்களாம். இன்னும் சொல்லப் போனால் வளரும் அரசியல்வாதிகள் இங்கு வந்து 'வாக்' செய்தால், தாங்களும் மிகப் பெரிய அரசியல் தலைவராகி விடலாமோ என்ற நப்பாசையில் வருவார்களாம். அந்த அளவிற்கு அரசியலில் வெற்றிக் கொடி நாட்டிய பலர் இந்த பூங்காவின் ரெகுலர் விசிட்டர்கள். ஒரேயொரு குறை - பூங்காவிற்கான நீச்சல் குளத்தில் இருக்கும் தண்ணீர் அசுத்தமாக இருக்கின்றது. ஆனால் அதில் விருப்பத்துடன் குளிப்பவர்களோ சிறுவர்-சிறுமியர். ஆகவே இதை உடனடியாக கவனித்து சீர்படுத்தினால் இங்க வந்து வந்து குளிக்க சான்ஸ் லோ இருக்கு! அதனால குயிக்!

✍ முராரி

ஸ்ரீ ராஜன்



Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered
No. TN / PMG (CCR) 572 / 03 - 05* Licensed to post without prepayment under
PMG's Licence No. WPP 358 / 03 - 05 * Registered as a Newspaper in Srilanka